5-6

# விளக்கு



அருள் மொழி
அரசு
திருமுருக

## கிருபானந்தவாரியார்

*தமிழ்ப் பண்ணை*
சென்னை-17.

1971 — 5/00

5-6

# பதிப்புரை

ஒளி மிகுந்த எதிர் காலத்தை நோக்கி ஓடிக்கொண்டிருக்கும் தமிழகத்து மக்களின் மன இருளை நீக்குவதற்கென்று ஏற்பட்டது இந்த விளக்கு! அறிவுப் பசியோடு தளிர்த்து வரும் ஆண்மை மிக்க வருங்கால சமுதாயத்தின் குழுக்கென்றே ஏற்றப் பட்டது இந்த நூல்! மன இருளை அகற்றி அறிவு ஒளியைப் பாய்ச்சுகின்றார் திருமுருக கிருபானந்தவாரியார். அவர் தந்துள்ள கட்டுரைகள் அத்துணையும் தேன் துளிகள்.

தமிழர்களின் தவப்பயனால் வந்துதித்து, எழுத்தாலும், பேச்சாலும், தனக்கென ஒரு தனித் தன்மையை உருவாக்கிப் பீடு நடை போடும் திருமுருக கிருபானந்தவாரியார் அவர்களின் அறிவுரைத் திரட்டுத் தான் இந்தத் தொகுப்பு!

ஆய்ந்துணர்ந்தறியும் அறிவு மேதையின் மன ஊற்றினின்று பெருக்கெடுத்து ஓடிவரும் செங்கரும்புச் சாறு தான் இந்த அறிவு அமுதம்!

இந்தக் கட்டுரைகள் மனித உள்ளங்களின் மயக்கத்தைப் போக்கிப் புத்துணர்ச்சி ஊட்டும் என்பது நான் சொல்லித் தெரிய வேண்டியது இல்லை! வாரியார் அவர்களின் வாய் மொழிகள், கைவண்ணத்தால் மின்னும் ஒளிச் சிதறல்கள்; அத்துணையும் முத்துக்கள்!

சிதறியிருந்த ஒளிச் சிதறல்களை ஒரே இடத்தில் பரப்பி ஒளிக் காட்டுவது போல, பல கட்டுரைகளை ஒன்று சேர்த்து ஒளி பரப்பியுள்ளோம்.

வாழ்க வாரியார் அவர்கள்!

வளர்க அவரது தொண்டு!!

சி. அ. கருணாநிதி
தமிழ்ப்பண்ணை

# விளக்கு

மனிதனுக்குத் துன்பஞ் செய்கின்றவை பல. அவற்றுள் இருள் ஒன்று. இருளில் கட்டையா? கள்வனா? காலில் பட்டது சந்தனமா? சாணமா? அரவமா? கயிறா? என்று அறிந்துகொள்ள முடியாது.

இருளில் ஒரு வேலையுஞ்செய்ய முடியாது; நடமாடவும் முடியாது. இரவில் நமது வீடுகளில் திடீர் என்று மின்சார விளக்குகள் அணைந்துவிட்டால் அப்படியே அத்தனை பேரும் அசைவற்று நிற்க நேர்கின்றது.

விளக்கு நமக்கு எத்துணை வண்ணமாக உதவி செய்கின்றது என்பதை நாம் அது இல்லாதபோது தான் உணர முடியும். தாய் எப்படி எப்படி நம்மை வளர்க்கின்றாள் என்பதைத் தாய் இல்லாதபோது தானே உணர முடிகின்றது.

ஒரு வீட்டில் விளக்கெரிந்தால் அந்த வீடு மங்களகரமாக இருக்கும். விளக்கின்றி இருள் சூழ்ந்த வீடு பேய் நடமாடும் பாழ் நிலம்போல் இருக்கும்.

பொருள்களை விளக்குகின்ற விளக்குகள் நான்கு எனவுணருக. சூரியன், சந்திரன், அக்கினி, ஓசை என்ற நான்குமாகும். பகலிலே பொருள்களை விளக்குவது கதிர். இரவிலே பொருள்களை விளக்குவது

மதியுங் கனலும். இந்த மூன்றும் இல்லாதபோது ஓசை நமக்குப் பொருள்களை விளக்கும்.

இரவிலே ஒரு காட்டில் இருளில் வழியுங் குழியுந் தெரியாது ஒருவன் நின்று திகைக்கிருன். அப்போது ஒருபுறத்தில் நாய் குரைத்தது. அந்த ஒலியைக்கொண்டு அங்கு மக்கள் வாழவேண்டும் என்று தெரிந்து ஒலி வந்த வழியே போவான். அன்றியும் தவளைகள் கரகர என்று கத்தின ஒலியைக் கேட்டான். அங்கு நீர் நிலையென்று அறிகிருன். ஆகவே, கதிர், மதி, விளக்கு என்ற மூன்றும் இல்லாதபோது ஓசை நமக்கு உதவுகின்றது.

வீட்டிலேயுங்கூட இருளில் அசைவற்று திகைக்கின்றபோது அங்கு யாராவது பேசினுல் அந்தக் குரலோசையைக் கண்டு இன்னுர் என்று விளங்கிக் கொள்கின்ருேம் அல்லவா? எனவே சொல்லே ஒரு விளக்கு ஆகும்.

"இல்லக விளக்கது இருள் கொடுப்பது
சொல்லக விளக்கது சோதியுள்ளது"

என்ருர் அப்பரடிகள்.

சொல்லே விளக்காகத் தோன்றியருளிய ஒரு வரலாறும் உண்டு.

நாராயணமூர்த்தியை மனமொழி மெய்களால் வழிபட்டு மகிழ்கின்றவர்களாக விளங்கிய ஆழ்வார்கள் மூவர்கள்; முதலாழ்வார்கள் எனப்படுவார்கள்.

பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் என்ற நாமங்களை யுடையவர்கள்.

நடுநாட்டில் திருக்கோவலூர் என்ற ஒரு திருத் தலம் உண்டு. காரி முதலிய மன்னர்கள் இருந்து அரசுபுரிந்த திருநகரம்.

அத்தலத்திலே எழுந்தருளியுள்ள திருமாலைச் சேவிக்கும் பொருட்டுப் பொய்கையாழ்வார் சென்றார். திருக்கோயிலிலே நெடுநேரம் இறைவனை வணங்கி விட்டு ஒரு சிறு இடத்தில் சென்று படுத்துறங்கி விட்டார்.

நடு இரவு. குளிர் காலம்; சிறு தூறல். வாடை வீசி உயிர்களை நடுக்கிக்கொண்டிருந்தது. பூதத் தாழ்வார் என்ற பெரியவர் அங்கு வந்து மெல்ல ஒதுங்கினார். படுத்திருந்த பொய்கையாழ்வார் பளிச் சென்று எழுந்து இந்த இடம் ஒருவர் படுக்கவும், இருவர் இருக்கவும் ஆகும் என்று கூறி, அவரை யருகில் இருக்கச் செய்து தானும் இருந்தார்.

சிறிது நேரத்திற்குப்பின் அங்கு பேயாழ்வார் வந்தார். அமர்ந்திருந்த இருவரும் உடனே எழுந்து, "இங்கு ஒருவர் படுக்கலாம்; இருவர் இருக்கலாம்; மூவர் நிற்கலாம்" என்று கூறி, நின்று கொண் டார்கள்.

அச்சிறு இடத்தில் மூவரும் நெருங்கி நின்றார் கள். ஒரே அமைதி.

சிறிது நேரத்திற்குப்பின் கன்னங்கரேல் என்று ஒருவர் மொழுமொழு என்ற உடம்புடன் வந்து அவர்களை நெருங்கிக்கொண்டு உட்புகுந்தார்.

அந்த இடம் மிக நெருக்கமான சிறு இடம். ஒரு வர் மட்டும் படுக்கவும், இருவர் மட்டும் இருக்கவும்,

மூவர் மட்டுமே நிற்கவும் முடியும். இப்போது நான் காவது ஒரு பேர்வழி வந்து நுழைந்து, நெருக்கத் தொடங்கினர்.

மூவரும் திக்குமுக்காடிவிட்டார்கள். மூச்சுத் திணறியது.

"ஐயா! நீர் யார்?" என்று கேட்டார்கள்.

பதில் இல்லை.

"ஐயா! தங்களை யார் என்று அறிய விரும்புகின்றோம்."

ஒரே அமைதி. மௌனம் நிலவியது.

விளக்கில்லாமல் எப்படி அவரை இன்னார் என்று அறிய முடியும்?

உடனே பொய்கையாழ்வார் மொழி விளக்கு ஏற்றுகின்றார்.

அது சிறு விளக்கா? உலகில் உள்ள எல்லா விளக்குகட்கும் பெரிய விளக்கு; ஐந்து கண்டங்கட்கும் ஒளிதரக்கூடிய அத்துணைப் பெரிய விளக்கு.

அந்த விளக்குக்கு நெய் ஒருபடி இருபடி விட்டால் கட்டுமா?

இந்தப் பூமியே-அகல்; கடலே-நெய்; மேருகிரி-திரி; சூரியனே-விளக்கு.

வையந் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்ய சுடரே விளக்காக—செய்ய
சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொல்மாலை
இடராழி நீங்கவே என்று

என்று பாடினர் பொய்கையாழ்வார்.

அடுத்தபடி, பூதத்தாழ்வார் உள்ளத்தில் ஒரு விளக்கு ஏற்றுவாராயினர்.

அதற்கு, அன்பு—அகல்; ஆர்வம்—நெய்; எண்ணம்—திரி; ஞானமே—விளக்கு.

அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா—நன்புருகி
ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்

இவர்கள் இருவரும் பாடியபின் ஒரு சோதி விளக்கு தோன்றியது. அவ்வொளியில் தம்மை நெருக்கியது யார் என்று மூவரும் பார்த்தார்கள். அவர் திருவுருவம் நன்கு தெரிகின்றது.

உடனே பாடுகிருர் பேயாழ்வார்.

திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
அருக்கண் அணிநிறமும் கண்டேன்—செருக்கிளரு
பொன்ஞழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்
என்ஞழி வண்ணன்பால் இன்று

'இறைவனை யார் கண்டவர்?' என்று சிலர் கேட்கின்ருர்கள்.

'கண்டேன் கண்டேன்' என்று கூறுகின்ருர் பேயாழ்வார்.

ஆ! ஆ! என்ன அழகு? இதோ எங்களை நெருக்கியது எம்பெருமாஞ?

திருமார்பில் திகழ்கின்ற திருமகளைக் கண்டேன்; அழகிய திருமேனியைக் கண்டேன். விளங்குகின்ற கதிரவன் ஒளிபோன்ற அழகிய வடிவத்தைக் கண்

டேன். போரில் திகழ்கின்ற அழகிய சக்ராயுதத்தைக் கண்டேன். மற்ருெரு கையில் அன்புள்ள பாஞ்சஜன்யம் என்ற சங்கையுங் கண்டேன். கடல் வண்ணனும் எம் கடவுள்பால் இன்று இத்தனையுங் கண்டேன்'' என்கின்ருர்.

எனவே, இதனை மொழி விளக்கு என உணர்க.

பாரதம் பாடிய வில்லிபுத்தூராரின் திருமைந்தர் வரந்தருவார் பாடுகின்ருர்.

பாவரு தமிழால் பேர்பெறு பனுவல் பாவலர் பாதிநா ளிரவில்
மூவரும் நெருக்கி மொழிவிளக்கேற்றி முகுந்தனைத் தொழுத நன்னுடு.
தேவரு மறையும் இன்னமுங் காணுச் செஞ்சடைக் கடவுளைப் பாடி
ஏவரும் மதித்தோர் மூவரில் இருவர் பிறந்தநா டிந்தநன்னுடு.

அகிலவுலகங்களுக்கும் விளக்காக நின்று எல்லா வற்றையும் விளக்குகின்றவர் சிவபெருமான். அதனுல் அவரை விளக்கென்றே கூறுகின்ருர் மணிவாசகர்.

"சோதியே சுடரே சூழொளி விளக்கே"

அது "தூண்டா விளக்கு"

"மாணிக்க மணி விளக்கு".

# ஒரு புரட்சி

உலகிலே உயிர்கள் எல்லாவற்றுக்குந் தாயுந் தந்தையும் உண்டு. இதை மறுக்கும் சமயமோ, மதமோ, நாடோ, தேசமோ கிடையா.

இறைவனை அம்மையப்பனாக உணர்ந்தது சைவ சமயம். நமக்கு அம்மை வேறு; அப்பன் வேறு. இறைவன் அம்மையப்பனாகக் காட்சி தருகின்றான்.

இதனால் எல்லாப் பெரியோர்களும் இறைவனைத் துதிக்கின்றபோது அம்மையை முதலாக வைத்துத் தோத்திரம் புரிவார்கள். ஏன் எனில் பிறந்து விழித்தவுடன் தாய்தானே காட்சியளிக்கின்றாள்.

தாய் காட்டினால்தான் தந்தை தெரியும். மாணிக்கவாசகர், "அம்மையே அப்பா ஒப்பிலா மாமணியே" என்கின்றார்.

திருஞானசம்பந்தர், "அம்மையே அப்பா" என்றழைத்தருளி அருளினார்.

இராமலிங்கர், "அம்மையப்பா இனியாற்றேன்" என்கின்றார்.

ஔவையாருங்கூட "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்றார்;

"மாத்ரு தேவோபவ
பித்ரு தேவோபவ"

என்ற மந்திரங்களாலும் அறிக.

எனவே அம்மையப்பன் என்றே அழைக்கும் மரபு நெடுங்காலமாக வுண்டு.

அப்பர் பெருமான் மட்டும் ஒரு புரட்சி செய் தருளினர். இறைவனைத் துதிக்க வந்தபோது, "அம்மைநீ அப்பனீ" என்று பாடாமல்,

"அப்பனீ அம்மைநீ ஐயனுநீ"

என்று பாடியருளினர்.

தூலமாக நோக்கினுல் உயிர்கட்குத் தாய்தான் முதல் உறவு என்று தோன்றும். சூக்குமமாக நோக்கினுல் தந்தைதான் முதல் உறவு.

உயிர் உடம்பை விட்டு நீங்கியபின் இரண்டு வழியாகச் செல்கின்றது. ஒன்று ஒளிவழி. ஒன்று இருள் வழி. அர்ச்சாதி மார்க்கம், தூமாதி மார்க்கம் என்று வடநூலார் கூறுவர்.

அர்ச்சஸ்—ஒளி. தூமம்—புகை.

புண்ணியம் புரிந்த உயிர் ஒளி வழியாகச் சென்று புண்ணிய லோகம் புகுந்து இன்பத்தை நுகரும்; பாவம் புரிந்த உயிர் இருள் வழியாகச் சென்று நரக வுலகில் துன்பத்தை நுகரும். சுவர்க்க மும் நரகமும் உண்டு என்பதைத் திருவள்ளுவர் ஒரே திருக்குறளில் கூறுகின்ருர்.

அருள்சேர்ந்த நெஞ்சினர்க் கில்லை இருள்சேர்ந்த
இன்னு வுலகம் புகல்.

அருள் நிறைந்த உள்ளத்தார் இருள் நிறைந்த உலகம் புகமாட்டார் என்றபடியால், அருத்தாபத்தி நியாயமாக அருள் நிறைந்த உள்ளத்தார் ஒளி நிறைந்த இன்ப உலகம் புகுவார் என்பது பெறப் படும்.

எனவே இன்ப உலகம் துன்ப உலகம் உண்டு என்று வள்ளுவர் வாக்கினுல் உறுதிப்படுகின்றது. அறிஞர்கள் சுவர்க்கம் நரகம் உளவோ என்று ஐயுறு தல் கூடாது.

சுவர்க்க உலகில் இன்ப நுகர்ச்சியும், நிரயத் திலே துன்ப நுகர்ச்சியும் துய்த்து முடிந்தபின், அவ் வுயிர் விண்ணினின்றும் மழை வழியாக மண் ணுலகத்திற்கு வரும். வந்து நீரிலே, காய்கனி தானி யங்களிலே சேரும். அது ஆணிடத்திலே சேர்ந்து அறுபது நாள் கருவிருந்த பின், பெண்ணிடத்திலே சேர்கின்றது. ஆகவே ஒவ்வொரு உயிரும், தந்தை யிடம் கருவிருந்த பின்னர் தாயிடம் சேர்கின்றது. இதனுல் ஒவ்வொருவரும் பேருக்குமுன் தந்தை யின் பெயரின் முதலெழுத்தை வைத்து எழுதுவர். இது யாவரும் ஒப்புக் கொள்ளவேண்டிய—மறுக்க முடியாதவுண்மையாதலின் எந்தப் பெண்மணியும் இது பற்றி வாதிப்பதில்லை.

மகனே! நான்தான் பத்துமாதம் சுமந்து பெற் றேன்; பால் கொடுத்தேன், வளர்த்தேன். என் பேரை முதலில் அமைக்காமல் சும்மாவிருந்த உன் அப்பன் பேரை அமைக்கின்றனையே? இது முறையா? தருமமா? நீதியா? நெறியா? போகட்டும்.

உன் அப்பன் பேர் பாண்டுரங்கம். என்பேர் விசாலாட்சி. அப்பன் பேரில் முதல் எழுத்து "பா"; என் பேரில் முதல் எழுத்து "வி"! இரண்டு எழுத்தையும் சேர்த்து "பாவி" என்று அமைத்துக் கொள் என்று எந்தப் பெண்ணாவது வழக்குத் தொடுத்திருக்கின்றாளா? இல்லை. ஏன்? உயிர் கணவன்பால் இருந்து வந்தபடியால் பிதாவின் பேரை அமைப்பதுவே முறையென்று அறிந்துள்ளனர். ஆனபடியால் எல்லா உயிர்களும் தந்தையிடத்தில் தங்கிய பின்னர் தாயிடம் வருகின்றன. இந்த உயர்ந்த உண்மையை உலகம் உணரும்பொருட்டு அப்பர் அடிகள்,

"அப்பனீ அம்மைநீ" என்று கூறினர் என வுணர்க.

நமது உடம்பைப் பெற்றெடுத்த அப்பனுக்கும் ஆண்டவனே அப்பன் ஆதலால், "ஐயனு நீ" என்று அருளிச் செய்தார்.

மற்றொரு அரிய கருத்து:

"அன்புடைய மாமனும் மாமியுநீ"

இது ஒரு புரட்சி.

இறைவனை 'அப்பன் நீ!' என்றார். மறுபடியும் 'மாமன் நீ' என்கின்றார். மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் இது முரண்போல் தோன்றும். ஆழமாகச் சிந்தித்தாலன்றி விளங்காது.

இதை நவில்பவர் நாவுக்கரசர். சிவானுபூதிச் செல்வர். அவருக்கு அனுபவ அறிவு நிறைந்துளது. நமக்கு நூலறிவு. அவருக்கு வாலறிவு.

'அப்பனே மாமனாராக எப்படி அமையமுடியும்?' என்ற ஒரு வினா எழும்.

தந்தையே மாமனாராக வர முடியுமா! தந்தை முறைக்கும் மாமனார் முறைக்கும் நிரம்ப வேறுபாடு உளதே. பெண் தந்தவன்தானே மாமன். பெற்றவன் மாமனாக முடியாதே என்றெல்லாந் தோன்றும்.

தந்தை தான் தேடிய பொன், பொருள், வீடு, நிலம், புலம் யாவும் ஓரளவு மகன் நுகர இசைந்தாலும் முற்றிலும் தர இசையான். தான் உள்ள வரை அதிகாரம் தன்பாலிருக்க வேண்டும். தான் மறைந்த பிறகு மகனுக்குச் சேரட்டும் என்று நினைப்பான். இதுதான் உலக இயல்பு.

மாமனார் தான் தவம் புரிந்து பெற்ற பெண் மணியை அவளுக்குரிய ஆடை அணிகலன்கள் யாவும் மருமகன் அனுபவிக்கக் கண்டு மகிழ்கின்றார்.

அதுபோல் மண், விண், தென்றல், காய், கனி, தானியம், பால், தேன், பொன், மணி, கடல், கதிர், மதி யாவும் இறைவன் பெற்றவை. இவைகளை யெல்லாம் நாம் அநுபவிக்க இறைவன் மகிழ் கின்றார். இறைவன் பெற்ற கடற்கரையில் நாம் அமர்ந்து, குளிர்ந்த காற்றை நுகர்கின்றோம். இறைவன் பெற்ற தண்ணிலாவில் நாம் அமர்ந்து இன்புறுகின்றோம். இறைவன் படைத்த பொருள் களையெல்லாம் உயிர்கள் அனுபவித்து இன்புறக் கண்டு இறைவன் மகிழ்கின்றான். அதனால்

"அன்புடைய மாமனும் மாமியு நீ" என்று அழகாகக் கூறியருளினர்.

இங்கேயும் மாமனை முதல் வைத்து மாமியைப் பின்னே அமைத்த அழகைச் சிந்தியுங்கள்.

பிள்ளையைப் பெற்றவர்கள் தங்கள் பிள்ளை மருமகளுடன் மிக்க அன்பாக மருவி மகிழ்வதைக் கண்டு நிறைவு பெறுவதில்லை. குறையும் படுவார் கள். மாமன் மாமி தன் மகளுடன் மருமகன் மிக்க அன்பாக மருவி மகிழ்வதைக் கண்டு எல்லையில்லாத நிறைவு பெறுவார்கள். அதனுல்தான் "அன்புடைய" என்ற சொல்லினை 'அப்பனீ அம்மைநீ; என்ற இடத்தில் கூருமல், மாமன் மாமிக்கு அடையாக்கி, "அன்புடைய மாமனும் மாமியும் நீ" என்று கூறி யருளிய திறனைச் சிந்தித்தால் அப்பர் பெருமா னுடைய நுண்ணுணர்வு எத்துணை விழுமியது என்று புலப்படும்.

சிலர் ஆண் பிறப்பு உயர்வுடையது என்றும், பெண் ஆணுக்கு அடிமையென்றும் கூறுவர். நம் முகத்தில் வலக் கண் உயர்ந்ததா? இடக்கண் உயர்ந்ததா? என்று கேட்டால் அதற்கு என்ன விடை கூற முடியும். இரண்டு கண்ணுந்தான் உயர்வுடையன. அதுபோல் வாழ்க்கையில் கணவ னும் மனைவியும் சமமான பெருமையுடையவர்கள். ஆணுக்குள்ள பெருமை பெண்ணுக்குண்டு; பெண் ணுக்குள்ள பெருமை ஆணுக்குண்டு. சமமான பெருமையுடையவர் கணவனும் மனைவியும். கணவன் வெளியே சென்று வருந்திப் பொருளீட்டி

வருகின்ருன். மனைவி வீட்டிலிருந்து மனையறத்தைச் செய்து, தன தானியங்களைக் காத்து விருந்தோம்பி, கணவனுக்குரிய நலன்களைப் பேணி, நலன் புரிகின்ருள். இல்லறமான வண்டிக்குக் கணவன் ஒரு சக்கரம், மனைவி ஒரு சக்கரம். ஒரு சக்கரத் திலே வண்டி ஓடாது. இரண்டு சக்கரங்கள் இருந் தால்தான் ஓடும். ஒன்று பெரியதாகவும் ஒன்று சிறியதாகவும் இருந்தாலும் வண்டி ஒழுங்காக ஓடாது. இரு சக்கரங்களும் ஒரே அளவில் இருக்க வேண்டும்.

எனவே இல்லறமான சகடத்திற்குக் கணவனும் மனைவியும் ஒத்த நிலையுடையவர். இந்தக் கருத்தை நாம் நன்கு உணரும் பொருட்டே,

''ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும்நீ''

என்று அருளினுர். பெண்ணின் பெருமையை ஒரு சிறு அடி எத்துணை அழகாக நமக்குக் கூறுகின்றது என்பதைச் சிந்தியுங்கள்.

ஜாதி வேறு; குலம் வேறு.

மாகாணம் வேறு; மாவட்டம் வேறு.

ஜாதி என்பது பெரும் பிரிவு. குலம் என்பது சிறு பிரிவு.

ஒரிஸா மாகாணம், பீகார் மாகாணம், சென்னை மாகாணம் என்று கூறுவதை யறிக.

நெல்லை மாவட்டம், மதுரை மாவட்டம் என்று கூறுவதையும் அறிக.

மனித ஜாதி, மிருக ஜாதி, பட்சி ஜாதி என்று கூறுவதை ஓர்க. சாதியென்பது மனிதனையும் விலங்கினையும் பிரிக்கும் பெரும் பிரிவு.

குலம் என்பது மனிதருக்குள் அந்தண குலம், அரச குலம், வைசிய குலம், வேளாள குலம் என்ப தாகும். இந்த நுணுக்கத்தையுணராதார் பிராம்மண ஜாதி வேளாள ஜாதி என்கின்றார்கள். அது திருச்சி மாகாணம், தஞ்சை மாகாணம் என்று கூறுவது போலாகும்.

மனிதருக்குள் குணங்களால் குலம் அமைந்தது. எல்லோரும் ஒன்றுதான். தணிந்த சிந்தையுடையவன் அந்தணன், பொறி புலன்களை வென்றவன் அரசன், பிறரை வசீகரிக்கின்றவன் வைசியன், பிறருக்கு உதவி புரிகின்றவன் வேளாளன், சினம் வருகின்றவன் சண்டாளன். குண பேதத்திலே இது அமைகின்றது. ஒருவனே, தணிந்த சிந்தையுள்ள போது அந்தணன். உபகாரம் புரியும்போது வேளாளன். கோபிக்கின்றபோது சண்டாளன்.

ஆதலால் குலம் என்பது தனித்து நிற்பதில்லை. எல்லோரும் ஒரு குலந்தான். குணத்தினால் மாறு படுகின்றார்கள்.

ஆகவே ஜாதி வேறு, குலம் வேறு, இனி ஜாதி குலம் என்று தருக்கு வரக்கூடாது. அதனால் வெறி வரக்கூடாது.

> சாதி குலம் பிறப்பென்னும் சுழிப்பட்டுத் தடுமாறும்
> ஆதமிலி நாயேனை அல்லலறுத் தாட்கொண்டு
> பேதை குணம் பிறருருவம் யான்எனதென் னுரைமாய்த்துக்
> கோதி லமுதானானைக் குலாவுதில்லை கண்டேனே.

என்று மணிவாசகனார் கூறியருளினார்.

குலம் குலம் என்று வெறி பிடித்து அலைதல் கூடாது.

"ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்று சங்க நூலும் கூறுகின்றது. இத்தனையும் நாம் உணர்ந்து உய்யுமாறு,

"ஒரு குலமும் சுற்றமும் ஓருருநீ"

என்று கூறினர்.

போகப் பொருள்களைத் தந்தானும் இறைவன். போகப் பொருளாய் நின்றானும் இறைவன்; அவைகளின் பயனும் இறைவன். அவைகளை நுகருமாறு நம்மைச் செலுத்துவானும் இறைவன். எல்லாம் இறைவன்தான்.

"துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய்நீ"

என்றார்.

திருநாவுக்கரசர் திருவாமூரிலே புகழனார் மாதினியார் செய்த மாதவத்தால் அவதரித்தார். இளமையிலே தாய் தந்தையர் மறைந்தார்கள். தமக்கையாரை மணஞ்செய்ய இருந்த கலிப்பகையார் மறைந்தார். அதனால் அவர் யாக்கை நிலையாமையையறிந்தார். பல அறம் புரிந்தார். நல்லாறு தெரிந்துணர நம்பர் அருளாமையால் சமண சமயம் புகுந்தார். அவருடைய தமக்கையார் திலகவதியார் அது கண்டு மிக்க மனவேதனையுற்றார். திருவதிகையிலிருந்து தவம் புரிந்தார். சிவமூர்த்தியை வணங்கினர். தம்பி திருந்த வேண்டும் என்று சிவபெருமானிடம் முறையிட்டார். அம்முறைக்கிரங்கிய இறைவன் அவருக்கு சூலைநோய் தந்து தடுத்தாட்கொண்டருளினர். இந்தக் குறிப்பினை வைத்து,

"துணையாய் என் நெஞ்சந் துறப்பிப்பாய் நீ"

என்றார்.

துணை யென்பது தன் தமக்கையார் திலகவதி யாரை உணர்த்துகின்றது எனவுணர்க.

பொதுவாக ஒவ்வொரு உயிருக்கும் இறைவன் தோன்றாத் துணையாக நின்று உலக போகத்தினின் றும் மீட்சியைத் தருகின்றான்.

சிறப்பாக அப்பருக்குத் துணைவியராகிய திலக வதியார் மூலம் துறவு கிடைத்ததனால் "துணையாய் என் நெஞ்சந் துறப்பிப்பாய் நீ" என்று கூறி யருளினார்.

நாம் காண்கின்ற பொருள்களில் பொன்னும் மணியும் உயர்ந்தன.

"இப்பொன்னீ இம்மணி நீ இம்முத்து நீ"

என்றார்.

"பொன்னானாய் மணியானாய் போகமானாய்"

என்று மற்றொரு பாடலிலும் கூறுகின்றார்.

"பொன்னே மணியே பொருளே யருளே"

என்று அருணகிரியார் கந்தரநுபூதியில் கூறுகின்றார்.

பொன்னினும் மணி உயர்ந்தது. மணியினும் முத்து உயர்ந்தது.

உலகிலும் ஐம்பதாம் ஆண்டில் பொன்விழாவும், அறுபதாவது ஆண்டில் மணிவிழாவும், எண்ப தாவது ஆண்டில் முத்து விழாவும் கொண்டாடு வார்கள்.

பொன், மணி, முத்து இந்த மூன்றும் ஒன்றுக் கொன்று உயர்வுடையது.

மனிதனும் ஐம்பதில் உயர்ந்து பொன்னுக வேண்டும். அறுபதில் மேலும் உயர்ந்து மணியாக வேண்டும். எண்பதில் பந்தத்தினின்றும் விடுபட்டு முத்தாக வேண்டும். இந்த விழாக்கள் இந்தக் குறிப்பில் அமைய வேண்டும். வெறும் ஆரவார முடையதாக அமைதல் கூடாது.

இத்தனையும் ஆனவன் ஏறூர்ந்த செல்வனும் இறைவனேயாகும்.

ஏறு—தரும விடை.

உலகங்களையெல்லாம் இறைவன் தாங்குகின்ருன். அந்த இறைவனைத் தருமம் தாங்குகின்றது.

அப்பனீ அம்மைநீ ஐயனுநீ
அன்புடைய மாமனும் மாமியுநீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும்நீ
ஒருகுலமும் சுற்றமும் ஓரூரும்நீ
துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய்நீ
துணையாய் என்நெஞ்சந் துறப்பிப்பாய் நீ
இப் பொன்னீ
இம் மண்நீ
இம் முத்தும்நீ
இறைவனீ
ஏறூர்ந்த செல்வன் நீயே!

# அவசியம்

ஆறுமுகப் பெருமானுடைய அடியார்கள் மேற்கொள்ள வேண்டிய கடமைகள் பல இருப்பினும், அவற்றுள் மிகமிக அவசியமான ஒரு கடமையுண்டு.

கடமையுணராதது மடமை. ஒவ்வொருவருக்கும் சிறந்த ஒரு கடமையுண்டு.

முருகப் பெருமானுடைய மெய்யடியார்கட்கு இதனை வற்புறுத்திக் கூறுகின்றேன்; அன்பின் காரணமாக அறிவுறுத்துகின்றேன்.

முருகவேளின் வலப்புறத்தில் வள்ளிநாயகி; இடப்புறத்தில் தெய்வயானை; அவருடைய திருக்கரத்தில் வேலாயுதம்.

மனிதர்கட்கு இன்றியமையாத தேவைகள் மூன்று. இம்மை, மறுமை, வீடு என்பன.

(1) இந்த உலகத்தில் நல்வாழ்வு.

(2) மேல் உள்ள சுவர்க்க உலகில் இன்ப வாழ்வு.

(3) அதற்குமேல் முத்திப்பேறு.

இந்த மூன்று நலன்களையுந் தரவல்ல தெய்வம் முருகவேள். எம்பெருமான் தன் வலப்பக்கத்தில் அமர்ந்துள்ள வள்ளி இம்மண்ணுலகில் அவதரித்தவர்; அவர் மூலம் இகவாழ்வைத் தருவார்.

தன் இடப்புறத்தில் அமர்ந்துள்ள தெய்வவுலக மடந்தையாகிய தெய்வயானையம்மை மூலம் பர வாழ்வு (சுவர்க்க இன்பம்) தருவார்.

தன் திருக்கரத்தில் அமர்ந்திருக்கின்ற ஞான மாகிய வேலாயுதத்தால் வீடுபேற்றினை வழங்குவார்.

நமக்கு முதலில் இம்மை நலமும், பின்னர் மறுமை நலமும், அதற்குப் பின் முத்தி நலமும் முறையே வரவேணும்.

உடம்புடன் வாழ்கின்ற நமக்கு இம்மை நலம் அவசியம் வேண்டும். வீடு, வாசல், நிலம், புலம், வண்டி, வாகனம், துணி, மணி, பொன், பொருள், ஆடை, அணிகலம், மனைவி, மக்கள் என்பனவாதி அனைத்தும் இம்மை நலங்களாம்.

இவற்றை வழங்கும் தேவி வள்ளிபிராட்டியார். வள்ளியை வழிபடுவோர்க்கு இகவாழ்வு சிறக்கும். வள்ளிநாயகியார் திரு அவதாரம் புரிந்த திருத்தலம் வள்ளிமலை.

இது தொண்டை நன்னாட்டில் இருக்கின்றது. வள்ளி பிறந்த இடம் வள்ளியூர் என்றும், நாகர் கோயிலுக்கு அருகில் உள்ள குமாரர் கோயில் என்றும் பலர் பலவாறு கூறுவார்கள். அவர்கள் அனைவரும் கந்த புராணத்தைக் கண்ணால்கூடக் காணாதவர்கள்.

கந்தபுராணந்தான் சிறந்த பிரமாணம்; அதில் கூறுவதைக் காண்க.

திருமாலின் இருகண்களில் இரு நங்கையர் அவதரித்தனர்; ஒருத்தி அமுதவல்லி; ஒருத்தி சுந்தரவல்லி.

இம்மங்கையர் இருவரும் முருகவேளை மணஞ் செய்ய விரும்பி சரவணப் பொய்கையில் பலகாலந் தவம் புரிந்தனர். முருகவேள் தோன்றி அமுத வல்லியை விண்ணுலகிலும், சுந்தரவல்லியை மண்ணுலகிலும் பிறந்து தவம்புரியுமாறு பணித்தருளினார். இதன் குறிப்பு யாது? மண்ணுலகில் தோன்றும் வள்ளியம்மை மூலம் ஆன்மாக்களுக்கு மண்ணுலக நலன்களையும், விண்ணுலகத்தில் தோன்றும் தெய்வயானையம்மை மூலம் விண்ணுலக நலன்களையும் தரும் பொருட்டு எனவுணர்க-இகபரம் இரண்டும் தரும் தெய்வம் எம்பிரான். அதனால் அருணகிரி நாதரும், "இகபர சௌபாக்யம் அருள்வாயே" என்று பாடுகின்றார்.

இறைவன் பணித்த வண்ணம் மூத்தவளான அமுதவல்லி தானே ஒரு குழவியாகி, சூரபன்மனுக்கு அஞ்சி மேருமலையில் ஒளிந்திருந்த இந்திரனிடம் போய் "நின்மகள் யான்" என்றாள்.

இந்திரன் சத்தியவுலகிலே மனோவதி நகரிலே கற்பக மரத்தின்கீழ் தன் ஐராவதம் என்ற தெய்வ யானையால் வளர்க்கச் செய்தனன்.

இளையாளாகிய சுந்தரவல்லி மண்ணுலகிலே தொண்டை நன்னாட்டிலே மேற்பாடிக்கு அருகில் உள்ள மகாபுனிதமான வள்ளிமலையில் வந்து பன்னெடுங்காலம் தவம் புரிந்தாள்.

முற்றுணர்ந்திடு சுந்தரி என்பவள் முருகன்
சொற்ற தன்மையை உளங்கொடு தொண்டை நன்னாட்டில்
உற்ற வள்ளியஞ் சிலம்பினை நோக்கியாங் குறையும்
நற்றவச் சிவ முனிமகளாகவே நடந்தாள்

அயன் படைத்திடும் அண்டத்துக் காவியாய்ப்
பயன் படைத்த பழம்பதி என்பரால்
நயன் படைத்திடு நற்றொண்டை நாட்டினுள்
வியன் படைத்து விளங்கு மேற்பாடியே
ஆயதொல்லை யணி நகர் ஞாங்கரின்
மீயுயர்ந்ததொர் வெற்புநிற் கின்றதால் —கந்தபுராணம்

பின்னர் திருமாலே, அங்கு சிவ முனிவராகத் தோன்றித் தவம் புரிந்துகொண்டிருந்தார். இலக்குமி தேவி மானுருவங்கொண்டு வந்தாள். அம்மானை அம்மான் பார்க்க, அப்பார்வையால் சுந்தரவல்லி மான் வயிற்றில் புகுந்தாள். மான் வள்ளிக் குழியில் குழந்தையைப் பெற்றது. திருமாலின் மற்றொரு அவதாரமாகிய உபேந்திரன் நம்பிராஜனாகப் பிறந்தான். அந்த நம்பி பிராட்டியைக் கொண்டு போய் வளர்த்தான்.

வள்ளியென்று பேர் புனைந்த எம்பிராட்டி வள்ளிமலையின் திருப்புனங் காவல் புரிந்தனள்.

அத்தேவி தினைப்புனங் காத்தபோது அவள் ஆலோலப் பாடலைக் கேட்டுச் சராசரங்கள் எல்லாம் உருகின.

மையல் குறவர் குறத்தியர்கள்
இருளு மடம் போய்த் தெருளெய்த
மான் பசியும் மனப் பயமும்
மறந்து சுரந்த மடிப்பாலைப்
பையப் பதுங்கும் புலிப்பிணவின்
பறழுக் கருத்திக் கொலை மறந்த
பாரப் புலிதன் முலைப்பாலைப்
பன்றிக் குருளைக் கினிதூட்டக்
கையிற் கவணில் பதித்த மணிக்
கல்லும் உருகக் கிளைகள் தினை



சுவராதிருந்து கசிந்துருகக்
        கனிவாய் ஆலோலம் புகலும்
தையற் குறத்தி மனம் உருக்கும்
        சமர்த்தா தாலோ தாலேலோ
தாமக் குவளைத் திருமலை வித்
        தகனே தாலோ தாலேலோ

*—திருமலை முருகன் பிள்ளைத்தமிழ்*

இங்ஙனம் சுந்தரஞான மென் குறமாது ஞானத் தினைப் புனங் காத்திருந்தபோது அப்பிராட்டியின் தவங் காரணமாகத் தணிகை நாயகன் வேடனாக வும் விருத்தனாகவும் வந்து தன் வேதமுங் காணாத விமல சரணாரவிந்தங்களை வைத்துப் பலகாலும் உலாவிய இடம் வள்ளிமலையென வுணர்க.

அருணகிரிநாதர் முடி மீது முருகன் தன் அருண சரண மலரை வைத்துச் சூட்டினான். அந்த அருமையை அவர் கந்தரநுபூதியில் 44-வது பாடலில் கூறுகின்றார்.

முருகன் திருவடியை என் சென்னிமேல் சூட்டி னான். அத்திருவடி நான்கு இடங்களில் கமழுந் தன்மையானது. அதாவது முருகன் பாதம் நான்கு இடங்களில் பட்டன.

1. முத்தி வீடு        2. தேவர்கள் தலை
3. வேதம்        4. வள்ளிமலை

நம்மால் முத்தி வீட்டையும், தேவர்கள் சென்னிகளையும், வேதங்களையுங் காண முடியாது. வள்ளிமலையைக் காணலாந்தானே? அப்பன் அடி மலர் பலகாலுந் தோய்ந்த அற்புதத் தலம் வள்ளி மலை,

சாடுந் தனிவேல் முருகன் சரணஞ்
சூடும்படி தந்தது சொல்லுமதோ
வீடுஞ் சுரர் மாமுடி வேதமும் வெங்
காடும் புனமுங் கமழுங் கழலே —அநுபூதி

எறுழிபுலி கரடியரி கரிகடமை வருடையுழை
இரலை மரை இரவு பகல் இரைதேர் கடாடவியில்
எயின ரிடும் இதணதனில் இளகு தினை கிளிகடிய
இனிது பயில் சிறுமிவளர் புனமீதுலாவுவதும்
உபயசதுர் மறையின்முத னடுமுடிவில் மணநாறு
சீறடியே''
—சீர்பாத வகுப்பு

''இமையவர் முடித்தொகையும் வனசரர் பொருப்பும் என
திதயமு மணக்கும் இரு பாதச்சரோருகனும்''
—திருகுப்பு

கரடி புலி திரிகடிய வாரான கானில் மிகு
குளிர்சுணியின் இளமரம தேயாகி நீடியுயர் குன்றுலாவி
—திருக்குறள்

சுனையோடருவித் துறையோடு பசுந்
தினையோ டிதணோடு திரிந்தவனே —அநுபூதி

இத்தகைய மகா புனிதந் தங்கிய வள்ளி மலையை ஒவ்வொரு முருகனடியாரும் தெரிசித்து நலம் பெறவேண்டியது அவசியம்.

இது ஐந்தாவது படை வீட்டைச் சேர்ந்தது.

முஸ்லிம் அன்பர்கட்கு ஐந்து கொள்கைகள் உண்டு.

1. கடவுள் நம்பிக்கை.

2. வருவாயில் இரண்டரை சதம் தங்கள் மத அறத்துக்கு வழங்கல்.

3. ஆண்டுக்கு ஒருமுறை முப்பது நாள் இரவில் உண்டு, பகலில் உண்ணுது நோன்பு நோற்றல்.

4. தினம் ஐந்து வேளை தொழுதல்.

5. ஆயுளில் ஒருமுறை நபிநாயகம் அவதரித்த மெக்காவுக்குச் சென்று சேவித்தல்.

நபிநாயகம் அவதரித்த மெக்கா சகாரா பாலைவனங் கடந்து போகவேணும். முஸ்லிம் அன்பர்கள் பல்லாயிரம் மைல்கள் கடந்து குருமகான் அவதரித்த மெக்காவுக்குச் சென்று வணங்குகின்றுர்கள்.

இந்த முறையில் முருகன் அடியார்கள் எம்பிராட்டி வள்ளிதேவி அவதரித்த வள்ளிமலைக்குத் தம் ஆயுளில் ஒரு முறையாவது சென்று தெரிசிக்க வேணும். இது மிகமிக அவசியம்.

அன்றி வள்ளிமலையில் நிகழ்ந்த ஒரு அதிசயத்தையும் இங்கே கூறுகின்றேன்.

ஆறு வருடங்கட்குமுன் வள்ளிமலையில் படித் திருப்பணி நடந்துகொண்டிருந்தது. அத் திருப் பணிக்கு அடியேன் தலைவன்.

வேலூர் வைத்திய பூபதி அப்பாதுரை அவர்கள் செயலாளர். டாக்டர் அப்பாதுரை, வள்ளிமலையின் அடிவாரத்தில் தங்கித் திருப்பணியைக் கவனித்துக் கொண்டிருந்தார்.

மலையில் பாதிவரை படிவேலை நடந்தது. பாதி மலையில் பழைய நான்கு கால்மண்டபம் இருந்தது. அதைப் பெயர்க்க முயன்றனர்.

கொத்தனுர்களில் இருவர்கள் அடியில் உள்ள பழைய படிக் கல்லைப் பெயர்த்தார்கள்.

மட்டிப்பால் சாம்பிராணிப் புகை குபுகுபு என்று உள்ளே இருந்து வந்தது. அந்த இருவரும் வாயி லும் மூக்கிலும் உதிரம் வந்து மயங்கி விழுந்துவிட் டார்கள்.

அருகில் இருந்த சித்தாள்கள் ஓடோடியும் சென்று வைத்திய பூபதி அப்பாதுரையவர்களிடம் கூறினுர்கள். அவர் விரைந்து சென்று பார்த்தார். படியைப் பெயர்த்த இடத்தில் மலைக்குள் பார்த்த போது, ஒரு முனிவர் உருவம் மங்கலாகத் தெரிந் தது; அப்பாதுரை கீழே விழுந்து வணங்கி கன்னத் தில் அடித்துக்கொண்டு அப்படியே படிக்கல்லை வைத்து மூடிவிட்டார்.

வள்ளிமலையில் எல்லாப் படிகளும் புதுமை யாகப் போடப்பட்டன. இந்த இடத்தில் மட்டும் பழைய மண்டபத்தை அப்படியே விடப்பட்டுள்ளது. இதன் காரணம் பலருக்குத் தெரியாது.

இந்த அரிய நிகழ்ச்சியைத் திரு வைத்திய பூபதி என்பால் கூறினுர். இன்னும் பல அதிசயங் கள் நிறைந்த தலம் இது.

மேலும் மலைமீது சுவாமி எழுந்தருளியிருப்பது குகைக் கோயில். குகையில் இருப்பதனுல் குகன் என்று கூறுவர்.

குகைக்குமேல் தூபி கட்டியுளது; அன்றியும் மலையின் உச்சியில் சூரியன் காணுத சுனையுளது. கடுங்கோடையிலும் நீர்வற்ருமல் சிவஞானிகள்

உள்ளம்போல் தெளிந்து, கற்புடைய மாதர் உள்ளம் போல் குளிர்ந்து இருக்கும்.

இச்சுனையில்தான் முருகன் வள்ளியுடன் நீராடியது.

இம் மலையில் வள்ளியின் பரணும் வள்ளிநாயகியின் கோயிலும் இருக்கின்றன.

இன்றும் பல மாதவர்கள் தங்கித் தவம் புரிகின்ருர்கள்.

தவம் புரிவார்க்குத் தனிமை தரும் இனிமையான திருத்தலம்.

இத்தலம் காட்பாடி-வேலூரிலுருந்து 17 மைல், வடகிழக்கிலுள்ளது. சித்தூருக்குச் செல்லும் மற்ருெரு பாதையில் உள்ளது. பஸ் வசதியுண்டு. வழியில் திருவலம் என்று ஒரு சிவத்தலம் உளது. தேவாரம் திருப்புகழ் பாடல் பெற்றது. பெரிய புராணத்திலும் சேக்கிழார் இத்தலத்தைக் கூறியுள்ளார்.

நீவா நதிக்கரையில் உள்ளது திருவலம். திருவலத்திலிருந்து வடக்கே ஆறு கல் தொலைவில் வள்ளிமலை உள்ளது.

ஆதலால் அறுமுகன் அடியார்கள் ஆயுளில் ஒரு முறையாவது வள்ளிமலை முருகனையும் வள்ளி நாயகியையும் தரிசிப்பது அவசியம்.

அங்ஙனந் தரிசித்தோர் இம்மை நலன்களை எளிதிற் பெறுவர்.

"வள்ளி படர் சாரல் வள்ளிமலை மேவு
வள்ளி மணவாளப் பெருமாளே"

# இரண்டு உலகம்

நாம் இப்போது இந்த உலகில் வாழ்ந்து கொண்டிருக்கின்ருேம். உயிர் என்றைக்கும் உள்ள பொருள். உடம்பு மாறி மாறி வரும்.

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்"

என்கின்ருர் மாணிக்கவாசக சுவாமிகள்.

ஆகவே, நாம் பிறவா நிலனும் இல்லை. நாம் இறவா நிலனும் இல்லை. நம்மைப் பெருத உயிர்களும் இல்லை. நாம் பெருத உயிர்களும் இல்லை. உண்ணுத உணவுமில்லை; அநுபவிக்காத போகமும் இல்லை. எத்தனையோ ஊழிகாலமாகப் பிறந்தும், இறந்தும் இந்தப் பிறவி வந்த வண்ணமாகவே இருக்கின்றது.

எத்தனையோ உலகங்கள் இருக்கின்றன.

எத்தனையோ வகைப்பட்ட உயிர்கள்; ஆடு-மாடு, புலி-எலி, ஆனை-பூனை, ஓணன்-உடும்பு, மான்-மீன், பாம்பு-பல்லி, செடி, கொடி, மரம், புல்-கல் இப்படிப் பல உயிர்கள். இவற்றை எல்லாம் இரு பிரிவில் அடக்கவிடலாம். ஒன்று சரம் (அசையும் உயிர்.) மற்ருென்று அசரம் (அசையாத உயிர்.)

" செயிரிலா உலகினில் சென்று நின்றுவாழ்
உயிரெலாம் உறைவதோர் உடம்பும் ஆயினுன் "

என்கின்ருர் கம்பநாடர்.

சென்று வாழ் உயிர்; நின்று வாழ் உயிர் என்ற இந்த இரு பிரிவில் எல்லா உயிர்களும் அடங்குவது போல், எல்லா உலகங்களேயும் ஒளி உலகம், இருள் உலகம் என்ற இரு பிரிவில் அடக்கி விடலாம்.

ஒளி உலகம்-இன்ப உலகம்; இருள் உலகம்-துன்ப உலகம்.

ஒளி உலகம் என்பதில் தேவலோகம், பிரம லோகம், விஷ்ணுலோகம் முதலிய உலகங்கள் அடங்கும்.

இருள் உலகம் என்பதில் யமலோகம், கும்பி பாகம் முதலிய நரகங்கள் அடங்கும்.

இனி இந்த இரு உலகங்களின் தன்மையை ஆராய்வோம்.

ஒளி உலகம் நறுமணத்துடன் கூடியது. கற்பகம் முதலிய தெய்வத் தருக்களின் நிழலால் இனிய காற்று வீசிக்கொண்டிருக்கும். சதா இனிய சங்கீத ஒலி ஒலித்துக்கொண்டிருக்கும். அரம்பையரது ஆடலும் பாடலும் நிறைந்திருக்கும். வெப்பமே இன்றி நல்ல குளிர்ச்சியாகத் திகழும்.

இருள் உலகம் பொறுக்க முடியாத நாற்றமும், வெப்பமும், கொடுமையும் நிறைந்திருக்கும். வெட்டு குத்து, அடி, கொல் என்ற வல்லோசையுடன் கூடி பெருந் துன்ப மயமாக இருக்கும்.

கொலை, புலை, களவு, சூது, வாது, வஞ்சனை முதலிய தீவினைகள் புரிவோர் இருள் உலகம் போய் பெருந்துன்பத்தை நுகர்வார்கள்.

புகை வண்டியில் ஏறுவோர்க்கு நுழைவுச் சீட்டு இன்றியமையாதது. அதுபோல் ஒளி உலகத்திற்குச் செல்ல வேண்டுமானால் அதற்கு நுழைவுச் சீட்டு அருள் ஒன்றேதான்.

"அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை; பொருளில்லார்க்கு
இவ்வுலகம் இல்லாகி யாங்கு" —திருக்குறள்

ஒரு பெருந் தனவந்தர். அவருக்கு அறுபது லட்சம் ரூபாய் சொத்து. அவர் சென்னையில் பெரு மிதமாக வாழ்பவர். பெங்களூர் போகப் புறப்பட்டார். சென்னை சென்ட்ரல் புகை வண்டி நிலையத்தில் முதல் வகுப்பில் இடம் ஒதுக்கி அதில் அவர் பேர் எழுதிய அட்டை தொங்கவிடப்பட்டது. வண்டியில் பெட்டி, படுக்கை, தண்ணீர், திருகுசெம்பு, குடை முதலிய பலவும் அதில் ஏற்றப்பட்டன. வண்டி புறப்படுமுன் காரில் வந்து வண்டியில் ஏறினார். வண்டி புறப்பட்டது. செய்தித்தாள் படித்தார். சற்று இளைப்பாறினார். அரக்கோணம் வந்தது. காபி பலகாரம் கொணர்ந்து ஒருவன் தர அருந்தினார். பணந் தரும் பொருட்டு சட்டைப் பையில் கையை விட்டார். 3000 ரூபாயும் சில்லரையும் அடங்கிய மணிபர்ஸ் இல்லை. அதனை எடுத்தவர் எப்படியோ சட்டைப் பையில் வைக்க மறந்துவிட்டார். வீட்டில் நின்று விட்டது. பெட்டியிலும் பார்த்தார்; இல்லை. காப்பியும் பலகாரமும் தந்தவன், "ஐயா! நான்

போகவேண்டும். நேரம் ஆகின்றது. சீக்கிரம் தாருங்கள்'' என்று நெருக்கினான். என்ன செய்வார். சென்னையில் 60 லட்சம் ரூபாய்கள் இருக்கின்றன. ஆனால் அரக்கோணத்தில் ஒரு நயா பைசாவும் இல்லை. திரு திரு என்று விழித்தார்.

“ஏனையா! பணம் இல்லையா? இல்லாதவர் ஏன் காப்பி குடிக்கவேண்டும்? ஆள் பெரிய ஆள்தான் போலும்'' என்றான் அவன்.

“ஐயா! மணிபர்ஸ் எடுக்கவில்லைபோலும்; சற்று இரு, பொறு; தருகின்றேன்'' என்றார்.

அவன் கடிந்துகொண்டான். அடுத்து இருந்த ஒருவரிடம் கடன் வாங்கிக் கொடுத்தார்.

வண்டி பெங்களூர் சென்றது. சாமான்களைத் தூக்கும் கூலிக்கும் பணம் இல்லை. கைமாற்று வாங்கியதையும் தர இயலவில்லை; மிக்க வருத்த முற்றார்.

பொருள் இல்லாதானுக்கு என்னதான் இருக்கும். அதுபோல் இவ்வுலகில் பட்டம், பதவி, நில புலம், பொன், பொருள் எத்தனையிருப்பினும்அவ் வுலகில் அருள் இல்லாத ஒருவன் வேதனை யுறுவான். ஆகவே அருளையீட்டாதவர் அவ்வுலகம் பெறுவதில்லை.

அருள் நலம் பெற்றவர் இருள் சேர்ந்த இடர் உலகம் போகமாட்டார்கள்.

“அருள் சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை இருள் சேர்ந்த
இன்னா வுலகம் புகல்''

—திருக்குறள்

இம்மையில் எல்லாவுயிர்கட்கும் அன்பினுல் உதவி செய்தல் வேண்டும். அன்பினுல்தான் அருள் வரும். அன்பில்லையேல் அருளைப் பெற முடியாது. அருளைப் பெருதார் அவ்வுலகம் பெறுகிலர்.

பலர் மற்ருெரு உலகம் இருக்கின்றது; நாம் என்றிருந்தாலும் ஒரு நாள் உடம்பை உதறிவிட்டுப் புறப்படுவோம். மரணத்திற்குப் பின் நாம் என்ன நிலையை அடைவோம்? எங்கே போவோம்? என்ற எண்ணமேயின்றி இருக்கிருர்கள். உண்ணுகின்ருர்கள், உலாவுகின்ருர்கள், உறங்குகின்ருர்கள், பொருள் ஈட்டுகின்ருர்கள், பொருளைப் பெட்டியில் வைத்துப் பூட்டுகின்ருர்கள், கற்ற வித்தைகளைப் பிறருக்குக் காட்டுகின்ருர்கள். ஆனல் உடம்பை விட்டு உயிர் பிரிந்தபின் அடையும் உலகைப் பற்றிச் சிறிதும் சிந்திப்பதில்லை.

திருவிழாக் காலங்களில் புகைவண்டியில் மக்கள் கூட்டம் எள் வீழ்ந்தால் கீழே விழ முடியாத அளவில் நெருக்கமாக இருக்கும். வண்டியில் ஏற முடியாது பலர் தத்தளிக்கின்ருர்கள்.

அறிவாளி நான்கு நாட்களுக்கு முன் முதல் வகுப்பு அல்லது இரண்டாவது வகுப்பு முதலிய சிறப்புப் பெட்டியில் இடம் ஒதுக்கப் பணங் கட்டிச் சீட்டு ஒட்டுமாறு செய்துவிட்டால் எத்துணை நெருக்கமாக இருப்பினும் அந்த இடத்தில் பரம சுகமாக இருந்து பிரயாணம் புரியலாம் அல்லவா?

அதுபோல் இந்த வுலகில் வாழ்கின்ற நாம் வாழ்கின்றபோதே தான தருமம் புரிந்து அந்த வுலகில்

புண்ணியம் என்ற சீட்டு ஒட்டிவிட்டால் அங்கு அதிக சுகமாக இன்புறலாம்.

பாவம் புரிந்தோர்கள் தீவினைத் தேரில் ஏறி நரகில் சேர்ந்து துன்புறுவார்கள்.

"கொல்வதே கன்றிநின்றார் கொடியவர் கடியநீரார்
இல்லையே இம்மையல்லால் உம்மையும் உயிரும் என்பார்
அல்லதும் தவமுமில்லை தானமும் இழவென்பாரும்
செல்ப அந்நரகந் தன்னுள் தீவினைத் தேர்கள் ஊர்ந்தே"

—சிந்தாமணி

எனவே மக்களாகப் பிறந்த நாம் இன்சொல், உண்மை, ஒழுக்கம், அன்பு, பண்பு, நேர்மை, நீதி, நெறி, கருணை முதலிய நற்குணங்களைப் பூண்டு இம்மையில் இனிது வாழ்ந்து, இறுதியில் ஒளி உலகம் புகுவோமாக.

# இருவகையினர்

உலகத்தில் எத்தனையோ வகைகள்; ஒன்று இரண்டு அல்ல; மரங்கள் என்றால் அதில் எத்தனையோ வகைகள். நெல் என்றால் அதில் கிச்சிலி சம்பா, தொப்பிச் சம்பா, சிறுமணி, மணக்கத்தை, குறுவை, கார் என்று பலவகை; அவரையில் பலவகை; ரோஜாவில் பச்சை ரோஜா, சிவப்பு (பட்டு) ரோஜா, வெள்ளை ரோஜா இப்படிப் பலவகை; அலரிப்பூவில் பலவகை.

ஆடு என்றால் செம்மறியாடு வெள்ளாடு குறும்பாடு என்று பலவகை; மாடு என்றால் சிந்துமாடு, காங்கேயம் மாடு என்று பலவகை; குரங்குகளில் பலவகை.

இதேபோல் மனிதர்களிலும் பலவகை யுண்டு. சீனர்கள், யவனர்கள், வெள்ளையர் இப்படிப் பலவகை.

இன்னும் அறிஞர்கள், மூடர்கள், தீயவர்கள், தூயவர்கள், கள்ளர்கள், குள்ளர்கள், முரடர்கள், சாதுக்கள் என்பனவாதி எத்தனை எத்தனை வகை மனிதர்கள்! உணவுகளிலும் பலவகையுண்டு. உணவு பலவகையிருப்பினும், அவற்றை உண்டபின் வருகின்ற திருப்தி ஒன்றுதான். படுக்கை பலதிறப்பட்டிருப்பினும் உறக்கம் ஒன்றுதான். விறகுகள் பலதிறப்பட்டிருப்பினும் வெந்தபின் நெருப்பு ஒன்று

தான். புங்கம் விறகு, புளியம் விறகு, வேலம் விறகு, வேப்பம் விறகு, அத்தி விறகு, ஆலம் விறகு என்று கூறுகின்ற நாம், அவை வெந்தபின் புங்கந்தணல், புளியந் தணல், வேப்பந் தணல், வேலந்தணல் என்று பிரித்துக் கூறுகின்றேமில்லை. விறகு பல, தணல் ஒன்று.

இது போல் மார்க்கங்கள் பல, முடிவில் அடைகின்ற முத்தி ஒன்றுதான். ஊர் ஒன்று; அதற்கு அமைத்த வழிகள் பல.

திருச்சிராப்பள்ளி ஊர் ஒன்று. அதற்குத் தஞ்சாவூரில் இருந்துவரும் வழி, புதுக்கோட்டை ரோடு, விராலிமலை ரோடு, குழித்தலை ரோடு, முசிரி ரோடு, பெரம்பலூர் ரோடு, லால்குடி ரோடு, எந்த வழியாக வந்தாலும் முடிவில் சேர்வது திருச்சிராப்பள்ளிக்குத்தானே!

"ஒன்றதே பேரூர் வழியதற்கு ஆறுள" என்கின்றார் திருமூலர்.

இதுபோல் பக்தி மார்க்கம், யோக மார்க்கம், விதி மார்க்கம், தாசமார்க்கம், சத்புத்ர மார்க்கம், சக மார்க்கம், சன்மார்க்கம் என்று முத்தியை யடைவதற்கு அநேக மார்க்கங்கள் இருக்கின்றன.

ஒரு ஊருக்குப் போவதற்குப் பல சாதனங்கள் உண்டு. ஒருவர் ரயிலில் போகின்றார்; ஒருவர் விமானத்தில் போகின்றார்; ஒருவர் தனிக் காரில் போகின்றார்; ஒருவர் பஸ்ஸில், ஒருவர் சைக்கிளில், ஒருவர் குதிரை வண்டியில், ஒருவர் மாட்டு வண்டியில்;

ஒருவர் நடந்து போகின்ருர். இவற்றுள் போவது முன் பின்ஞக இருப்பினும் முடிவில் எல்லோரும் அந்த ஊருக்குத்தானே போய்ச் சேருகின்ருர்கள். பக்தி வழியில் சென்றவர் கண்ணப்பர். யோக நெறியிற் சென்றவர் பெருமிழலைக் குறும்பர். திருமூலர் முதலியோர். சன்மார்க்கத்திற் சென்றவர் மணி வாசகர் முதலியோர்.

இவ்வாறு முக்தி பெற்றவர்களில் இருவகை யுண்டு.

1. ஜீவன் முத்தர்.

2. அவதார புருஷர்.

ஜீவன் முத்தர் :

முத்தர்—என்ற சொல்லுக்கு விடுபட்டவர் என்பது பொருள்.

எதிலிருந்து விடுபடுவது? கட்டிலிருந்து விடுபட வேண்டும்.

விடு என்ற முதல் நிலை நீண்டு வீடு என்ற சொல் வந்தது. ஆகவே விடுபடுவது வீடு. இதுதான் வடமொழியில் முத்தி என வந்தது.

நத்தையிலிருந்து விடுபடுகின்ற ஒன்றுக்கு முத்து என்று பேர்.

நாம் கட்டுண்டு கிடக்கின்ருேம்; என்ன கயிறு? “அறம் பாவம் என்னும் அருங் கயிற்ருல் கட்டி” என்பது திருவாசகம். பாசக் கயிற்ருல் நாம் பந்திக்கப்பட்டிருக்கின்ருேம். பாசக் கயிற்றினின்றும் நாம் விடுபட வேண்டும்.

இறைவன் அருள்பெற்ற குருநாதர் தரும் ஞான வாளைக் கொண்டு பாசக் கயிற்றைத் துணிக்க வேண்டும்.

முருகப் பெருமான் தன் அடியார்கட்கு அந்த ஞான வாளை இலவசமாக வழங்குகின்ருர். அவர் ஞான குருநாதர் அல்லவா? முதலில் அதை அப்பா வுக்குத் தந்தனர்.

**தந்தைக்கு முன்னந் தனிஞான வாள்ஒன்று சாதித்தருள்**
**கந்தச் சுவாமி எனைத் தேற்றியபின்னர் காலன் வெம்பி**
**வந்திப் பொழுதென்னை என்செய்யலாம் சக்தி வாள் ஒன்றினுல்**
**சிந்தத் துணிப்பன் தணிப்பருங் கோபத்ரி சூலத்தையே.''**

என்று நமக்கு உபதேசிக்கின்ருர் அருணகிரிநாத சுவாமிகள்.

எனவே கட்டிலிருந்து ஆன்மா விடுதலை யடைந்தவர்கள் ஜீவன் முத்தர்கள்.

முத்தர்கள்—விடுபட்டவர்கள்.

**'விடுதலைப்பட்டது விட்டது பாச வினை விலங்கே''**

என்பது கந்கரலங்காரம்.

தாம் தாம் மட்டும் விடுபட்டு முத்தி யின்பத்தை நுகர்கின்றவர்கள் ஜீவன் முத்தர்கள்.

அவதார புருஷர்:

அவதார புருஷர் என்பது ஒருவகை.

பந்தத்தினின்றும் விடுபட்டு முத்தி நிலை யெய்தி பேரானந்தப் பெருவெள்ளத்தை அள்ளிப் பருகி, அதனைப் பருகாத மற்ற மாந்தர்களும் பருகவேண் டும் என்ற பரம கருணையால் தமது நிலையினின்றும் இறங்கி வந்தவர்கள் அவதார புருஷர்கள்.

அவதாரம்—இறங்குவது.

**உதாரணம் :**

ஒரு தனவந்தர்; அவர் தனம் படைத்தவர் மட்டுமன்று; நல்ல மனமும் படைத்தவர். தனம் மனம் இரண்டும் படைத்த அப் புண்ணியவான் ஒரு நாள், ஆரஞ்சி, மங்குஸ்தான், திராக்ஷை, ஆப்பிள், மா, பலா முதலிய பழங்களை உண்டார். பழ ஆகாரம் மிக உயர்ந்தது. ஏழைகளும் இவ்வாறு பழங்களை யுண்ணவேண்டும். ஏழை எளியவர்கட்குப் பழங்கள் எப்படிக் கிடைக்கும்? பழங்கள் தான் கிடைக்கும்; பாவம்! பழம் சத்துணவு; சத்துவ உண்வு!

அது எல்லோருக்கும் கிடைக்கவேண்டும் என்று அவர் கருதினர்; கடையிலிருந்து வாங்கிக் கொடுக்கலாம்; அது என்றென்றும் செய்ய முடியுமா? விளைந்ததைத் தருவது எளிது; எனவே தனக்குச் சொந்தமான நூறு ஏக்கர் நிலத்தை ஒதுக்கினர்.

முதலில் 30 அடி உயரம் ஒரு பெரிய கருங்கல் மதிள் எழுப்பினர்; விவசாயக் கல்லூரியில் தேர்ச்சி பெற்ற அறிஞர்கள் பலரை அழைத்து ஊதியங் கொடுத்தார்; பழ மரங்களையும் செடிகளையும் உண்டு பண்ணுமாறு பணித்தார்.

சேலம் நடுச்சாலை மாங்கொட்டைகளைக் கொல்லி மலைத் தேனில் ஊறவைத்து, (விதையில் இனிமை ஏறும்பொருட்டு) அதன்மேல் கற்கண்டு பொடி தூவி ஆழமான குழிகளில் நட்டு நல்ல உரம் போட்டு, காவிரி நீர் ஊற்றி குழந்தைகளை வளர்ப்பதைப்போல் கண்ணுங் கருத்துமாக வளர்த்தார்கள். அப்படியே

வகை வகையான பலா, முந்திரி, விளா, நாவல், வாழை, கொய்யா, மங்குஸ்தான், ரம்பூட்டான், சாத்துக்குடி, ஆரஞ்சி, கமலா, ஆப்பிள் முதலிய அநேக வகைப் பழமரம் செடிகளை வளர்த்துப் பயிராக்கினர்கள். எல்லாம் பசுமையாகவும் செழுமையாகவும் கொழு கொழு என்று இனிது ஓங்கி வளர்ந்தன; கிராமங்களில் எருமைத் தயிரும் பழையதும் சாப்பிட்டு பிள்ளைகள் வளர்வதுபோல் அச் செடிகள் வளர்ந்து பூத்து, காய்த்துப் பழுத்துப் பயன் தரலாயின.

வாழைகள் குலை தள்ளின. நீண்ட குலைகள்; வேர்ப்பலா பழுத்து வெடித்து மஞ்சள் சுளைகளில் தேன் வடித்தன. ஆரஞ்சிகள் பழுத்து உதிர்ந்தன. எல்லாம் சுவையான பழங்கள்.

இவ்வளவும் ஏற்படுத்திய அன்பு வடிவாய தனவந்தர் மக்கள் சென்று உள்ளே உண்டு உவக்கலாம் என்று அறைகூவியழைத்தார். சிலர் சென்று உண்டு உவந்தார்கள். பலருக்கு இப்படி ஒன்று உண்டு என்பதே தெரியாது. பட்டினியால் பரதவித்தார்கள்.

நாள் செல்லச் செல்ல அநேகருக்கு இந்த உண்மையே தெரியவில்லை. சிலர் 'இந்த மதில் சுவருக்குள் பேய் பிசாசுகள் இருக்கின்றன' என்றனர். அதன் அருகிலே பலர் செல்வதில்லை.

ஒருவன் தைரியமாக ஏணிவைத்து மதில்மேல் ஏறத் தொடங்கினன். பாதி ஏறி வழுக்கி விழுந்து விட்டான். 'கருப்பாக ஒன்று வந்து என்னைத் தள்ளிவிட்டது' என்ருன்.

மற்ருெருவன் முக்கால் மதில் ஏறி வீழ்ந்தான்; இன்ெனுருவன் முக்காலே அரைக்கால் பகுதி ஏறி வழுக்கினுன். முக்காலே மூன்று வீசம் ஏறி வீழ்ந் தவர் பலர். ஒருவர் முழுவதுஞ் சிரமப்பட்டு ஏறி விட்டார். மதில்மேல் நின்ருர். உள்ளே செடிகளிலும் மரங்களிலும் இனிய கனியமுதங்கள் பழுத்துக் குலுங்குகின்றன. சிலர் உள்ளே அவற்றை உண்டு உவக்கின்ருர்கள். மதில்மேல் நின்ற அவர் உள்ளே இருந்தவர்களைப் பார்த்து, “ஐயா! இவைகட்குப் பணம் உண்டா?” என்று வினவினுர். அவர்கள் “காசு பணம் கிடையாது. அவ்வளவும் இலவசமாக உண்ணலாம்” என்ருர்கள். உடனே உள்ளே குதித் தார். கெம்புக் கல்போல் வெடித்துத் தொங்குகின்ற பெரிய பெரிய மாதுளம் பழங்களைப் பறித்தார்; ஒரு குவளையில் பிழிந்தார், குடித்தார். முதுகெலும்பு கூடக் குளிர்ந்துவிட்டன. திராட்சையைப் பிழிந்து பருகுகின்ருர். வேர்ப் பலாவை எடுத்துத் தேனில் நனைத்து விழுங்குகின்ருர். ஆடுகின்ருர்; பாடு கின்ருர். உண்டு உறங்குகின்ருர். இந்த ஏற்பாடு செய்த முதலாளியை நினைத்து அழுகின்ருர்; தொழு கின்ருர்; உருகுகின்ருர்; நன்றி பாராட்டுகின்ருர்.

இவ்வாறு பலர் மதில்மேல் ஏறி ஏறி உள்ளே குதித்தார்கள். கண்டார்கள்; உண்கின்ருர்கள்; உவகையுறுகின்ருர்கள்.

ஒருவர் வெகு துன்புற்று மதில்மீது ஏறினுர். பார்த்தார். பழச் சோலையை வியந்தார்; நயந்தார். உள்ளேயுள்ளவர்களை நோக்கினுர். “அவ்வளவும்

இனுமா?'' என்று கேட்டார். "ஆம்'' என்று பதில் வந்தது.

மதில்மீது இருந்த வண்ணமே இரண்டொரு கனிகளைப் பறித்து உண்டார். "தித்திக்கின்றன. ஆ ஆ!'' என்று கூவினர். எத்தனைப் பழங்கள் கொள்வார் இன்றிக் குவிந்திருக்கின்றன. அந்தோ! இதையறியாத மாந்தர்கள் பஞ்சம் பட்டினியால் வாடி வருந்தி அழிகின்றுர்களே? இவற்றை நான் மட்டும் உண்பது என்ன நியாயம்? இதனை எல்லோருக்கும் அறிவிக்க வேண்டாமா? இவற்றை அனைவரும் அருந்தி ஆனந்திக்க வேண்டாமா? ஆ! ஆ! என்ன அழகிய தோட்டம்! ஏழை மாந்தர் உணவின்றி உலைகின்றுர்களே! இங்கும் அங்கும் அலைகின்றுர்களே! பரிதாபம்! என்று கருதினர்.

மீண்டும் வெளியே குதித்தார். ஐயா! ஐயா! வாருங்கள்; இதோ உள்ளே மாம்பழம், பலாப்பழம், எத்திக்குந் தித்திக்கும் கனிகள், மனிதர்களே வம்மின்; இலவசம்; பணமே கிடையாது. உண்ணுங்கள்.

மனிதர்காள் இங்கே வம்மொன்று சொல்லுகேன்
கனி தந்தால் கனி உண்ணவும் வல்லிரே
புனிதன் பொற்கழல் ஈசன் எனுங்கனி
இனிது சாலவும் ஏசற்றவர்கட்கே. —அப்பர்

ஒன்று கண்டீர் உலகுக்கு ஒரு தெய்வம்
ஒன்று கண்டீர் உலகுக்கு உயிராவது
நன்று கண்டீர் நமச்சிவாயப் பழம்
தின்று கண்டேற்கு இது தித்தித்தவாறே. —திருமூலர்

“ஒன்றும் அறியாத ஏழை மாந்தர்களே! இங்கே வாருங்கள். உள்ளே வந்து பாருங்கள். ஏன் கஷ்டப்படுகின்றீர்கள்? உள்ளே வெள்ளமாக ஓடுகின்றது. என்ன வெள்ளம்? இது இன்பமன்று. பேரின்ப வெள்ளம். அது சிவானந்த போகமென்னும் பேரின்ப வெள்ளம்; கண்டமாகக் கொஞ்சந்தான் என்று கருதாதீர்கள். அகண்டாகாரமாக ஓடிக்கொண்டிருக்கின்றது; எத்தனையோ காலமாகக் கங்கு கரையின்றிப் பொங்கித் ததும்பிப் பூரணமாய் ஏக வுருவாய்க் கிடக்கின்றது. கொள்வார் அதிகமின்றிக் கிடக்கின்றது. உங்கள் அறியாமைதான் என்னே! மதிமயங்கிய மனிதர்களே! வாருங்கள், ‘நாளைக்கு வருகின்றேன்; அடுத்த ஆண்டில் வருகின்றேன். அறுபதுக்குமேல் சஷ்டியப்த சாந்தியானபின் வருகின்றேன். பேரன் பேத்திகள் பிறந்தபின் குடும்பச் சுமையை மகன் தலையில் இறக்கிவிட்டுத்தான் வருவேன். இப்போது எனக்கென்ன வயதாகிவிட்டது? கொஞ்சம் வயது முதிர்ந்தபின் வருவேன்!’ என்றெல்லாம் கூறுதீர்கள். இத் தேகம் எந்தக் கணத்தில் கீழே விழுமோ? இது நிலையில்லாதது. இப்பவோ? பின்னையோ? சற்று நேரத்திலோ. ஆகவே இத் தேகம் விழுமுன் நீங்கள் சேர வாருங்கள். வந்து இச் சிறு சிவபோக அமுதத்தைப் புசியுங்கள். பவப் பசியாறுங்கள். இன்பத்தையடையுங்கள். கவலையைக் கட்டறுத்துக் களிகூறுங்கள்” என்று அழைக்கின்றார். அவர்தான் அவதார புருஷர்.

காகம் உறவு கலந்துண்ணக் கண்டீர் அகண்டா காரசிவ
போகம்எனும் பேரின்பவெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமாய்

ஏக உருவாய் கிடக்குதையோ இன்புற்றிடநாம் இனி எடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேரவாரும் செகத்தீரே

ஆறறிவு படைத்த மனிதர்களைப் பறவைகளுக்கும் விலங்குகட்கும் உதாரணங்காட்டி உபதேசிப்பது முறை.

இங்கே மனிதர்கட்குக் காக்கையை உதாரணங் காட்டி உபதேசிக்கின்ருர்.

நான் உங்களை ஏன் அழைக்கின்றேன் தெரியுமா?

இந்தச் சிவபோக இன்ப வெள்ளத்தை நான் தனித்து உண்ண விரும்பவில்லை. காக்கை கிடைத்த உணவை தனியே உண்பதில்லை; 'காகா' என்று கரைந்து தனது இனத்தையழைத்து ஒன்று கூடி உண்கின்றது. அந்தக் காக்கைக்கு இருக்கின்ற நல்லறிவுகூட மனிதனுக்கு இருக்கவேண்டாமா? கிடைத்ததைக் கதவைச் சாத்திக்கொண்டு தனியே உண்ணலாமா? 'எல்லோரும் வாருங்கள்; சேர்ந்து புசிக்கலாம்' என்று கருணையுடன் அழைக்கின்ருர். இவ்வாறு அழைக்கின்றவர் தாயுமானுர்.

"கற்ற வித்தைகளால் முத்தி வராது. பெரிய பாருளீர் வித்தையினை விடுங்கள். மயிலையும், அவன் திருக்கை, அயிலையும் அவன் கடைக்கண் இயலையும் நினைந்திருக்க வாருமே" என்று மற்றொரு அவதார புருஷர் அழைக்கின்ருர்;

"உங்கள் வித்தை
யினையினி விடும் பெருத்த பாருளீர்
மயிலையும் அவன் திருக்கை
அயிலையும் அவன் கடைக்கண்
இயலையும் நினைந்திருக்க வாருமே" —அருணகிரிநாதர்

"கோழிக் கொடியன் அடிபணியாமல் குவலயத்தே
வாழக் கருதும் மதியிலிகாள்"

என்று கடுமையாக நம்மை வைது அழைக்கின்றார். கருணையின் மிகுதியால்தான் அப்படி வைகின்றார். வேட்டியை அடித்து வெண்மையாக்குவதுபோல், பொன்னைத் தட்டி அணிகலனாகச் செய்வதுபோல், ஆன்றோர்கள் சில சமயம் நம்மை இடித்துக் கூறித் திருத்துவார்கள்.

நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு.

இடிப்பாரை யில்லாத ஏமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும்.

என்று வள்ளுவப் பெருந்தகை கூறுவதைக் காண்க.

ஆதலால், திருவருள் பெற்ற—முத்தி நலமுற்ற ஆன்றோர்கள் இருவகையினர்.

ஒருவர்—ஜீவன் முத்தர்.

ஒருவர்—அவதார புருஷர்.

தாம்மட்டும் முத்தியின்பம் பெற்றவர் ஜீவன் முத்தர்.

பெற்ற இன்பத்தைப் பெறாதவர்கட்கு இடித்துக் கூறிப் பெறவைக்கும் பெருங்கருணைப் பேராளர்கள் ஜீவன் முத்தர்கள். அப்பர் முதலிய சமயகுரவர்கள், ஆழ்வாராதிகள், பட்டினத்தார், அருணகிரியார், திருமூலர், தாயுமானர் முதலியோர் அவதார புருஷர்கள்.

அவர்கள் காட்டிய நெறி சென்று பேரின்பத்தைப் பெறுவோமாக.

# சமரசம்

சமரசம் என்ருல் சிறந்த ஞானிகளின் திருவுள் ளத்தில் எழுந்த சமநோக்கு என்பது ஆகும். சமரசம் என்ருல் எல்லாப் பொருள்களும் ஒன்று என் பது பொருளன்று. எல்லாப் பொருள்களும் ஒரு போதும் ஒன்ருகமாட்டா. பொருள்களில் ஏற்றத் தாழ்வு எக்காலத்திலும் எவ்விடத்திலும் உண்டு. மேடு பள்ளம், அறிஞன் மூடன், சந்தனம் சாணம், தட்பம் வெப்பம், மேல் கீழ், நன்மை தீமை இப்படிப் பொருள்களில் வேற்றுமையுண்டு.

இந்த வேற்றுமை அருள் பழுத்த மெய்ஞ்ஞானி களுக்குத் தோன்றுவதில்லை. அவர்கட்கு எல்லாம் ஒன்ருகவே தோன்றும்; இதற்கு ஒரு உவமை கூறு கின்றேன்.

பழநி மலைக்கு ஒருவன் சென்ருன்; அடிவாரத் தில் சிறிய வீடு பெரிய வீடு, ஓரடுக்கு மாடி, ஈரடுக்கு மாடி, மூன்றடுக்கு மாடிகள் இருக்கின்றன; நிலத் தில் நின்று பார்த்தால் வீடுகளின் ஏற்றத் தாழ்வுகள் காணப்படுகின்றன; மலையேறிப் பார்க்கின்ற அப் போது அவன் கண்களுக்கு எல்லாம் ஒன்ருகிவிட வில்லை. மலைமீது ஏறி உயர்ந்தவனுக்கு ஒன்ருகித் தோன்றுகின்றன.

நிலத்தில் நடப்பவனுக்கு மேடு பள்ளம் தோன்றுகின்றன. விமானத்தில் பறந்து போகிறவ

னுக்கு நிலத்தில் மேடு பள்ளந் தோன்றுவதில்லை. எனவே, நிலத்தில் மேடு பள்ளம் உண்டுதான். மேலே உயர்ந்து பறக்கின்றவனுக்கு மேடு பள்ளம் மறைந்து ஒன்றுபோல் தோன்றுகின்றன.

இதுபோல் தம்மைத்தாமே உயர்த்திக்கொண்ட தவஞானிகட்கு உலகில் உள்ள வேற்றுமைகள் மறைந்து ஒழிகின்றன; எல்லாம் சமமாகக் காட்சி தருகின்றன.

ஞானிகட்கு நிந்திக்கின்றவனும், வந்திக்கின்ற வனும், ஏழையும் செல்வந்தனும், சந்தனமும் சாண மும், நீற்றறையும் தாமரைத் தடாகமும், இரத்தின மணிகளும் பருக்கைக் கற்களும், கற்கண்டும் எட்டிப் பழமும் ஒன்றாகிவிடுகின்றன.

இதனால் பொருள்கள் ஒன்றாகிவிடவில்லை. சந் தனஞ் சந்தனந்தான். சாணஞ் சாணந்தான். சந் தனம் சாணமாகிவிடாது; சாணம் சந்தனமாகி விடாது.

ஞான மலைமீது நிற்கும் அருளாளர்க்கு அவை கள் ஒன்றாகி விடுகின்றன என்று நீவிர் உணர்தல் வேண்டும்.

> "கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்
> ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்"

என்ற பெரிய புராணத் திருவாக்கை உற்று நோக் குங்கள்.

மற்றொரு உவமையுங் கூறுகின்றேன். ஒரு தாய்க்கு நான்கு மக்கள். மூத்தவன் நன்றாகப் படித் துக் கலெக்டர் உத்தியோகம் பார்க்கிறான். அந்த

மாவட்டத்துக்கே தலைவனுகி மாதம் ஒன்றுக்கு இரண்டாயிரம் ரூபாய் ஊதியம் பெறுகிருன்.

இரண்டாவது மகன் படியாத தடி மாடாகத் திரிந்து, தக்க சிபார்சு செய்யப் பில்கலெக்டர் வேலை பார்க்கிருன். மாதம் அறுபது ரூபாய் ஊதியம் பெறுகின்ருன். மூன்ருவது மகன் சிறு கடை வைத்து சிறிய வருவாய் பெறுகின்ருன். நாலாவது மகன் திருடு சூதுவாது வஞ்சனை பொய் முதலிய அணிகலன்களை யணிந்து கடும் வெய்யிலில் கைவண்டி யிழுத்துப் பிழைக்கின்ருன். இந்த நால்வர்களில் எத்துணை வேற்றுமை! சங்கராந்தி தீபாவளி முதலிய நன்னுள்களில் நால்வரும் தாயாரிடம் வந்தார்கள். பெற்ற தாய் கலெக்டரையும், கடைக்காரனையும், கைவண்டி யிழுப்பவனையும் ஒன்றுபோல் அன்பினுல் நோக்கி, ஒன்ருக அமர்த்தி ஒன்றுபோல் அன்னம் படைத்து நெய்விட்டு உபசரிக்கின்ருள். அந்த நால்வர்களும் ஒன்ருகிவிடவில்லை. நிரம்ப அவர்களுக்குள் பெருமை சிறுமையிருக்கின்றன. ஆனுல் கருணையுள்ளம் படைத்த அன்னை ஒன்ருகச் சமரசமாக அருள்புரிகின்ருள். கலெக்டரை மேஜைமீது அமர்த்தியும், வியாபாரியை நடையில் வைத்தும், கை வண்டி யிழுக்கும் கடைசி மகனைத் தெருத் திண்ணைமேல் வைத்துமா அன்னம் படைக்கிருள்? கலெக்டருக்கு நான்கு கரண்டி நெய், பில்கலெக்டருக்கு ஒரு கரண்டி நெய், வியாபாரம் புரியும் மகனுக்கு ஒண்ணரைக் கரண்டி நெய், கைவண்டி யிழுக்கும் பிள்ளைக்குக் கால் கரண்டி நெய்யா விடுகிருள்? இல்லை, இல்லை; எல்லோரையும் சமசரச

மாகப் பார்த்து ஒன்றுபோல் நெய் விடுகின்ருள் அன்னை.

இதுபோல அன்னையினும் தயவுடைய அருளாளர்கட்கு இவன் கீழ்க் குலத்தான், இவன் மேற் குலத்தான், இவன் கற்றவன், இவன் கல்லாதவன், இவன் வறியவன், இவன் தனவந்தவன், இவன் நல்லவன், இவன் தீயவன் என்ற பேத ஞானம் போய் எல்லாம் ஒன்று என்ற அபேத ஞானம் எய்துகின்றது.

படக்காட்சி, கடற்காட்சி, வனக்காட்சி, நந்த வனக் காட்சி, மலைக்காட்சி, பொருட்காட்சி என்று பல காட்சிகள் உண்டு. அருட்காட்சியுடையவர்கள் எல்லாவற்றையும் ஒன்ருகக் கண்டு மகிழ்கின்ருர்கள். இதனை ஔவைப் பிராட்டியார்,

"ஒன்ருகக் காண்பதுவே காட்சி" என்கிருர்.

அருள் ஞானிகட்குச் சாதிவேற்றுமை, சமய வேற்றுமை, நிறவேற்றுமை, மொழி வேற்றுமை முதலிய சகல வேற்றுமைகளும் தோன்றமாட்டா. ஒரே சமரச ஞானம் தோன்ற அகில உலகங்களையும் ஒன்ருகக் காண்பார்கள்.

அருணகிரிநாத சுவாமிகள் சிவயோகத்தைப் பற்றித் தெளிவாக ஒரு திருப்புகழில் கூறியிருக்கின்ருர்.

சுவாமிகள் அருளிச் செய்தது பதினறுயிரம் பாடல்கள். இப்போது கிடைத்திருப்பது ஆயிரத்து முந்நூற்றுப் பதினென்று; இந்தப் பாடல்களில் அடியில் வரும் அமுதப் பாடல் மிகவுயர்ந்தது. சிவயோகத்தை மிகத் தெளிவாகக் கூறுகின்ருர் இப்பாடலில்.

ஐந்து பூதமும் ஆறு சமயமும்
மந்த்ர வேத புராண கலைகளும்
ஐம்பதோர் வித மான லிபிகளும் வெகுருப
அண்ட ராதி சராச ரமும் உயர்
புண்டரீகனு மேக நிறவனும்
அந்தி போலுரு வானும் நிலவொடு வெயில்காலும்
சந்த்ர சூரியர் தாமும் அசபையும்
விந்து நாதமும் ஏகவடிவம் அ
தன்சொரூபம் தாக வுறைவது சிவயோகம்

மண் கடினமானது, புனல் தட்பமானது, கனல் வெப்பமானது, இப்படி மாறுபட்ட ஐம்பெரும் பூதங்களும் ஞானிகட்கு ஒன்ருகத் தோன்றும்.

சைவம், வைணவம், காணுபத்யம், கௌமாரம், சாக்தேயம், சௌரம் என்ற ஆறு சமயங்களும் அவர்கட்கு ஒன்ருகத் தோன்றும்.

ஏழுகோடி மந்திரங்களும், பதினெட்டுப் புராணங்களும், அறுபத்து நான்கு கலை ஞானங்களும், அகாராதி க்ஷகாராந்தமாக அமைந்துள்ள ஐம்பத்தொரு அட்சரங்களும், பற்பல வடிவங்களுடன் கூடிய தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன முதலிய அசைகின்ற உயிர்களும், செடி, கொடி, மரம், மலை முதலிய அசையாத உயிர்களும், பிரமனுந் திருமாலும், திருமாலும், உருத்திரனும், குளிர்ந்த சந்திரனும், வெப்பமான சூரியனும், அஜபா நலமும் ஆகிய அனைத்தும் ஒன்ருகக் கண்டு அருள் வெளியிலே சலனமற்று நிற்கும் ஞான நிலையே சிவயோகம் எனப்படும்.

''கண்டாருங் கிடையாது விண்டாருஞ் சொன்னதில்லை
அண்டரண்ட கோடி யெல்லாம் ஒன்ருய் சமைந்திருக்கும்
அல்லவோ?''

இதை எழுதுவதோ-பேசுவதோ ஐயே மெத்தக் கடினம் என்று கூறுகின்றார் கோபால கிருஷ்ண பாரதியார்.

சிவஞானிகட்குக் குற்றம் குணம் எல்லாம் சிவ மாகவே தோன்றும்.

குற்றம்நீ குணங்கள்நீ கூடலால் வாயிலாய்
சுற்றம்நீ பிரானுநீ தொடர்ந்திலங்கு சோதிநீ
சுற்றநூல் கருத்தும்நீ அருத்தம் இன்பம் என்றிவை
முற்றும்நீ புகழ்ந்துமுன் உரைப்பதென் முகம்மனே!

என்று அருளிச் செய்கின்றார் திருஞான சம்பந்தர்.

இராமருடைய அருட்பார்வை பெற்று அறி யாமை நீங்கப்பெற்று உணர்வு பெற்ற வாலி கூறு கின்றான்:

"ஏவுகூர் வாளியால் எய்து நாயடிய னேன்
ஆவிபோம் வேலைவாய் அறிவு தந்து அருளினாய்
மூவர்நீ முதல்வன்நீ முற்றும்நீ மற்றும்நீ
பாவம்நீ தருமம்நீ பகையுநீ உறவுநீ"

எனவே இறையருளால் திருவருள் ஞானம் பெற்ற ஆன்றோர்கள் எல்லாவற்றையும் ஒன்றாக வைத்துப் பார்க்கின்றார்கள்.

இதுவே சமரசம் எனப்பெறும்; எங்கும் சமரச ஞானம் ஓங்குக.

# சொல்

"பேசப்போனாயோ? சாகப்போனாயோ?" என்பது பழமொழி. பேசுவதுதான் எல்லாவற்றிலும் கடினமானது. மரணத்தை அதற்கு உவமையாகச் சொல்வதால் பேசுவதில் அருமை தெற்றெனத் தெரிகின்றதல்லவா?

உயிர்களையெல்லாம் இருவகையாகப் பிரித்தார்கள். ஒன்று உயர்திணை; மற்றொன்று அஃறிணை. அஃறிணை என்றால் உயர்வு அல்லாத திணையென்று பொருள். உயர்வு தாழ்வு என்று கூறுதல் வேண்டும். தாழ்ந்தவர்களைத் தாழ்ந்தவர்கள் என்றால் அவர்கள் மனம் நோகும். ஆதலால் அல்லாத திணை என்றார்கள். "கற்றவர் விழுங்கும் கற்பகக்கனி......மற்றவர் அறியா மாணிக்கமலை" என்றார். கல்லாதவர்களைக் கல்லாதவர் என்று பேசுதல் கூடாது.

அதுபோல் உயர்திணை அஃறிணை என்று உயிர்களை இரு பிரிவாக்கி இலக்கண நூல் கூறும். இதன் அருமையை உன்னுக. உயர்திணை அஃறிணை என்ற இரு பகுதியின் பாகுபாடு யாது? வாய் திறந்து பேசுகின்ற உயிர்கள் உயர்திணை; வாய்பேசாத உயிர்கள் அஃறிணை. எனவே உயர்வு வாய் மலர்ந்து பேசுவதனாலேயே அமைகின்றது.

இனி அந்தப் பேச்சு அமைய வேண்டும் என்பதைச் சிந்தித்து முடிவு கட்டுவதே இக்கட்டுரையின் நோக்கம்.

பேச்சுக்கு எட்டு அங்கங்கள் உண்டு; அஷ்டாங்கயோகம் என்றும், அஷ்ட புஷ்பம் என்றும் கூறுவதுபோல், பேச்சும் எட்டுவித உறுப்புக்களையுடையது.

பேச்சுக்கு உண்மை, நன்மை, அன்பு, நிதானம், இனிமை, ஆழம், சமயமறிதல், சபையறிதல் என்ற இந்த எட்டுத் தன்மைகள் அமைதல் வேண்டும்.

1. உண்மையே பேசுக.
2. நன்மையே பேசுக.
3. அன்பாகப் பேசுக.
4. நிதானமாகப் பேசுக.
5. இனிமையாகப் பேசுக.
6. ஆழமுடையதாக சிந்தித்துப் பேசுக.
7. சமயம் அறிந்து பேசுக.
8. சபையறிந்து பேசுக.

பேசுவதெல்லாம் பேச்சாகாது. பேச்சு ஒரு சிறந்த கலை.

> "விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது
> சொல்லுதல் வல்லார்ப் பெறின்"

என்று திருவள்ளுவர் திருவாக்கால் அறிக.

சொற்செல்வம் என்றும் இதற்குப் பெயர். சொல்லின் செல்வராக விளங்கினர் அநுமந்தர். சொல்லுக்கு உள்ள ஆற்றல் வில்லுக்கும் கல்லுக்கும் கிடையாது. அதனுதல்ான் திருவள்ளுவர்,

> "வில்லே ருழவர் பகைகொளினும் கொள்ளற்க
> சொல்லே ருழவர் பகை"

என்கின்ருர்.

காற்றினும் கடிய வேகமுடையது சொல். அதனால் கம்பநாடர், "சொல்லொக்கும் கடிய வேகச் சுடுசரம்" என்கின்றார்.

நாம் கடிதங்கள் எழுதும்போது நலம் என்று எழுதுகின்றோம்; அவ்விடம் நலங்களை எழுதுங்கள் என்றும் எழுதுகின்றோம். நலமறிய விரும்புகின்றோம். நலங்கள் பல; மனை நலம், மக்கள் நலம் தன நலம்; மன நலம், இன நலம், பிணியிலா நலம், நில நலம், உணவு நலம்;- இப்படிப் பல நலன்கள் உண்டு. அவற்றுள் தலையாய நலம் நா நலம்.

> "நா நலம் என்னும் நலனுடைமை அந்நலம்
> யாநலத் துள்ளதூஉ மன்று"

என்பது பொய்யாமொழி.

எந்நலத்தினும் உயர்ந்தது சொன்னலம். இச் சொன்னலம் பன்னலமும் பயக்கும். சொல்லிலே இறைவன் உறைகின்றான்.

"இறைவன் எங்கே யிருக்கின்றான்?" என்று இரணியன் வினவிய வினவுக்குப் பிரகலாதர் "சொல்லினும் உளன்" என்று விடை பகர்ந்தார்.

சொல்லானது நலங்களின் கருவூலம் என உணர்க.

இனி அந்தச் சொல்லின் உறுப்புக்கள் எட்டு என்று முன்னே கண்டோம் அல்லவா? அதனைப் பற்றி நினைவு செய்தல் வேண்டும்:

முதலாவதாக :—

சொல் உண்மையுடன் கூடியதாக இருக்க வேண்டும்.

வேதம் தொடங்கும்போதே "சத்யம் வத" என்று கூறுகின்றது. சத்தியத்தைப் பேசு என்பது இதன் பொருள்.

சத்தியமே நித்தியம். கடவுள் சத்திய வடிவினர். சத்திய உபாசனை புரிபவர் நித்திய வாழ்வு பெறுவர்.

"பொய்வளரு நெஞ்சினர்கள் காணாத காட்சியே
பொய்யிலா மெய்யர் அறிவியல்
போதபரிபூரண அகண்டிதா காரமாய்ப்
போக்கு வரவற்ற பொருளே"

என்கின்றார் தாயுமானார்.

பயிருக்கு முள் வேலி, உயிருக்கு உண்மை வேலி.

சத்தியத்தால் உயர்ந்தவன் அரிச்சந்திரன்.

சத்தியத்திற்காக தயரதர் தன் உயிரையே தியாகஞ் செய்துவிட்டார்.

காணாத முடிவைக் கண்டேன் என்று பொய்யுரை புகன்ற பிரமதேவருக்கு ஆலயம் இல்லாத குறைவு ஏற்பட்டது. பொய்க்கரி புகன்ற தாழை சிவபூசைக்குப் பயன்பெறா தொழிந்தது.

ஆகவே உண்மையே உரைக்க.

இரண்டாவது :—

நன்மையே பேசுக. உண்மை பேசினால் மட்டும் சிறப்பில்லை. உண்மையில் நன்மை கலந்திருக்க

வேண்டும். நன்மை விரவாத உண்மை உயர்வு பெறுது.

ஒருவன் ஒரு கோவிலில் ஜபம் புரிந்து கொண்டிருக்கின்றுன். ஒரு பெண்மணி வழிபாட்டுக்கு வந்தாள். ஒரு குடியன் குண்டாந்தடி எடுத்துக் கொண்டு அவளை புடைக்கும் பொருட்டு வந்து, "ஐயா! இங்கே வந்த பெண் எங்கே?'' என்று வினவினுன். இங்கே உண்மை பேசினுல் அந்த மங்கை அடிபட்டுத் துன்புறுவாள். ஆதலால் இங்கே உண்மைக்கு உயர்வில்லை நன்மையாகப் பேச வேண்டும். இம்சை விளையும்; உண்மை உண்மை யாகாது.

''வாய்மை எனப்படுவ தியாதெனில் யாதொன்றும்
தீமை யிலாத சொலல்''

என்கின்றுர் திருவள்ளுவர்.

மூன்றுவது :—

அன்புடன் பேசுக—அன்பு கலவாத—இனிமையோ கனிவோ இல்லாத பேச்சு நன்மையாகாது.

இன்சொலால் ஈரம் அளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்

யாரிடம் அன்பு கலந்து பேசுதல் வேண்டும். அன்புடைய பேச்சு செவியைக் குளிர்விக்கும், சிந்தையைக் குளிர்விக்கும். ஊன், உள்ளம், உணர்வு, உயிர் எல்லாவற்றையும் குளிர்விக்கும்.

மலருக்கு மணம் இன்றியமையாததுபோல், வாழ்வுக்கு ஒழுக்கம் இன்றியமையாததுபோல், பேச்

சுக்கும் அன்பு இன்றியமையாதது. ஆகவே பகை வனிடத்தும் அன்பாகப் பேசுதல் வேண்டும். முதல் நாள் போரில் ஸ்ரீராமர் இராவணனிடம் பேசிய பேச்சு, இன்றும் உன்னுந்தொறும் உள்ளத்தை உருக்குகின்றது அல்லவா?

ஆளையா உனக் கமைந்தன மாருதம் அறைந்த
பூளை யாயின கண்டனை இன்றுபோய்ப் போர்க்கு
நாளை வாவென நல்கினன் நாகிளங் கமுகின்
வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்

நான்காவது :—

நிதானமாகப் பேச வேண்டும். வெடுவெடு என்றும் வேகமாகவும், விமான வேகத்திலும் பேசு தல் கூடாது. பேச்சில் அமைதி இருக்க வேண்டும். உணவு உண்ணும் போது அவசரம் அவசரமாக விழுங்கக் கூடாது. இறைவனுக்கு மலர் வேகமாக அர்ச்சிக்கக்கூடாது. அதுபோல் மெல்ல நிதான மாகப் பேசி கேட்பார்ப் பிணிக்குந் தகையவாய், கேளாரும் வேட்ப மொழிதல் வேண்டும். இப்படிப் பேசும் பெருமையுடையவர் தருமர் என உணர்க.

இதனை நாவடக்கம் என்பர் திருவள்ளுவர்.

எல்லாம் உணர்ந்து உவியாதன் இயம்பியவச்
சொல்லாலே நாவயர்ந்தான் சோமேசா—வல்லமையால்
யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு

—சோமேசர் முதுமொழி வெண்பா

அடக்கமின்றி பேசிக் கெட்டவர் பலர். யாராலே கெட்டான் என்றால் நோராலே கெட்டான் என்று தெலுங்கிலே ஒரு பழமொழி.

இராசசூயம்என்ற வேள்விமுற்றியபின் துரியோதனன் தனது துணைவர்களுடன் தருமருடைய அழகிய சபா மண்டபத்துக்கு வந்தான். குளமில்லாத இடத்தைக் குளம் என்றும், குளமுள்ள இடத்தைக் குளமில்லாத இடமென்றும் கருதி, ஆடையைத் தூக்கியும் குளத்தில் வீழ்ந்தும் இடர்ப்பட்டான். அப்போது திரௌபதி 'இவன் தந்தைக்குத்தான் விழியில்லையே? இவனுக்கும் விழியில்லையோ?' என்று அவையில் நாவடக்கமின்றிச் சொன்னாள். அதன் விளைவுதான் பாரதத்தில் திரௌபதியும் பாண்டவரும் இடர்ப்பட்டது. ஆகவே, சொல்லை அளந்து பேசவேண்டும். பிறர் மனம் நோகுமாறு படபடப்பாகப் பேசுதல் ஒரு போதும் கூடாது.

ஐந்தாவது :—

இனிமையாகப் பேசுக. பேச்சுக்கு உயிர்நாடி இனிமை. இனியவை கூறல் என்ற ஒரு அதிகாரம் வகுத்தார் திருவள்ளுவர். பணிவும் இன்சொல்லுமே ஒருவனுக்குச் சிறந்த ஆபரணம். இவையன்றி வேறு அணிகலன்கள் இல்லை என்றார்.

"பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவர்
கணியல்ல மற்றுப் பிற"

பாண்டவர்கள் மகாப்பிரஸ்தானம் என்ற ஒரு விரதத்தை மேற்கொண்டு, சொர்க்கம் போகின்ற போது பீமன் கீழே விழுந்து மாண்டுவிட்டான். ஏன் அவன் விழுந்தான்? என்று ஜனமேஜயன் கேட்டான். "இன்சொல் இல்லாத ஒரே ஒரு குற்றத்தினால் பீமன் விழுந்துவிட்டான்" என்றார் வைசம்பாயனர்.

உலகத்தை எல்லாம் வசப்படுத்தும் உபாயம் இன்சொல் என்று கண்ணபிரான் கூறுகின்றார்.

ஆறுவது :—

ஆழமுடையதாகச் சிந்தித்துப் பேசுக. பேச்சில் ஆழம் இருக்க வேண்டும். அது சிந்தித்துப் பேசும் பேச்சில் சித்திக்கும்.

சகுந்தலை தன் மகனுடன் துஷ்யந்தனுடைய அரசவைக்குச் சென்றாள்.

துஷ்யந்தன், "பெண்ணே நீ யார்? உன் கணவன் யார்? இம் மைந்தன் யாவன்? இங்கு ஏன் வந்தாய்?" என்றெல்லாம் வினவினான். இத்தனை வினாக்களுக்கும் ஆழமாகவும், அழகாகவும், சிந்தித்தும் சகுந்தலை சொன்ன விடை:

"மகனே பரதா! உன் தந்தையை வணங்கு" என்றாள். மன்னவன் வினவிய வினாக்கள் அத்தனைக்கும் இதில் விடையிருப்பதை ஆழ்ந்து சிந்திக்க.

ஏழாவது :—

சமயமறிந்து பேசுக. சமய சந்தர்ப்பம் அறிந்து பேசுவது நமக்கு மிகுந்த நன்மைகளைக் கொடுக்கும்.

ஒருவன் மகிழ்ச்சியாக இருக்கும்போதும், நமது தயவை நாடும்போதும் பேசிப் பயன் பெறவேண்டும்.

ஒரு புலவர் அம்பிகையிடம் கூறுகின்றார்:

"தேவீ! நான் பாவி. அநேக பாவங்கள் செய்து விட்டேன். அப்பா என்மீது கோபிப்பார். நீ நல்ல தருணம் பார்த்துக் கூறி, என் குறைகளை மன்னிக்குமாறு செய்" என்று பாடுகிறார்.

ஆய்முத்துப் பந்தரின் மெல்லணை மீதுன் அருகிருந்து
நீமுத்தந்தாவென அவர்கொஞ்சும் வேளையில் நித்தநித்தம்
வேய் முத்தாரோடென் குறைகளெல்லாம் மெல்லமெல்லச்
சொன்னால்
வாய்முத்தம் சிந்திவிடுமோ நெல்வேலி வடிவன்னையே

தலைவனிடம் சமயமறிந்து குறைகளைக் கூறிப் பணியாளர் நலம்பெற வேண்டும். மனைவி கணவனிடம் நேரம் அறிந்து கூறி, குறை நீக்கி நிறைவு பெறவேண்டும். குழம்பு-ரசம் பக்குவத்தில் தாளிதம் புரிவதுபோல் நேரமறிந்து பேசுவோர் சாரம் பெறுவர்.

எட்டாவது :—

அவையறிந்து பேசுக.

"அவையறிந்து ஆராய்ந்து சொல்லுக சொல்லின்
தொகையறிந்த தூய்மையவர்"

என்பார் திருவள்ளுவர்.

அவையறிந்து கூறுந்திறம் விரிவுரையாளர்கட்கு மிகமிக இன்றியமையாதது. எவை அறிந்தாலும் அவையறிதல் வேண்டும். அவையறியாது பேசும் பேச்சு நோயறியாது கொடுக்கும் மருந்துபோல் தீமையளிக்கும். ஆதலால் அவை அறிந்து பயனுடைய சொற்களால் விளக்கமாகவும், சுருக்கமாகவும், உருக்கமாகவும் பேசவேண்டும்.

எனவே, உண்மையாகவும் நன்மையாகவும், அன்பாகவும், நிதானமாகவும், இனிமையாகவும், ஆழமாகவும், சமயமறிந்தும் பேசுக.

முடிவில் பேசாமல் இருந்தும் பழக வேண்டும்.

"ஆசா நிகளந்துகளாயினபின்
பேசா அநுபூதி பிறந்ததுவே! —கந்தர் அநுபூதி

# மனம்போல் வாழ்வு

ஒருவனுடைய வாழ்வு அவருடைய மனத்தின் நினைவு நலத்திற்குத் தக்கவாறுதான் அமையும்.

மனம் ஒரு கத்தி போன்றது. கத்தி மாம்பழம் நறுக்கவும் உதவும், பிறருடைய தலையை அறுக்கவும் உதவும். அதுபோல் மனம் நன்மை நினைக்கவும் ஆகும்; தீமை நினைக்கவும் ஆகும். நலந் தீங்கு இரண்டுக்கும் நமது மனமே பரமகாரணம் என்று உணர்க.

மனத்தில் நெடுங்காலமாக மாசு ஏறியுளது. அந்த மாசினை நாம் அகற்றவேண்டும் என்று முயல்வதில்லை. "ஏன், மனதில் மாசு படிந்துள்ளது?" என்ற எண்ணமேயில்லை.

பாத்திரங்களை அன்றாடம் விளக்குகின்றோம். பல் விளக்குகின்றோம், அன்றாடம் ஆடைகளைத் தோய்க்கின்றோம். கண்ணாடி முதலியவற்றைத் தினம் துடைக்கின்றோம், நமது மனத்தை மட்டும் துடைப்பதில்லை. பெரிய அறம் எது என்றால் மனத்தின் மாசினையகற்றுதலாம். மற்ற எல்லாம் ஆரவார நீர்மையவாம்.

மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற —திருக்குறள்

மனத்திலே தூய்மையில்லாதவர் புரியும் மாதவும் நன்து பயன் தராது.

"மனத்திலோர் தூய்மையில்லை வாயிலோர் இன்சொல் இல்லை
சினத்தினால் செற்றம் நோக்கி தீவினை விளிவன் வாளா
புனத்துளாய் மாலையானே பொன்னிசூழ் திருவரங்கா
எனக்கினி கதியென் சொல்வாய் என்னையா
ளுடையகோவே!"

என்று தொண்டரடிப் பொடியாழ்வார் பாடுகின்றார்'

தோய்க்காத துணியில் அழுக்கேறுவது போல் அற நூல்களைக் கல்லாத—அறநெறிகளைக் கேளாத நெஞ்சில் அழுக்கேறி விடுகின்றது.

"அழுக்கு நெஞ்சினேன் பொய்யல தறியேன்
அநங்கனார்மயல் ஆழத்தில் வீழ்ந்தேன்
பழுக்கு மூடருள் சேர்ந்திடுங் கொடியேன்
பாவியேன் எந்தப் பரிசுகொண் டுய்வேன்
மழுக்கை யேந்திய மாசிலா மணிக்குள்
மன்னி யோங்கிய வளரொளிப் பிழம்பே
வழுக்கிலார் புகழ் தணிகையென் னரசே
வள்ளலே என்னை வாழ்விக்கு மருந்தே"

என்று அருட்பிரகாச வள்ளலார் முறையிடுகின்றார்.

மாசுடைய மனத்தினர் நினைத்த கருமங்கள் ஒன்றுங் கைகூடா. மாசிலா மனத்தினர் நினைத்த கருமங்கள் தெய்வத் திருவருளால் அனைத்தும் இனிது கைகூடும். கன்மனங் கரைந்து நன்மனம் பெற்றோர் மனத்தை இறைவன் கோயிலாக்கொண்டு வீற்றிருப்பான்.

"நினைப்பவர் மனங் கோயிலாக் கொண்டவன்"

—அப்பர்

"மருவு மடியார்கள் மனதில் விளையாடு
மரகத மயூரப் பெருமாள் காண்"

—அருணகிரிநாதர்

மனத்திலே கோணலும் அமைந்துவிடுகின்றது; கோணல் மனம் படைத்தவர்கள் பலர். கோடிய மனத்தால் தேடிய பாவம் எண்ணிறந்தன. கோணல் மனம் படைத்தவர் நல்லவர்களையும் அந்தக் கோணல் மனத்தாலே கண்டு, அவர்கள்மீது பழி பாவங்களைச் சுமத்திப் பேசுவார்கள்.

தூயவர்களைத் தீயவர்களாகவே பார்ப்பார்கள். கோணல் மனம் உள்ளவர்கள் நேர்வழியில் நடக்க மாட்டார்கள். கோணல் வழியில்தான் நடப்பார்கள். அவர்கள் நினைவிலே கோணல்; பேச்சிலே கோணல்; செயலிலே கோணல்; இப்படி எல்லாமே கோணலாக அமைந்திருக்கும். இவ்வளவுக்கும் மூலகாரணமான மனத்தில் கோணல் இருப்பதுவேயாகும். ஆகவே, அறிஞர்கள் தம் கோணல் மனமான இரும்பை ஞானத்தீயில் காய்ச்சி, நீதி நூலாகிய சம்மட்டியினால் அடித்து நிமிர்த்த வேண்டும்.

நாம் நமது மனத்தால் பிறரை நன்கு மதித்து அன்பு செய்தால், அவர்களும் நம்மை மதித்து அன்பு செய்வார்கள். நாம் அவர்களை மதியாதிருப்பின், அவர்களும் நம்மை மதியாது புறக்கணிப்பர்.

அன்றியும் நாம் மனைவியை உள்ளன்புடன் பேணிப்பிரியமாக நடத்தினால், மனைவியும் உள்ளன்புடன் கள்ளங்கபடுஇன்றி நம்மைப் பேணி உபசரிப்பாள்.

நாம் மனைவியை சதா வெறுத்து ஒறுத்தால், அவளும் மறுத்து வருந்துவாள்.

"யத் பாவம் தத்பவதி"
என்று வடமொழியில் கூறுவர்.

எப்படி நினைக்கின்ருேமோ, அப்படி விளைகின்றது.

ஒரு நகரில் பெரிய சந்தனக் கட்டை விற்கும் வியாபாரி இருந்தான். அவன் பெருந் தனவந்தன்.

மாலை நேரத்தில் அந்நகரையாளும் மன்னவர் தமது மணித்தேரின் மீது கடைவீதி வழியே சென்று, நகர வெளியில் போய் உலாவிவிட்டு மறுபடியுந் தேரேறி அரண்மனை சேருவார்.

அங்ஙனம் செல்லும்போது, சந்தனக் கட்டை வியாபாரி கடையைவிட்டிறங்கி நின்று மன்னவரைக் கரங்கூப்பித் தொழுவார். மன்னவரும் கை குவித்துக் கும்பிடுவார். இப்படி தினந்தோறும் நிகழும்.

ஒருநாள் மன்னர் வழக்கம்போல் சென்ருர். சந்தனக் கட்டை வியாபாரி எழுந்து நின்று வணங்கினுர். மன்னவருக்கு அன்று என்னமோ அவர்மீது ஒரு வெறுப்பு ஏற்பட்டது. பதிலுக்குக் கும்பிடவில்லை. காரணந் தெரியாத வெறுப்புணர்ச்சி, மனதில் அவரைப் பற்றி அருவருப்பு. சந்தனக் கட்டை வியாபாரியான செட்டியாரையேநினைத்துக்கொண்டு சென்ருர்.

மன்னரிடம் மறுநாள் ஒரு மகான் வந்தார். அவர் திரிகாலஞானி. மனத்தில் இருப்பதனையறியும் மகிமை வாய்ந்தவர். அவரை அரசர் பெருமான்

அஞ்சலி செய்து, ஆசனத்தில் அமரச் செய்து, பாலுந் தேனுந் தந்து உபசரித்தார்.

"சுவாமி! ஒரு சிறு சந்தேகம். கடைவீதியில் ஒரு பிரபல சந்தனக்கட்டை வியாபாரி உள்ளார். அடியேன் அவ்வழியே போகும்பொழுது தினந்தோறும் அந்தச் செட்டியார் எழுந்து என்னைக் கைகூப்பித் தொழுவார். நானும் அவரை வணங்குவேன். நேற்று நான் போகும் போது அவர் என்னைத் தொழுதார். எனக்கு என்னவோ அவரிடம் காரணமில்லாமல் ஒரு வெறுப்பு ஏற்பட்டது. கும்பிடக் கை மறுத்துவிட்டது. குருநாதா! இதன் காரணம் அறியாது மனம் தத்தளிக்கின்றது. எல்லாந் தெரிந்த தாங்கள்தான் இதனை விளக்க வேண்டும்" என்றார்.

சாதுமகான் "வேந்தே! இந்த வினாவிற்கு மூன்று நாட்களுக்குப் பின்னர் கூறுவேன். இன்று நீர் போகும் போது உமது மனம் நினைக்கும் நிலைமையை நாளை என்னிடமும் கூறும்" என்றார். மறுநாள் காலை மறுபடியும் சாதுமகான் அரசனிடம் வந்தார். அரசன் தொழுதான். "அரசே! நேற்று கடைவீதியில் செட்டியாரைக் கண்டீரா? உன் மன நிலை எப்படியிருந்தது?" என்று சாது கேட்டார்.

"சுவாமி! அந்த ஆள்மீது நேற்றும் எனக்கு ஒரே வெறுப்புத்தான் ஏற்பட்டது. அவனைச் சுட வேண்டும் போல் தோன்றியது" என்றான் மன்னன்.

"நல்லது" என்று கூறிவிட்டுச் சாது போய்விட்டார். மூன்றாவது நாள் வந்தார். "மன்னரே! இன்று மாலை உனக்கு அவனிடம் என்ன மாதிரி மன

நிலை அமைகிறதென்று பார்த்துக் கூறு; நான் நாளை வருகின்றேன்'' என்று கூறிவிட்டுச் சென்றார்.

அன்று மாலை அரசன் கடைவீதி வழியே போகும் பொழுது சந்தனக்கட்டை வியாபாரி எழுந்து வழக்கம் போல் கைகூப்பித் தொழுதான். அரசரும் அன்புடன் கைகுவித்துக் கும்பிட்டார். அன்று அச்செட்டியார் மீது ஒன்றும் வெறுப்பு ஏற்படவில்லை; அவருக்கு ஆச்சரியம். மன நிலை இப்படி மாறியதற்கு என்ன காரணம் என்று விளங்கவில்லை.

அடுத்த நாள் காலை அம் மகான் வந்தார். அரசனைக் கண்டு சிரித்தார். ''இறைவனே! நேற்று உன் மனம் மாறியிருக்குமே? நீ கும்பிட்டிருக்க வேண்டுமே'' என்று கேட்டார்.

''ஆம் சுவாமீ! இப்படி மன நிலை மாறிய காரணத்தைத் தேவரீர் கருணை செய்து கூறவேண்டும்'' என்றான் அரசன்.

''வேந்தே! அதற்குரிய காரணத்தை நான் கூறுகின்றேன் கேள். அந்தச் சந்தனக்கட்டை வியாபாரியிடம் நிரம்பச் சந்தனக் கட்டைகள் இருந்தன. அவனுக்கு மூன்று நாட்களுக்கு முன் ஒரு புதிய நினைவு வந்தது.

''நம்மிடம் சந்தனக்கட்டை ஏராளமாக இருக்கின்றதே! மன்னருடைய அரண்மனையில் யாராவது இறந்துவிட்டால் நம்மிடமுள்ள சந்தனக்கட்டை முழுவதுந் தீர்ந்துவிடுமே! (அரசர்கள் இறந்தால் அவர்களுடைய சரீரத்தைச் சந்தனக்கட்டையில்

தகனம் புரிவது வழக்கம்.) ஆகவே, நமது மன்னரோ, மன்னருடைய தாயாரோ, மன்னருடைய மனைவியாரோ மாண்டால் நமக்கு நலம் விளையும்'' என்ற எண்ணம் அவனுக்கு வந்தது. இந்த நினைவு கொண்டபடியால் அவனிடம் உனக்கு வெறுப்புணர்ச்சி ஏற்பட்டது.

நான் நேற்று காலை அவனிடம் உள்ள சந்தனக் கட்டை முழுவதையும் விலைக்கு வாங்கிவிட்டேன். உடனே அவனுக்கு அந்தத் தீய எண்ணம் அகன்றது. அதனுல் இன்று உனக்கும் அவனிடம் ஏற்பட்ட அருவருப்பு அகன்றது'' என்று சாதுமகான் கூறினுர்.

ஆதலால் நாம் நினைக்கின்ற தூய நினைவு, தீய நினைவு அலைகள் சென்று மீளவும் நம்பால் வந்து ஒடுங்குகின்றன.

ஒரு குளத்தின் நடுவில் ஒரு கல்லை எறிந்தால் நாலு பக்கங்களிலும் அலை புறப்பட்டு, ஒரு அலை மற்ருெரு அலையையுண்டாக்கி, அந்த அலை வேருெரு அலையையுண்டாக்கி, முடிவில் கரையில் பேரலையாக மோதி, மறுபடியும் அந்த அலை சிறிது சிறிதாகத் தேய்ந்து புறப்பட்ட இடத்திலே சென்று முடிவு பெறுகின்றது. அதுபோல நாம் எல்லோரும் வாழ வேண்டும் என்று தூய நினைவு அலை பிறரிடம் சென்று அவர்களிடமிருந்து மீண்டும் நம்மிடம் வந்து ஒடுங்குகின்றது.

அவன் கெடவேண்டும், இவன் கெடவேண்டும் என்று எண்ணுகிற தீய நினைவு அலைகள் சென்று,

மீளவும் நம்பால் வந்து நம்மைத் தாக்குகின்றன. ஆகவே, தூய நினைவால் நாம் வாழ்வோம். தீய நினைவால் நாம் வீழ்வோம். இந்த இரகசியம் வெகு பேருக்குத் தெரிவதில்லை. ஆகவே மனம்போல் வாழ்வு அமைகின்றது.

நல்மனம் படைத்தவர்க்கு நல்வாழ்வும், தீய மனம் படைத்தார்க்கு அல்வாழ்வும் உண்டாகும்.

மக்கள் யாவரும் இதனை நன்கு உணர்ந்து, உலகமெல்லாம் வாழட்டும், ஊராரெல்லாம் வாழட்டும், உயிர்களெல்லாம் வாழட்டும், சராசரமெல்லாம் வாழட்டும் என்று எண்ணுதல் வேண்டும்.

நாடெங்கும் வாழக் கேடொன்றுமில்லை.

மனம்போல் வாழ்வு.

# உபதேசம்

காசிப முனிவர் என்பவர் மிகப்பெருந் தவச் சீலர். இவர் உலகத்திற்கே மூலமானவர். உலகில் உள்ள எல்லா வகையான உயிரினங்களுக்கும் இவர் தான் தந்தை.

இவருக்குப் பதின்மூன்று மனைவியர்.

அதிதி, திதி, தனு, சாலை, தனுயு, சிம்ஹிகை, குரோதை, பிராதை, விச்வை, விநதை, கத்துரு, கபிலை, முனி.

இப் பதிமூன்று பெண்மணிகளும் தட்சப்பிரசாபதியின் புதல்வியர்கள்.

அதிதி வயிற்றில் ஆதித்தனும், இந்திரன் முதலிய தேவர்களும் பிறந்தார்கள்.

திதி வயிற்றில் தைத்தியர்கள் பிறந்தார்கள்.

தனு வயிற்றில் தானவர்கள், இரணியன் முதலியவர்கள் பிறந்தார்கள்.

விந்தை வயியிற்றில் கருடன் முதலிய பறவைகள் பிறந்தன.

கத்ரு வயிற்றில் ஆதிசேடன் முதலிய நாகர்கள் பிறந்தார்கள்.

காசிபருக்கு உரியது என்ற பொருளில் இம்மண்ணுலகம் காசினி என்று பேர் பெற்றது.

இத்தகைய மாதவ முனிவருக்கு, மாயை என்பாளிடம் சூரபன்மன், சிங்கமுகன், தாரகன், அசமுகி என்பவர் மிகப் பெருந்திறலினராகப் பிறந்தார்கள்.

சூரபன்மன் முதலியோர் தந்தையாகிய காசிப முனிவரைத் தொழுது, எமக்குச் சிறந்த உபதேசம் புரியவேண்டும் என்று கேட்டார்கள்.

அவ்வண்ணம் கேட்ட மக்களுக்குக் காசிப முனிவர் அடியில் வரும் அரிய உபதேசத்தைச் செய்வாராயினுர்.

இது கந்த புராணத்தில் சிறந்த ஒரு பகுதி.

இதனை அன்பர்கள் படித்து மறவாமல் மனத்தில் அமைத்து, அதன்படி ஒழுகினுல் ஆன்ம லாபம் பெறுவர்.

உறுதிய தொன்றினை உணர்த்து கின்றனன்
அறைகழல் மைந்தர்காள் அரிய மாதவ
நெறிதனில் மூவிரும் நிற்றிர் அன்னதன்
முறைதனை வாய்மையான் மொழிவன் கேண்மினே.

புலவர்களே! நீங்கள் மூவரும் சிறந்த தவநெறியில் நிற்பீர்களாக. அந்த நெறியை உண்மையாக உரைக்கின்றேன். ஒருமைப்பட்ட மனத்துடன் கேளுங்கள்.

அறிவின் மிக்க ஆன்றேர்கள் ஆராய்ந்து அறியக் கூடிய பொருள்கள் மூன்று இருக்கின்றன. வேதங்கள் எல்லாம் அப்பொருளைப்பற்றி மொழிகின்றன.

1. பதி.
2. பசு = உயிர்கள்.
3. பாசம் = தளை.

சான்றவர் ஆய்ந்திடத் தக்கவாம் பொருள்
மூன்றுள மறையெலாம் மொழிய நின்றன
ஆன்றதோர் தொல்பதி; ஆழியிர்த்தொகை
வான்றிகழ் தலையென வகுப்பர் அன்னவே!

பதி :—

அளித்தல், காத்தல், ஒடுக்குதல். மறைத்தல், அருளல் என்ற ஐம்பெருந் தொழில்களை உயிர்களின் பொருட்டு பெருங்கருணையினல் புரிகின்ற நீலகண்டராம் சிவபெருமான் பதி என்று வேதம் விளம்புகின்றது.

அளித்திடல் காத்திடல் அடுதல் மெய்யுணர்
வொளித்திடல் பேரருள் உதவலே யெனக்
கிளத்திடு செயல்புரி கின்ற நீலமார்
களத்தினன் பதியெனக் கழறும் வேதமே!

வேண்டுதல் வேண்டாமையில்லாத இறைவனுடைய தன்மையை யாராலும் இயம்ப வொண்ணுது. வேதங்களும் விளக்கமாகக் கூறமாட்டாது மயங்கும். ஆதலால் ஈசனுடைய புகழ் வேதாகமங்களுக்கும் எட்டாதது.

பசு :

உயிர்கள், ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களுள் மூழ்கியிருக்கின்றன. அரிசி உமி, முளை, தவிடு என்ற மூன்றுடன் கூடியிருப்பதுபோல் என அறிக.

உயிர்கள் எண்ணில்லாதன. உயிர்கள் அநாதியாக இருப்பன. ஒரு காலத்திலே தோன்றியவல்ல. என்றைக்கும் உள்ளவை என அறிக.

நல்வினை தீவினை யென்ற இரு வினைகளின் திறத்தினுல் ஒழிவின்றி பிறப்பதும் இறப்பதுமாக இருக்கின்றன.

மூவகை யெனுந்தளை மூழ்கி யுற்றிடும்
ஆவிகள் உலப்பில அநாதி யுள்ளன
தீவினை நல்வினைத் திறத்தின் வன்மையால்
ஓவற முறைமுறை உதித்து மாயுமே

இங்ஙனம் உயிர்கள் மண்ணில் பிறக்கும்; நீரில் பிறக்கும்; நெருப்பிற் பிறக்கும்; காற்றில் பிறக்கும்; விண்ணிலும் பிறக்கும். ஆதலால் ஓரிடத்தில் அவ் வுயிர்கட்கு நிலைத்த தன்மையில்லை. காற்ருடிபோல் உழல்கின்றன.

பாரிடை உதித்திடும் பாரைச் சூழ்தரும்
நீரிடை உதித்திடும் நெருப்பில் வாயுவில்
சீருடை விசும்பிடைச் சேரும் அன்னவைக்
கோரிடை நிலையென உரைக்கற் பாலதோ.

மேலும் அந்த உயிர்கள் மனிதர்களாகப் பிறக்கும், விலங்குகளாகப் பிறக்கும், ஆகாயத்தில் பறக்கின்ற பறவைகளாகப் பிறக்கும். புல்லாகவும், மரம் செடி கொடி மலைகளாகவும் பிறக்கும்; திசை காக்கின்ற தேவர்களாகவும் பிறக்கும்.

அண்டஜம் — முட்டையில் பிறப்பன
சுவேதஜம்— வேர்வையில் பிறப்பன
ஜராயுஜம்— கருவில் தங்கிப் பிறப்பன
உத்பீஜம் நிலத்தில் வெடித்துப் பிறப்பன.

இந்த நால்வகைப்பட்டதோற்றங்களில் தாவரம், நீர் வாழ்வன, ஊர்வன, நடப்பன, பறப்பன, மனிதர், விலங்கு என்ற ஏழு வகைப்பட்டப் பிறப்புக்களையும்

மாறி மாறி வினைகளுக்கு ஏற்ப உயிர்கள் பிறக்கின்றன.

மக்களாம் வுலங்குமாம் மாசில் வானிடைப்
புக்குலாம் பறவையாம் புல்லுமாம் அதில்
மிக்கதா வரமுமாம் விலங்கல் தானுமாம்
திக்கெலாம் இறைபுரி தேவும் யாவுமாம்.

உயிர்கள் பிறப்பதற்குமுன் கருவில் இருந்தபடியேயும் மாயும்; பிறந்த பின்னரும் இறக்கும்; சிலநாள் இருந்து மாளும்; நல்ல காளைப் பருவமடைந்து மரணமடையும்; கிழப்பருவம் எய்தியும் முடிவடையும். அதன் நிலையாமையைக் கூறமுடியாது.

பிறந்திடு முன்செலும் பிறந்த பின்னர்மெய்
துறந்திடும் சிலபகல் இருந்து துஞ்சுமால்
சிறந்திடு காளையில் தேயும் மூப்பினில்
இறந்திடும் அதன்பரி சியம்ப லாகுமோ.

இவ்வாறு உயிர்கள் எடுத்த பிறப்பை இவ்வளவு என்று கணக்கிட யாராலும் ஆகாது. எழு கடல் மணலை அளவிடின் அதிகமானது. கடல் அலைகளைக் கணக்கிட முடியாததுபோல் பிறவிகளையும் கணக்கிட இயலாது.

கலைகளால் வரும் உணர்ச்சி, கல்வி, வீரம், மலை போன்ற செல்வம், வலிமை, இளமை, பதவி முதலிய யாவும் நீர்க்குமிழிக்கு நிகரானவை; நிலையற்றவை. ஒருமைப்பட்ட உணர்வுடையவர்களே இந்த நிலையாமையை உணர்வார்கள்.

கலைபடும் உணர்ச்சியும் கற்பும் வீரமும்
மலைபடும் வெறுக்கையும் வலியும் மற்றதும்
அலைபடும் புற்றதம் ஆகும் அன்னவை
நிலைபடு பொருளென நினைக்க லாகுமோ

மக்களே! இதுகாறும் கூறியவற்ருல் உலகில் உள்ள பொருள்கள் அழியுந்தன்மையுடையன என்பதை நீங்கள் அறிந்தீர்கள்.

இனி அழியாத பொருள் ஒன்று இருக்கின்றது. அதனைக் கூறுகின்றேன்; கவனமாகக் கேளுங்கள்.

தருமம் என்ற ஒரு பொருள் இருக்கின்றது. அது அழிவில்லாதது. இம்மை மறுமை என்ற இரு நலன் களையும் எளிதில் தரவல்லது. அது அருமையானது. இதனை உத்தமர்களே உணர்வார்கள்.

தருமமென் றொருபொருள் உளது தாவிலா
இருமையின் இன்பமும் எளிதின் ஆக்குமால்
அருமையின் வரும்பொருளாகும் அன்னதும்
ஒருமையி ஞேர்க்கலால் உணர்தற் கொண்ணுமோ.

ஆகவே நீங்கள் தருமத்தைச் செய்யவேண்டும் தருமஞ் செய்யில் அன்பு உண்டாகும். அன்பு அருளையுண்டாக்கும். அருள் உண்டாளுல் தவம் என்ற உயர்ந்த ஒன்று உண்டாகும். தவத்திளுல் தெளிவு பெற்ற உயிர் சிவத்தைச் சேரும். தவத்தைச் செய்தவர் சிவத்தைப் பெறுவர்.

தருமமே போற்றிடில் அன்பு சார்ந்திடும்
அருளெனுங் குழவியும் அணையும்; ஆங்கவை
வருவழித் தவமெனும் மாட்சி எய்தும்; மேல்
தெருளுறும் அவ்வுயிர் சிவத்தைச் சேருமால்

இங்ஙனம் பல்லூழி காலங்களாக இந்த வுயிர் திக்குந் திசையும் தெரியாது, வழியும் குழியும் அறியாது அலைந்து திரிந்து துன்புற்று யாத்திரை செய்து, இப்போது அந்த யாத்திரை முற்றுப் பெறுகின்றது.

சிவப்பேறு என்ற ஒன்றில் சீவ யாத்திரை முடிவு பெறுகின்றது.

அப்போது பிறவிப் பிணி தீரும்; அநாதியே சேர்ந்திருந்த மும்மலங்களும் நீங்கும், நீங்காத பேரின்பம் உண்டாகும். இந்த இன்பத்தின் பெருமை அளவிட முடியாது.

சேர்ந்துழிப் பிறவியும் தீரும் தொன்மைபாய்ச்
சார்ந்திடு மூவகை தளையும் நீங்கிடும்
பேர்ந்திடல் அரியதோர் பேரின்பந்தனை
ஆர்ந்திடும் அதன்பரி சறைதற் கேயுமோ.

ஆகவே அறிவுடையவர்கள் நல்ல தவஞ் செய்ய வேண்டும். தவம் என்ற ஒன்றே உயிருக்கு உறுதி செய்வது. இம்மை மறுமை நலங்களைத் தர வல்லது. திருவருள் பேற்றைத் தந்து, இன்பத்தை நல்கும்.

ஆதலிற் பிற்பகல் அருமையால்புரி
மாதவம் இம்மையும் மறுமையுந்தரும்
ஏதுவ தாகுமால் இருமையும் பெறல்
ஆதியம் பகவன தருளின் வண்ணமே.

இந்த இனிய தவத்தினைச் செய்து வீடு பெற்றவர் சிலர்தான். தேவர்களும் திருமாலும் பிரமதேவனும் தவஞ் செய்தே மேலான அப்பதவிகளைப் பெற்ருர்கள். அன்புடன் தவஞ் செய்ய வேண்டும்.

இத்தவத்தின் இயல்பைக் கூறியும் பலர் உயிர்க் கொலை, புலை களவு காமம் சூது வாது வஞ்சனைகளைச் செய்து இறந்து பிறந்து உழல்கின்ருர்கள்.

அறிந்திவை உரைப்பினும் அவனி மாக்கள்தாம்
மறங்கொல்லே கனவொடு மயக்கம் நீங்கலர்
துறந்திடு கின்றலர் துன்பம் அற்றிலர்
பிறந்தனர் இறந்தனர் முத்தி பெற்றிலர்.

என் அருமைப் புதல்வர்களே! நீங்கள் இந்த அவநெறி சேராமல் தவநெறி சேருங்கள். பிறப் பிறப்பென்னும் பேதமையை நீக்கி சிறப்புச் செல்த மாகிய சிவத்தைச் சாருங்கள். சிவம் தவம் என்ற ஒன்ருல் கிட்டும். தவத்திற்கு நிகரானது ஒன்று மில்லே. அதற்கு மேலானதுமில்லே. அதனினும் அரியதும் இல்லே. தவத்திற்குத் தவமே சமான மானது.

தவந்தனில் மிக்க தொன்றில்லே; தாவில்சீர்த்
தவந்தனே நேர்வது தானும் இல்லேயால்
தவந்தனின் அரிய தொன்றில்லே சாற்றிடில்
தவந்தனக் கொப்பது தவம தாகுமே.

முன்வினேயால் வந்த துன்பங்களேத் தாங்கிக் கொள்வதும், மற்ருெரு உயிருக்குத் தீங்கு செய்யா திருத்தலும் தவத்தின் அங்கங்களாம்.

உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குறு.

எனவே நீவிர், எல்லேயில்லாத காலமாக நிழல் போல் தொடர்ந்து வந்து, இடர்தருகின்ற பிறவி நிழல் விலகத் தவஞ் செய்து சிவபெருமானுடைய திருவடி நிழலேச் சார்ந்து உய்வு பெறுங்கள்.

வெந்துயரந்தரும் சிந்தையையடக்கி, செந் தன்மை பூண்டு, அந்தமில் அருந்தவம்புரிந்து அந்தி வண்ணனுடைய கந்தமலர்க் கழல்பெற்று பேரின்பப் பெரு வாழ்வைப் பெறுவீர்களாக.

# வாய் வேதாந்தம்

நம்மில் சிலர் அநுபவமில்லாத சில விஷயங் களைப் பிறரிடம் தாராளமாக மழை பொழிவதைப் போல் பேசுவார்கள். இப்படிப்பட்டவரைக் கண்டு வாய் வேதாந்தம் பேசுகின்ருர் என்று உணர்வுடைய வர்கள் உரைப்பார்கள்.

அநுபவமுள்ள அருள் ஞானிகள் தமது அநுப வத்தைக் கூறமாட்டாது மௌனமாக இருப்பார்கள். தியான சமாதியில், காண்பான் காட்சி காட்சிப் பொருள் என்று கூறுகின்ற ஞாதுரு ஞானஞேயங்கள் அது அதுவாகி நின்று சித்திர தீபம்போல் திகழ்வர்.

இந்த அருள் நிலைதான் முப்பாலும் தாண்டிய அப்பாலுக்கு அப்பாலாய நின்ற அநுபவநிலை. இதை எடுத்து இயம்பச் சொற்கள் கிடையா.

ஒரு ஊமன் அற்புதமான கனுக்கண்டான். விழித்து எழுந்தான். அக் கனவை நினைக்கின்ருன். பிறருக்குச் சொல்லவேண்டும் என்று விரும்பு கின்ருன். நினைவில் உவகைத் தேன் ஊற்றெடுத்து ஓடுகின்றது; உள்ளந்துள்ளுகின்றது; உணர்வு பொங்கி வழிகின்றது. ஆனுல் சொல்ல வாயில்லை. அகமும் முகமும் மலர்கின்றன. சிரிக்கின்ருன்; அந்த அதிசயக் கனவைச் சொல்ல வாயின்றித் திகைக்கின் ருன். இதுபோல்தான் ஞானிகள் தாம் அநுபவவுணர்

வில் கண்ட அருள் இன்பத்தைக் கூற இயலாது தவிக்கின்றார்கள்.

வாரிக் கொண்டெனை வாய்மடுத் தின்பமாய்ப்
பாரிற் கண்டவை யாவும் பருகினை
ஓரிற் கண்டிடும் ஊமன் கனவென
யாருக்குஞ் சொல்ல வாயில்லை ஐயனே.

என்கின்றார் தாயுமானார்.

கற்றும் என்பலன் கற்றிடு நூன்முறை
சொற்ற சொற்கள் சுகாரம்பமோ? நெறி
நிற்றல் வேண்டும் நிருவி கற்பச் சுகம்
பெற்ற பேர்பெற்ற பேசாப் பெருமையே.

ஒரு வேதியர் கூட்டத்தில் நின்று சொற்பொழிவு செய்து கொண்டிருந்தார்; மக்கள் பயபக்தியுடன் கேட்டுக்கொண்டிருந்தார்கள்.

அவர் "மகாஜனங்களே! எல்லாம் பிரமம்; நீங்களும் பிரமம்; நானும் பிரமம்; உலகமும் பிரமம்; தூணும் பிரமம்; துரும்பும் பிரமம்; ஆணும் பிரமம்; பெண்ணும் பிரமம்; ஆனையும் பிரமம்; பூனையும் பிரமம். புலியும் பிரமம்; எலியும் பிரமம்; நெருப்பும் பிரமம்; நீரும் பிரமம்; கரும்பும் பிரமம்; இரும்பும் பிரமம்; எல்லாம் பிரமம்'' என்று வாசாமகோசரமாய்- தேன்மாரியாய்ப் பேசிக்கொண்டிருந்தார். ஜனங்கள் ஆ என்று வாய் பிளந்து கேட்டுக்கொண்டு அசைவற்றிருந்தார்கள்.

கோயில் யானை மதம் பிடித்து, சங்கிலியை அறுத்துக்கொண்டு ஓடி வந்தது. சபையில் இருந்த அத்தனை பேரும் மூலைக்கொருவராக ஓடினார்கள். எல்லாம் பிரமம் என்ற வேதியரும் வேகமாக எல்லோருக்கும் முந்தி ஓடினார். அவர் உடுத்தி

யிருந்த ஆடம்பரமான ஆடையையும் பூமாலையை யும் பார்த்த யானை அவரை விடாது தொடர்ந்து விரட்டியது. அவர் தொந்தியைத் தூக்கிக் கொண்டு மந்திபோல் ஓடினார். வழியில் இருந்த கிணற்றில் விழுந்துவிட்டார். யானை வேறு பக்கம் போய் விட்டது.

சபையில் இருந்தவர்களில் ஒரு அறிவுள்ள இளைஞன் கிணற்றைப் பார்த்தான். அதில் நீந்தத் தெரியாத வேதியர் தத்தளித்துக் கொண்டிருந்தார்.

"சுவாமீ! யானையும் பிரமம்; பூனையும் பிரமம்; நீங்களும் பிரமம்; நாங்களும் பிரமம்; பிரமத்தைக் கண்டு பிரமம் ஏன் ஓடிற்று?"

"அப்பா! புண்ணியவானே! என்னை மேலே தூக்கி விடு. உண்மையை உரைக்கின்றேன்."

இளைஞன் கிணற்றில் குதித்து, அவரைக் கருணை யுடன் எடுத்து மேலே விடுத்தான்.

"இப்போது கூறும்; பிரமத்தைக் கண்டு பிரம் மம் அஞ்சி ஏன் ஓடிற்று?" என்று மீளவுங்கேட்டான். "அன்பனே! யானையும் பிரமம்; நானும் பிரமம், கிண றும் பிரமம். தண்ணீரும் பிரமம். பிரமத்தைக் கண்டு பிரமம் ஓடிற்று; பிரமம் கிணறாகிய பிரமத் தில் வீழ்ந்தது. பிரமத்தைப் பிரமம் தூக்கியது. ஆகவே எல்லாம் பிரமம்" என்றார்.

இளைஞன் மறுபடியும் அவரை பளிச்சென்று கிணற்றில் தள்ளிவிட்டான்.

''சுவாமீ! நீரும் பிரமம்; நானும் பிரமம்; கிண றும் பிரமம்; தண்ணீரும் பிரமம். பிரமத்தைப் பிரமம் தள்ளியது. பிரமம் பிரமத்திலேயே இருக்கட்டும்'' என்ருன். அப்போதுதான் அவருக்குப் புத்தி வந்தது.

''அப்பனே! நான் பிரமம் அன்று. என்னைத் தூக்கிவிடு'' என்ருர்.

கருணை நிறைந்த இளைஞன் தூக்கி விட்டான். ''ஐயா! இனி இப்படி வாய் வேதாந்தம் பேசாதீர். மக்களுக்குப் பொருந்தும் அறவுரைகளைக் கூறும். உம்மை ஒரு ஊசியினுல் குத்திஞல் உமக்கு வலிக்கா மல் இருக்குமா? ஊசியும் பிம்மம்; நானும் பிரமம்; பிரமத்தால் பிரமத்தைப் பிரமம் குத்துகின்றது என்று எண்ணுவாயோ? ஆகவே சாகவேயிருந்த உன்னைக் காப்பாற்றினேன். இனி வருந்தாதே. பொருந்தாத வுரை புகன்று, மக்களைத் திருந்தாத வழியில் போக விடாதே. போய்வா'' என்ருன்.

# கடன்

"தாளாளன் என்பான் கடன்படா வாழ்பவன்" என்பது திரிகடுகம். ஒவ்வொரு மனிதனும் நல்ல முயற்சி செய்து கடன் படாமல் வாழ வேண்டும்.

சிலர் தொட்டதற்கெல்லாம் கடன்படுகிருர்கள். கடன் கேட்டு வாங்குதல் என்பதைச் சிலர் பால் பாயசமாகக் கருதியுள்ளார்கள். அது நஞ்சினும் கொடியதென அறிகின்ருர்களில்லை.

ஒவ்வொரு மனிதனும் தனது வருவாய்க்குத் தக்கவாறுதான் செலவழிக்கவேண்டும்; வருவாய் குறைகின்றபோது செலவினங்களைக் குறைத்துக் கொள்ளவேண்டும்.

> ஆகா றளவிட்டி தாயினும் கேடில்லை
> போகா றகலாக் கடை. —திருக்குறள்

மனிதனுக்குக் கடன் என்பது பெருந் தொல்லை யானது; எல்லையில்லாத இடரை விளைவிப்பது; இவ் வில்லங்கத்தில் கூடுமானவரை மனிதன் சிக்கிக் கொள்ளக் கூடாது.

ஒவ்வொருவரும் அடியில் வரும் கருத்துக்களை ஆழமாகச் சிந்திக்கவேண்டும்.

தனக்கு மாதம் மாதம் வரும் வருவாயை வகுத் துத்தான் செலவு செய்ய வேண்டும்; வருவாய்க்கு அதிகம் செலவழித்து அதனுல் கடன்படுகின்ருர்கள்; அக்கடனுக்கு வட்டியும் ஏறும். வட்டியையும்

கடனையும் எந்த வழியில் தீர்க்க முடியும்? தனக்கு வரும் வருவாய், குடும்பச் செலவுக்கே போதுமான தாக இல்லாமலிருக்கும் நிலையில் கடனையடைக்க முடியாதுதானே? கடன் நாள் செல்லச் செல்ல வட்டியேறிக்கொண்டே யிருக்கும். ஒருவரிடத்தில் 500 ரூபாய் கடன் வாங்கினுல், அக்கடனுக்கு 24 மணி நேரமும் வட்டி யேறிக்கொண்டேயிருக்கும்.

கடல் அலை ஓய்வதில்லை; அதுபோல் வட்டி யாகிய கடன் அலையும் ஓயாது. வட்டியென்ற ஒன்றுக்கு தூக்கம் கிடையாது; ஓய்வு கிடையாது; இரவு பகல் என்ற மாறுபாடு கிடையாது. செல் மரத்தைத் தின்று விடுவதுபோல் வட்டி மனிதனைத் தின்றுவிடும்; 500 ரூபாய் வாங்கிய ஒருவன் 10 வருஷத்திற்குப் பின் 1494 ரூபாய் வட்டியும் முத லும் தரவேண்டியதாகிவிடும்; மூன்று மடங்காகப் பெருகிவிடுகின்றது.

அதனுல் கடன்பட்டவன், கடனைத் திருப்பித் தர வழியின்றி மூதாதைகள் அவனுடைய நலங் கருதித்தேடி வைத்த வீடு, நிலம், நகை முதலிய வற்றை விற்க நேரிடும்; அல்லது கடன் தந்தவ னிடம் அவமானம் அடைய நேரிடும். உத்தமமான உள்ளம் படைத்தவர்கள் அதனுல் பெரிதும் கலங்குவர். "கடன்பட்டார் நெஞ்சம் போலக் கலங்கினுன் இலங்கை வேந்தன்" என்ற சொற் ருெடர் இதுபற்றி எழுந்தது.

நன்மனம் படைக்காதவர்கள் கடன் தந்தவ னைப் பகைப்பர்; ஏமாற்றுவதற்கு வழி தேடுவர்.

எனக்குத் தெரிந்தவர் ஒருவர்; அவரிடம் கடன் தந்தவர் சென்று பல ஆண்டுகட்குப் பின்னர் கடனைத் திருப்பித் தருமாறு நயமாகக் கேட்டார்.

கடன் பட்டவர் கூறுகின்ருர்; "ஐயா! நீர் என்னை நம்பித்தானே தந்தீர். கடைசிவரை நம்பியிரும். இப்போது என்ன அவசரம்? உனக்குச் சாப்பாட்டுக்கு இல்லாமலா கேட்கின்றீர். என்னிடத்திலிருந்து வாங்கி இன்னெருவனுக்குத் தரப்போகின்றீர். அது என்னிடந்தானே இருக்கட்டுமே" என்ருர். இன்னும் ஒருவர் கூறினர். "ஏனய்யா நீர் எனக்குக் கடன் தந்தீர்? முந்திய பிறப்பில் என்னிடம் வாங்கியிருப்பீர்; அதை இப்போது தந்தீர்; சத்தம் போடாமல் சாந்தமாக இரும்" என்ருர்.

இதனுல் கடன் பட்டவனுக்குத் தரவேண்டும் என்ற நினைவேயில்லை என்பது புலனுகின்றது. இந்தபடி கடனைத் தராமல் மாள்பவர் மறுபிறப்பில் மாடாகவோ மனிதனுகவோ பிறந்து உழைத்துத் தரவேண்டும். அப்படித் தருகின்றபோது எத்தனையோ மடங்கு வட்டி பெருகி அத்துணையுந் தரவேண்டி வரும். பழி பாவத்துக்கும் ஆளாகின்றனர்.

பலர் ஆசைக்கு அடிமையாகி, தம்மிடம் உள்ள சிறு தொகையுடன் பெருந் தொகை கடன் வாங்கி வீடு, நிலம் இவைகளை வாங்குவர். கடன் ஏறித் தொல்லைப்பட்டு விற்றுக் கடனையடைத்து தம்மிடம் இருந்த தொகையையும் இழந்து விடுவர். அன்றியும் சிறிது கடன் நின்று கலக்கமுறுவர்.

கடன் என்பது ஒரு நோய்க்குச் சமானம். நோய் உடம்பை அரிக்கும்; கடன் உள்ளத்தையும் உணர்

வையும் அரிக்கும். அந்தோ! கடன் தொல்லே வட வாக்கினிபோன்றது. மனிதனை உயிரோடு எரிக்கும் வண்மையுடையது.

ஒரு சமயம் இலண்டனையாண்ட மகாராணி-இந்தியாவுக்குச் சக்கரவர்த்தினியாயிருந்த விக்டோரியா அம்மையார் ஒரு கடையில் சாமான் வாங்கினர்களாம். கையில் இருந்த பணத்தினும் சாமான்கள் அதிகமாக இருந்தன. கடைக்காரன் அரண்மனைக்குச் சென்று பணம் அனுப்பும் என்றனும். மகாராணி பணத்துக்கு ஏற்ற அளவில் சாமான்கள் பெற்றுக் கொண்டார்களாம். கடனுக வாங்கக் கூடாது என்று கருதினர்களாம்.

ஆகவே கடைக்காரன் கடன் தருகின்றன் என்று கருதி விருப்பம்போல் தேவைப்பட்டதையும் தேவைப்படாததையும் அள்ளிக்கொண்டு வரக் கூடாது. சிலர் துணிக் கடையில் கடன்; நகைக் கடையில் கடன்; பலசரக்குக் கடையில் கடன்; இப்படி இறைவன் எங்குமிருப்பதுபோல் கடன் எங்கும் இருக்கும்படி வாங்கி மனேசாந்தி யிழக்கின்றனர்கள்.

கடன் பட்டுக் கலங்குகின்றவர்களைப் பார்ப்பதுவே ஒரு பரிதாபமான காட்சி. அதனுல் இனியவை நாற்பது என்ற சங்க நூல் "கடன் பட்டு வாழாமை காண்டல் இனிதே" என்று கூறுகின்றது.

ஆகவே அறிவுடையவர் கடன் படாமல் வாழ்வதற்கு முயல்வார்களாக.

# மக்கள்

நீளம் குறைவதனுல் பெருமை விளைகின்றது. இதற்குச் சான்று கூறுகின்றேன்.

மாக்கள்—விலங்கு. மக்கள்—மனிதர்கள்.

மாக்கள் என்ற சொல் ஒரு மாத்திரை குறைந்து மக்கள் என வந்தது; மாக்களினும் மக்கள் உயர்ந்தவர்.

சீவன்—ஆன்மா; சிவன்—இறைவன்.

சீவன் ஒரு மாத்திரை குறைந்து சிவனுகின்றது.

சீவனுக்கும் சிவனுக்கும் எழுத்தில் ஒரு சிறு வேற்றுமை; தலையில் ஒரு சுழியுடன் கூடியது சீவன். அதுபோல் நமது தலையிலும் விதியாகிய சுழியுண்டு. சுழியில்லாதது சிவன். சீவன் ஒரு மாத்திரை குறுகினுல் சிவனுகின்றது.

"கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச் சேவடி யிணையே குறுகினேமே"

என்கிருர் அப்பரடிகள்.

இயற்கையைப் பாருங்கள், மாடு, குதிரை, கழுதை, நாய் இவற்றின் முகம் நீண்டிருக்கின்றது. மனிதன் முகம் நீளமின்றியுள்ளது. ஆதலால் மக்கள் பிறப்பு உயர்ந்தது.

இனி மக்களிலும் அறிவுடைய மக்கள் சிறந்தவர்கள்.

பெறுகின்ற பேறுகள் பல; அவற்றுள் சிறந்த பேறு அறிவு நிரம்பிய மக்களைப் பெறுவதுவேயாகும்.

> பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
> மக்கட்பே றல்ல பிற.

தம்மைக் காட்டிலும் தமது மக்கள் அறிவுடையவராக இருந்தால் அது கழிபேருவகை விளைவிக்கின்றது.

> தம்மில்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
> மன்னுயிர்க் கெல்லாம் இனிது.

என்று திருவள்ளுவதேவர் கூறுகின்றார்.

தாய் தந்தையர் நல்ல நோன்புகள் நோற்று, இறை வழிபாடு செய்து நன்மக்களைப் பெறுதல் வேண்டும்.

புகைப்படம் பிடிக்கின்றவர்கள் தம்மை நன்கு அழகு செய்து கொண்டுதானே படம் பிடித்துக் கொள்ளுகின்றார்கள்? உயிரில்லாத படத்திற்கு அப்படியென்றால் மக்கள் உயிருள்ள படங்கள் அல்லவா? ஆகவே மக்களைப் பெறுகின்றவர்கள் தாம் மனமொழி மெய்களினால் தூயவராக நின்றால்தான் நன்மக்கள் தோன்றுவர்.

> மனம்தூயார்க்கு எச்சம் நன்றாகும் இனம்தூயார்க்
> கில்லைநன் றாகா வினை

என்கின்ற திருக்குறளை நோக்குக.

ஒரு பண்புடைய மகன் பிறந்தால், பிறந்த நாடு, நகரம், அந்தக் குலம், குடும்பம் அனைத்தும் தழைக்கின்றன.

> எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
> பண்புடை மக்கள் பெறின்.

மேலும் மக்களைப் பெற்றோர் மிகவும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டியது ஒன்றுளது.

பயிர் வளர்க்கின்றவர்கள் நீரும் உரமும் காலத்தில் இடுவதுபோல், மக்களை வளர்க்கின்றவர்கள் அறவுரைகளை அவ்வப்போது இனிமையாக மக்களுக்குப் புகட்ட வேண்டும்.

தாய் தந்தையர் அறநெறியில் நிற்கவேண்டும்.

காரில் பயணஞ் செய்யும் முதலாளிகள் கார் ஓட்டிக்கும் காது உண்டு என்று எண்ணாமல் மறைமுகமாகவுள்ள சில குடும்பக் கதைகளைப் பேசுவார்கள். அதுபோல் நம் வீட்டில் வளரும் குழந்தைகளுக்கும் காதும் அறிவும் உண்டு என்ற எண்ணம் வேண்டும். அக்குழந்தைகள் பெரியவர்களுடைய நடையுடைகளைக் கூர்மையாகக் கவனிக்கின்றார்கள் என்பதை நன்கு மறவாமல் மனத்தில் சிந்திக்க வேண்டும்.

ஒரு தந்தை தன் இளம் மைந்தனைப் பார்த்து, "கண்ணா! வேங்கடாசலம் வந்து அப்பா எங்கே என்று கேட்டால் இல்லை என்று கூறு" என்று கூறுகின்றான். தன் மகனுக்குப் பொய்ச் சொல்லத் தந்தையே கற்றுக் கொடுக்கின்றான். தந்தை கற்றுக் கொடுத்த பொய்யை மைந்தன் சிலசமயம் தந்தையிடமே கூறத் தொடங்கிவிடுகிறான். "ஏண்டா பொய் சொல்லலாமா?" என்று பிதா அவனைப் பின்னர் கண்டிக்கின்றான். இது பிழை.

ஒரு தாய் தன் கணவனிடம் எதிர்த்து மரியாதைக் குறைவாகப் பேசுவாளாயின் அவருடைய

மகள் இதனைப் படித்துக்கொண்டு தன் கணவனிடம் தானும் அவமரியாதையாகப் பேசுவாள். அதனால் "தாயைப்போல் சேய்; நூலைப்போல் சீலை" என்ற பழமொழி ஏற்பட்டது.

ஆதலால் மக்களை வளர்க்கும் தாய் தந்தையர் மக்கள் பொருட்டாவது மிகமிக நேர்மையாகவும், சீலமாகவும் நடந்து கொள்ளவேண்டும். நல்ல சூழ் நிலையில் வளர்ந்த பிள்ளைகள் தங்கள் ஆயுள்வரை ஒழுக்கமாக இருப்பார்கள்.

ஒரு சந்யாசி இரு கிளிகளை வைத்திருந்தார். அவர் பறவைபோல் சஞ்சாரம் புரிபவர். ஆதலால் ஒரு கிளியை உத்தமமான ஒரு வேளாளனிடம் தந்தார். மற்றொரு கிளியை ஒரு புலால் கடைக்கார னிடம் தந்தார்.

சில நாட்களுக்குப் பின் அத்துறவியார் வேளா ளன் வீட்டுக்குச் சென்றார். அங்கு கூட்டில் வளர் கின்ற கிளி "ஐயா! வாருங்கள்; இருங்கள், பால் வேண்டுமா? பழம் வேண்டுமா? உங்கள் வரவு. நல் வரவு. நீங்கள் வருவதற்கு நாங்கள் என்ன புண்ணியஞ் செய்தோமோ!" என்றது.

மறுநாள் அந்தப் புலால் கடைக்காரனிடம் போனார்; அங்கு கூட்டில் இருந்த கிளி "அடி, வெட்டு, கொல்லு, விடாதே பிடி, போடா! மடையா!" என்று கூறியது.

சந்யாசி இதனைக் கேட்டார். இரு கிளிகளும் ஒரு தாய் வயிற்றில் பிறந்தவையே. ஆனால் விருந் தினரை உபசரிக்கின்ற உத்தமன் வீட்டுக் கிளி

இனிய உரைகள் கூறிற்று; புலால் கடைக்காரனிடம் வளர்ந்த கிளி கர்ண கடூரமான கொடு மொழிகளைக் கூறியது. வளர்க்கின்றவர்களின் குணமும் குற்றமும் கிளிகளிடம் எதிரொலியாக ஒலிக்கின்றன என்று கருதினர்.

ஆதலால் மக்களை எந்த முறையில் நாம் பழக்கு கின்ருேமோ? அதற்கு ஏற்றவாறுதான் மக்களின் குணம் அமைகின்றது.

சில தாய்மார் தமது அருமைக் குழந்தைகளைப் பார்த்து, ''ராஜா! மாமா முகம் எப்படியிருக்கின்றது? மாமாவை எந்தக் காலால் உதைப்பது?'' என்று கேட்டு அக்குழந்தை முகத்தைக் கோணலாகவும், கால் நீட்டியும் காட்டினுல் களிப்புறுகின்ருர்கள்.

ஆகவே இவ்வண்ணம் தமது மக்களை இளமை யில் கோணலான பாதையில் வளர்ப்பது பிழை.

''கண்ணு! அண்ணுவைக் கும்பிடு. வேலும் மயிலும் என்று சொல்லு. சுவாமி கும்பிடுவது எப் படி?'' என்று கூறி நற்குண சீலராக வளர்க்க வேண்டும்.

சமையம் வந்தபோதெல்லாம், நீதிநெறிச் சிறு கதைகளைச் சொல்லி அந்த இளம் உள்ளத்தில் நன் னெறி விதைகளைத் தூவவேண்டும். மக்கள்தான் எதிர் காலத்து அரும்பெரும் செல்வங்கள்.

எனவே ஒவ்வொருவரும் தூய சிந்தையுடைய ராய் வாழ்ந்து நன்மக்களைப் பெற்று, நன்னெறியில் வளர்த்து நாட்டுக்கும் வீட்டுக்கும் நலம் புரிவார் களாக.

# குருபலம்

அறுபது ஆண்டுகட்கு முன் அடியேனுடைய தந்தையார் கர்னூலில் தங்கியிருந்தார். அங்கு எனது தாயைப் பெற்ற பாட்டி பாலம்மாவும், தாய் மாமா சிவகுரு முதலியாரும் தங்கியிருந்தார்கள். மாமா அங்கு P. W. அலுவலகத்தில் வேலை பார்த்துக் கொண்டிருந்தார்.

என்னுடைய பிதா மல்லையதாஸ் பாகவதர் அவர்கள் கர்னூலில் தங்கி தமிழ் நூல்கள் பயின்று கொண்டிருந்தார். அப்போது இரு பெண் குழந்தைகள் பிறந்திருந்தன.

எங்கள் தாயைப்பெற்ற பாட்டி பாலம்மா மிகவும் உத்தமமானவர்கள். அவருடைய தமயனுர் தங்கவேல் முதலியார் கர்னூலில் தாசில்தாரராக இருந்தார்.

அங்கு துங்கபத்ரா நதிக்கரையில் ஒரு குகையில் குருபலம் என்ற மகான் தங்கி நிஷ்டை புரிவார்; அஷ்டமாசித்திகளும் கைவரப் பெற்றவர். எமது தாய்மாமா சிவகுரு முதலியார் காலையில் துங்கபத்ரா நதியில் நீராடி சுவாமிகளுடைய குகையில் சென்று அவரை வணங்குவார்.

குருபலம் என்ற அம் முனிவர் தனது அன்புக் குரியாரைப் பார்த்து கண்டிப்பான ஒரு கட்டளை யிடுவார்; அது எது? "நான் மனிதன்; என்னை விழுந்து

கும்பிடாதீர்கள். ஆலயத்தில் ஆண்டவனை வணங்குங்கள்'' என்று கூறுவார்.

எமது மாமா குகையைக்கூட்டி தூய்மை செய்து அவருக்குரிய பணிவிடை புரிவார். அவருடைய அன்புக்குரியவராக இருந்தார்.

வடநாட்டுப் பைராகிகளில் சிலர் குருபலம் சுவாமிகளிடம் வந்து உதவி கேட்பார்கள்; குருபலம் எனது மாமாவைப் பார்த்து "சிவகுரு! அந்தத் துப்பட்டியின் மூலையில் முடிந்திருப்பதை அவிழ்த்துக் கொடு'' என்பார். எனது மாமா அதன் நான்கு மூலைகளிலும் பார்ப்பார். ஒன்றும் இல்லையே என்பார். குருபலம்...... "ம்.....அசடு'' என்று சிரித்த வண்ணம் கூறி, அத்துப்பட்டியின் ஒரு மூலையை எடுத்துத் தருவார். முன் ஒன்றுமில்லாதிருந்த அதில் ஒரு முடிச்சு இருக்கும். அதை அவிழ்த்துப் பார்த்தால் ஒரு தங்கத்துண்டு இருக்கும். அதை அந்தப் பைராகியிடம் தந்து போ என்பார். இப்படி குருபலம் சங்கற்ப சிருஷ்டி செய்வார்.

அம்மகான் சதா குருபலம் குருபலம் என்று கூறுவதனுலேயே அவரைக் குருபலம் என்று அழைப்பார்கள். அவருடைய இயற்பெயரும் ஊரும் யாருக்கும் தெரியாது.

மூன்று நாட்கள் நான்கு நாட்கள் அவர் தன்னை மறந்து நிஷ்டையில் இருப்பார். நிஷ்டை கலைந்த பொழுது நேரே உரிமையுடன் எமது பாட்டி வீட்டுக்கு வந்து "பாலம்மா! பசிக்கின்றது; உணவு போடு'' என்பார். பாட்டி பரிவுடன் அவருக்கு

உணவு படைப்பார். படைத்தபின் பாத்திரத்தில் உணவு குறையாமல் முன்னிருந்த அளவிலேயே இருக்கும். சிலர் வருந்தி யழைத்தாலும் அவர்கள் இடம் சென்று உணவருந்த மாட்டார்.

சுவாமிகள் எல்லோருக்கும் முற்பிறப்பைக் கூறுவார்; எங்கு நடக்கின்றவைகளையும் அங்கிருந்தே கூறுவார்.

சென்னையில் பீபிள்ஸ் பார்க் கொட்டகை தீப்பிடித்து எரிந்ததை, சுவாமிகள் கர்னூலில் "ஐயையோ! தீப்பிடித்துக் கொண்டதே; பற்றி எரிகின்றதே" என்று கூறினர்.

பாட்டி பாலம்மாவின் சிறிய தமயனுர் நந்தியாலில் இறந்துவிட்டார். சுவாமிகள் பாட்டியிடம், 'பாலம்மா! சரி மாட்டுக்காரன் வந்து பிடித்துக்கொண்டான்; ஓலை வரப்போகின்றது, சீக்கிரம் எனக்குச் சாப்பாடு போடு!' என்ருர். உணவு உண்டு சுவாமிகள் குகைக்குச் சென்றதும் அவர் இறந்த தந்தி வந்தது.

பாட்டியின் தமயனுராகிய தாசில்தாரரை சுவாமிகள் அவர்கள் "பாதாள லோகத்தார் சீக்கிரம் பாதாளத்துக்குப் போய்விடுவார்கள்" என்ருர். அதுபடியே அவர் குடும்பம் ஒருவரும் மிச்சம் இன்றி சில காலத்தில் நசித்துவிட்டது.

ஒருநாள் இரவு சுவாமிகள் தாசில்தாரர் வீட்டுப் பக்கம் சென்ருர். தாசில்தார் தங்கவேல் முதலியார் சாய்வு நாற்காலியைவிட்டு எழுந்து சுவாமிகளைத் தொழுது அவரைச் சாய்வு நாற்காலியில் இருத்திப் பயபக்தியுடன் விசிறி எடுத்து விசிறி, "சுவாமீ!

இங்கு ஆகாரஞ் செய்துகொள்ள வேண்டும்'' என்ருர். சுவாமிகள் 'சரி' என்ருர்.

தாசில்தார் தன் மனைவியை அழைத்து, ''மாணிக்கம்! குருபலம் வந்திருக்கின்றது; வற்றல் வறுப்பாய்'' என்ருர். அந்த அம்மா! ''இந்த நேரத்தில் அடுப்புப் பற்றவைத்து வற்றல் வறுக்க வேணுமே'' என்று எண்ணி சிறிது சலிப்புடன் அடுக்களைக்குள் சென்ருர். குருபலம் சாய்வு நாற்காலியைவிட்டு எழுந்து கடும் வேகமாக நடக்கலானுர். தாசில்தார் குருபலம் குருபலம் என்று அழைத்தார். ''அவர் அடுப்புப் பற்றவைத்து வற்றல் வறுக்க மனம் வருந்துகின்ருள்; வேண்டாம் என்று கூறிவிடு'' என்று சுவாமிகள் கூறிவிட்டு ஒரே ஓட்டமாகப் பாலம்மா வீட்டுக்கு வந்தார்.

''பாலம்மா! பாதாள லோகத்தார் வீட்டுக்குப் போனேன். சாப்பிடச் சொன்னுர்கள்; சரி யென்றேன். அவன் வற்றல் வறுக்கச் சொன்னுன். அவள் வற்றல் வறுக்கச் சோம்பல்பட்டாள்; வந்துவிட்டேன். நீ எனக்குச் சோறு போடு'' என்ருர்.

மறுநாள் காலை பாட்டி பாலம்மா தன் தமயனுர் வீட்டுக்குச் சென்ருர். ''அண்ணு! நேற்று இரவு இங்கு குலபலம் வந்தாரா?'' என்று விஞவினுர்.

''ஆம்! அம்மா! வந்தார், சாப்பிடச் சொன்னேன். ஒருநாளும் நம்ம வீட்டில் சாப்பிட்டதேயில்லை. என் வேண்டுகோளுக்கு இரங்கி ஒப்புக்கொண்டார். பிறகு எழுந்து காற்ருய்ப் பறந்து போய் விட்டார்.''

''அண்ணு! இங்கிருந்து நம்ம வீட்டிற்கு வந்தார்; அண்ணி வற்றல் வறுக்க மனத்தில் வருத்தப்பட்டார்களாம்; அதனுல்தான் வந்துவிட்டேன் என்று கூறினுர்.''

மாணிக்கம்மாளும் தாசில்தாரரும் கேட்டு நாம் நினைத்ததை அவர் அறிந்துகொண்டாரே! என்று ஆச்சரியமும், பெரிய மகான் உணவருந்தும் பேறு கிட்டாமைக்கு வருத்தமும் அடைந்தார்கள்.

கர்நூலில் உத்தியோகம் பார்க்கும் வளையல்காரச் செட்டியார் ஒருவர் பலமுறை சுவாமிகளை உண வருந்த அழைத்தார்; குருபலம் இசைந்து ஒருநாள் அவருடைய வீட்டிற்குச் சென்ருர். உணவு வுண்டார். அவர்கட்குப் பிள்ளையில்லாக்குறை; அக்குறை தீரும்பொருட்டுத்தான் சுவாமிகளை வருந்தியழைத்து பிட்சை செய்து வைத்தார். சுவாமிகள் உணவு செய்துவிட்டு ஆசிகூறிவிட்டு நேரே பாலம்மா வீட்டுக்கு வந்தார். பாலம்மா, ''குருபலம், வளையல்காரச் செட்டியார் வீட்டில் ஆகாரம் அருந்தி வந்தீரே! அவர்கட்கு குழந்தை பிறக்குமா?'' என்று கேட்டார்.

குருபலம், ''குழந்தை பிறக்கும்; என்னுட்டம் ஒருத்தன் பிறப்பான். (ஆண் குழந்தை என்ற கருத்து) கடன்காரன்; மூன்று வருடம் இருப்பான்'' என்ருர்.

பின்னர் அவர்கட்குக் குழந்தை பிறந்து மூவாண்டில் மரித்துவிட்டது.

இன்னொரு அன்பர் குருபலத்தை அழைத்துக் கொண்டுபோய் உணவு படைத்தார். குருபலம் மோர் உணவு உண்ணும்போது, வீட்டுக்காரர் ஊறு காய் வைக்கச் சொன்னார். அவர் மனைவி ஊறுகாய் அடுத்த வீட்டிலிருந்து வாங்கி வைத்திருந்தாள். நாமே அடுத்த வீட்டிலிருந்து வாங்கி வைத்திருக் கின்றோமே. அதை வைக்கச் சொல்லுகின்றாரே? என்று மனத்துக்குள் நினைத்துக்கொண்டு ஊறுகாய் எடுக்கச் சென்றாள்.

மோரன்னம் அருந்துகின்ற குருபலம் "ஊறுகாய் வேண்டாம். அது அடுத்த வீட்டில் வாங்கி வைத் தது. அவளுக்கு இருக்கட்டும்" என்று கூறி, இரண்டு வாயாக அவசரமாக உண்டுவிட்டு வெளி யேறிவிட்டார். மனைவி நாணினாள்; வீட்டுக்காரர் "பாவி! பெரியவருக்கு படைக்கும்போது இப்படி நீ நினைக்கலாமா?" என்று மனைவியை வைதார்.

ஒருநாள் தாசில்தார் தங்கவேல் முதலியார் ஒரு விநாயகர் கோவிலில் விநாயகருக்கு அபிஷேகம் செய்துகொண்டிருந்தார். குருபலம் அங்கு ஒருபுறம் அமர்ந்திருந்தார்.

அபிஷேகத்துக்குரிய சாதனங்கள் வாங்கிக் கொணர்ந்ததில் தேன் பாட்டில் மறதியாக வீட்டில் விடப்பட்டது. தாசில்தார் தன் சேவகன் சோமு என்பவனைப் பார்த்து "சோமு! தேன் பாட்டில் வீட் டில் உளது. போய் எடுத்துவா" என்றார். அவன் சென்று எடுத்து வந்தான்.

குருக்கள் பால் தயிர் இளநீர் இவைகளை வரிசை யாக அபிஷேகம் செய்யும்போது தேன் பாட்டிலை

எடுத்தார்; மூலையில் அமர்ந்திருந்த குருபலம் குறுக்கிட்டு "தேன்விடவேண்டாம். அதை நிறுத்திவிடும். வேண்டாம்" என்று மறுத்தார். குருக்கள் அதை அபிஷேகம் செய்யாமல் வைத்துவிட்டார். குருபலம் பெரிய மகான். அவருடைய சொல் வேதவாக்கு என மதிக்கின்றவர்கள். அபிஷேகம் முடிந்தபின், தாசில்தார் மெல்ல "குருபலம்! தேனை ஏன் அபிஷேகம் பண்ண வேண்டாம் என்று மறுத்தீர். தேன் அபிஷேகம் சிறந்ததுதானே" என்று பணிவுடன் கேட்டார்.

குருபலம் சிரித்துக்கொண்டே கூறுகின்றார். "நீ அந்த சோமுவை அடித்துவிடாதே தேன் அபிஷேகத்துக்கு உரியதுதான். அவன் பாட்டிலை வீட்டிலிருந்து எடுத்துவரும்போது, கையில் விட்டு குடித்து எச்சிலாக்கிவிட்டான். அதனால் அது சுவாமிக்கு உதவாது என்று கூறினேன்" என்றார்.

சேவகன் சோமு தேனை வழியில் கையில்விட்டு நக்கியதை குருபலம் கோயிலில் இருந்தவண்ணம் உணர்ந்தார்.

குருபலம் அநேகரைப் போன பிறப்பின் தன்மையை வைத்து அழைப்பார். எமது தந்தை முற்பிறப்பில் வேடன், எமது மாமா வேளாளன்; எமது பெரிய தாயாருக்கு இரு புதல்வியர். அதி மூத்த பெண் இராஜாளி. சிறிய பெண் புலி என்று கூறுவார்.

சிலசமயம் பாலம்மாவை வெல்லம்போட்டு வெந்நீர் போடச் சொல்வார். எண்ணெயிட்டு வெல்ல

நீரில் குளிப்பார். ஒருநாள் வெல்லம்போட்டு வெந்நீர் தயார் செய்யச் சொன்னர்.

வீட்டிற்குப் பின்புறம் வெந்நீர் அடுப்பில் அண்டா வைத்து நிரம்ப நீர்வார்த்து ஒரு வீசை வெல்லம் இட்டு தீ மூட்டினுர்கள்.

எனது பெரியம்மா (அவர்கள் பேர் சின்னம்மா 95 வருடம் வாழ்ந்தார்கள்) அவருடைய இளைய புதல்வி கண்ணம்மா! இளம்பெண். 7, 8 ஆண்டு இருக்கும். அப்பெண் வெந்நீர் அண்டாவில் விரல் விட்டு வெல்லம் நீரைத் தொட்டுத் தொட்டு நாவில் வைத்துச் சுவை பார்த்தது; இது ஒருவருக்கும் தெரியாது.

உச்சிப் பொழுதில் குகையிலிருந்து குருபலம் வந்தார். வெல்ல வெந்நீரை எடுத்து பாலம்மா வைத்தாள். "பாலம்மா! இது அந்த புலி எச்சில் செய்துவிட்டது. ஆகவே, இது உதவாது. வேறு வெந்நீர் போடு" என்று கூறினுர்.

இந்த வண்ணம் குருபலம் எத்தனை எத்தனையோ அரிய அதிசயப்படும் செயல்களை உரைப்பார்.

சில சமயம் உச்சி நேரத்தில் வாசலில் நின்று பஞ்ச பாத்திர நீரை வானில் இறைப்பார். எனது பெரிய தாயாருடைய மூத்த மகள் இராஜம்மா. (இவருடைய மகளை அடியேன் மணந்து கொண்டேன்) "இராஜம்மா! இங்கேவா! இதோ பார். ஆகாயத்தில் மாடேறி நிற்கின்றுர். கும்பிடு" என்பார் குருபலம். எனது பெரிய தமக்கையாரான அவர் ஆகாயத்தைப் பார்க்கின்றுர். ஒன்றும் தெரியவில்லை. "குருபலம்

ஒன்றும் தெரியவில்லையே'' என்றார். "ம்...பாவம் பண்ணவள். போ...'' என்றார்.

இதனால் குருபலத்துக்குச் சிவபெருமானுடைய காட்சி நினைத்தபோது தோற்றமளிக்கின்றது என்று விளங்குகின்றது.

குருபலம் இருக்கின்ற குகைக்கு அருகில் கஞ்சா செடி முளைத்திருந்தது. கஞ்சா பயிர் செய்யக் கூடாது என்பது அரசாங்கத்தின் சட்டம். இவரை அதிகாரி அழைத்து "நீர் ஏன் கஞ்சா செடி பயிரிட்டீர்'' என்று கேட்டார்.

குருபலம் "நான் பயிரிடவில்லை. அதுவாக முளைத்திருக்கின்றது'' என்றார்.

"அதனை நீர் ஏன் பிடுங்கி எறியவில்லை?''

"கஞ்சாச் செடியும் ஒரு உயிர்; உயிர்க் கொலை நான் புரிவதில்லை. உமக்கு விருப்பமாயின் நீர் வந்து பிடுங்கி எறியும்'' என்று கூறிவிட்டார்.

"ஓரறிவுள்ள செடிகளைக்கூட கொல்லக் கூடாது'' என்று கருதினர்.

அவர் "விளக்குமாற்றைக்கூட தலைகீழாக வைக்கக்கூடாது'' என்பார். விளக்குமாறு மேல் நோக்கி தானே வளர்கின்றது. நீங்கள் ஏன் அதைத் தலை கீழாக வைக்கின்றீர்கள்'' என்று கூறிக் கண்டிப்பார். விளக்குமாற்றை எடுத்து நேரே வைத்து விடுவார்.

எனது மாமா விடியற்காலை அவருடைய குகைக்குச் சென்றபோது, ஒருநாள் கைவேறு கால்வேறு தலைவேறு ஆக இருக்கக் கண்டு நடுங்கிவிட்டார்.

அவை ஒன்றுகூடி 'நீ அஞ்சாதே, இதை ஒருவருக்கும் சொல்லாதே'' என்றார்.

சில சமயம் அவர் அந்தரத்தில் படுத்திருக்கக் கண்டார்.

காபியை கொட்டைத் தண்ணீர் என்று கூறுவார்.

எனது பெரியம்மாவுடைய இளைய மகள் கண்ணம்மாவை முற்பிறப்பில் புலி என்று கூறுவார். அன்றி ''இந்தப் புலி சீக்கிரம் காட்டுக்குப் போய் விடும்'' என்றார். பின்னர் கண்ணம்மா இளமையிலேயே இறந்து விட்டார்.

இவ்வாறு சுவாமிகள் எதிர்கால நிகழ்ச்சிகள் பல கூறினர். அவைகள் ய. வும் வெகு காலத்திற்குப் பின் அநுபவத்தில் உறுதியாயிற்று. இப்படி இப்பெரியாருடைய மகிமைகள் அளவிறந்தன. இறுதியில் ஒன்று.

பாட்டி பாலம்மாவின் வீட்டின் பின்புறம் குடியிருந்த ஒருவர் வீட்டில் சுவாமிகளுக்கு அமுது படைத்தார்கள். அவர்கள் சுவாமிகள் ஏதாவது உபகரிப்பார் என்ற காமிய பக்தியுடன் சுவாமிகட்கு அன்னம் படைத்தார்கள். சுவாமிகள் உண்டபின் கூடத்தில் அமர்ந்தார். அப்போது எனது பாட்டி பாலம்மாள், எமது தந்தையார் தாயார், பெரிய தாயார், பெரிய தாயாருடைய மகள் இராஜம்மாள் இத்தனை பேரும் சுவாமிகளின் எதிரில் நின்றுகொண்டிருந்தார்கள்.

''சுவாமிகள்......ம்......குருபலம் உதவி செய்யும் என்று நினைத்தீர்கள். சூடம் வாங்கி வாருங்கள்''

என்றூர். வீட்டு அன்பர் அரை பலம் பூச்சூடம் (கர்ப்பூரம்) வாங்கிவந்து கொடுத்தார். அதனைக் குருபலம் கையில் வாங்கி அப்படியே "இந்தா" என்று அவர் கையில் இட்டார். அது தங்கக் கட்டி யாக விழுந்தது. இந்த அதிசயத்தைக் கண்டு அனை வரும் திகைத்தார்கள். கண்களையே நம்ப முடியா மல் விழித்தார்கள்.

இந்த நிகழ்ச்சியை நேரில் கண்ட எனது தாய் தந்தையர் நேரே பலகாலும் என்பால் பின்னர் கூறி ஞர்கள்.

குருபலம் எழுந்து குகைக்குப் போய்விட்டார். பலகாலும் நிஷ்காம்யமாகக் குருபலத்துக்குத் தொண்டு செய்த பாலம்மாவுக்கு சிறிது ஆசையேற் பட்டது. தன் மருமகனுர் (எனது பிதா) ஏழையாக இருக்கின்ருரே என்று உள்ளம் உலைந்து "மாப் பிள்ளை! குருபலத்திடம் வா தங்கக் கட்டி வாங்கித் தருகின்றேன்" என்ருர். எனது தந்தையார், "மாமீ! பெரியவர்களிடம் நாம் ஒன்றும் விரும்பக்கூடாது. அவருடைய ஆசீர்வாதம் ஒன்றேபோதும்" என்ருர். பாட்டி "நீ சத்தம் போடாமல் என்னுடன் வா; நான் கேட்கின்றேன்" என்று எனது பிதாவை வற்புறுத்தி அழைத்துக்கொண்டு குகைக்குப் போனுர்.

சுவாமிகள் நிஷ்டையில் இருந்தார்; இவர்கள் கைகூப்பிய வண்ணம் எதிரில் நின்று கொண்டிருந் தார்கள். நெடுநேரத்திற்குப்பின் குருபலம் கண் விழித்துப் பார்த்தார்.

"ஏண்டா! இவள் தங்கக் கட்டி வாங்கித் தரு கின்றேன் என்று கூறி உன்னை அழைத்து வந் தாளா? இவள் அழைத்தால் நீ ஏன் வந்தாய்? உனக்கு புத்தியில்லையா? நான் கொடுக்கின்ற தங்கக் கட்டி எத்தனை நாள் உனக்கு உதவி செய்யும்? என் னைப் போல ஒருத்தன் அவள் வயிற்றில் இருக்கின் ருன். அவன் பிறந்தால் உன் வீடெல்லாம் தங்க மாகப் போகின்றது போடா" என்ருர்.

எனது தாயார் எனது தமயனுரைக் கருவுற் றிருக்கின்ருர். 2, 3 மாதக் கருப்பம். அச்செய்தி எனது பிதாவுக்கே தெரியாது. குகையில் அமர்ந் திருக்கின்றவர் கூறுகின்ருர். என்னைப்போல என்ருல் ஆண் குழந்தை என்று பொருள்.

பிதாவும் பாட்டியும் தொழுதுவிட்டு வீட்டுக்கு வந்தார்கள். அம் மகானுடைய ஆசியே போதும் என்று திருப்தியுற்று அவரை மனதுக்குள் போற்றிப் புகழ்ந்து உவந்தார்கள்.

மறுநாள் குருபலம் எங்கோ சென்றுவிட்டார்; பின்னர் காணப் பெறவில்லை.

(இந்த மகானுடைய பெருமைகளை நேரில் கண்ட என் அன்னையார் இவைகளைக் கூறியருளி னுர்கள்.)

# திருவருள்

அனந்தன்: வாருங்கள், வாருங்கள். நான் தங்களைக் காணவேண்டும் என்று மிக்க ஆழமாக நினைத்துக் கொண்டிருந்தேன் தெய்வத் திருவருள் கூட்டி வைத்தது. எல்லாம் நலந்தானே?

அறிவாகரன்: அண்ணே! எல்லாம் நலந்தான். தாங்கள் ஒரு பழங்காலத்து மனிதர். படித்திருக்கின்றீர்; இருந்தும் அறிவில் தெளிவு இல்லை. எல்லாம் திருவருள் திருவருள் என்று எப்போது பார்த்தாலும் கூறுகின்றீரே! இது சிறிதும் அறிவுக்குப் பொருந்தவில்லை. பிரயத்தனம்தான் முக்கியம். அதாவது தன் முயற்சி. இது இன்றித் தெய்வயத்தனம் என்பது வீண் பிதற்றல். தெய்வத் திருவருள் தெய்வத்தனம் என்று வீணே சோம்பிக் கிடக்கலாமா? எல்லாம் பிரயத்தனத்தால்தான் நடக்கும்.

அனந்தன்: தாங்கள் சொல்வதிலும் சிறிது நியாயம் உண்டு. மனித யத்தனமும் வேண்டுந்தான். ஆனால் மனிதயத்தனம் மட்டும் இருந்து என்ன பயன். திருவருள் கூட்டிவைக்க வேண்டும். மனித யத்தனம் நிலத்தை உழுவது போலும்; விதை விதைப்பது போலும். தெய்வத்தனம் மழை பொழிவது போலும். மழையின்றி உழுதும் விதைத்தும் பயன் விளையாதல்லவா? ஆதலால் எல்லாம் தெய்வயத்தனப்படி நடக்கும்.

அறிவாகரன்: அண்ணே! வீணை தர்க்கஞ் செய்யாதீர்; நானும் கொஞ்சம் அறிவாளிதான். தெய்வயத்தனம் என்று வாய் வேதாந்தம் பேசிக் கொண்டிருந்தால் வயிறு நிரம்புமா? அரிசியைக் குத்தவேண்டும்; சமையல் செய்யவேண்டும்; இலை யில் படைக்க வேண்டும். இவ்வளவு செய்தாலும் போதாது. தெய்வயத்தனம் என்று சும்மாகிடந்தால் படைத்த அன்னம் வாய்க்குள் தானே நுழையுமா? எடுத்து உண்ண வேண்டும். உண்டால் மட்டும் போதாது; விழுங்க வேண்டும்.

அனந்தன்: நில்; இதுவரை மனிதயத்தனம் சரி; அதற்குமேல் நடப்பது தெய்வயத்தனம். விழுங்கிய சோறு முதலிய உணவுகளை, அங்கே அரைப்பதும், வேக வைப்பதும், செமிக்கச் செய்வதும், சத்தையும் அசத்தையும் பிரிப்பதும் ஆகிய இந்த செயல்கள் நம் மால்தான் ஆகின்றனவா? உண்டு உறங்குகின் றோம். நாம் உறங்கினாலும் ஒரு சக்தி உறங்காமல் இருந்து உண்ட உணவைச் சீரணம் புரியவைத்து நம்மை உடன் இருந்து அருள் புரிகின்றது, அது தான் தெய்வத் திருவருள். அதனை நினையாதவன் அறிஞனாகமாட்டான்.

இவ்வாறு அனந்தனும் அறிவாகரனும் தமக் குள் தெய்வ யத்தனம் சிறந்தது என்றும், பிரயத் தனம் சிறந்தது என்றும் பலகாலும் வழக்கிட்டு வாதிட்டார்கள்; வரவர இந்த வாதம் வலுப் பட்டது.

இருவரும் ஒருநாள் ஒரு முடிவுக்கு வந்தார்கள்; அந்த ஊரையாளுகின்ற அரசர் ஒப்பற்ற உணர்வும்

பேரறிவும் படைத்தவர்; அவரிடம் கூறி நியாயம் உணர வேண்டும் என்று திட்டஞ்செய்தார்கள்.

அரசனிடம் போய் இருவரும் தமது கட்சிகளைக் கூறினர்கள். மன்னர் பெருமான் இருவருடைய வாக்கு மூலங்களையும் கேட்டனர்.

மன்னர் சற்று நேரம் மௌனமாக இருந்தார். ம்...என்று பெருமூச்சு விட்டார். இருவரும் தத்தம் கொள்கையை நன்ருகவும் நியாயமாகவும் அழுத்தந் திருத்தமாகவும் கூறி நிலைநாட்டுகின்ருர்கள். இனி இவர்கட்கு அநுபவபூர்வமாக உணர்விக்க வேண்டும். அப்போதுதான் இவர்கள் ஒப்புக்கொள்வார்கள் என்று அறிவாற்றல் படைத்த அரசர் கோமகனுர் எண்ணினுர்.

மறுநாள் காலையில் இருவரையும் அழைத்தார். "இன்று நீங்கள் என் கட்டளைப்படி நடக்கவேண்டும்; இன்று நீவிர் இருவரும் உபவாசம் இருக்கவேண்டும்; ஒன்றையும் அருந்தக் கூடாது" என்று கூறி இருவரையும் ஒரு புறத்தே இருக்குமாறு செய்தார்.

அனந்தன் என்பவன் "எல்லாம் ஈசன் செயல்; தெய்வத் திருவருளின்படியே யாவும் நடைபெறும்; நன்றே வரினும் தீதே வரினும் நான் இதற்கு அஞ்சேன். அனைத்தும் அவன் செயல்" என்று எண்ணி மனதை ஒரு முகப்படுத்திக்கொண்டு சிவமந்திரம் செபித்துக் கொண்டிருந்தான். அறிவாகரன், "இந்த அரசனுக்கு என்ன மதியீனம்? நம்மை ஏன் பட்டினி போடுகின்ருன். சுத்தமண்டு; இது அவசியம் அல்லாத ஒரு செயல்; என்ன செய்வது? அரச

னுடைய ஆணைக்கு அடங்கித்தானே ஆக வேண்டும். உரலிலே தலையை நுழைத்துக் கொண்டு உலக்கைக்குப் பயப்படக் கூடாதுதானே. இந்த அனந்தனிடம் வாதிட்டிருக்கக் கூடாது'' என்றெல்லாம் எண்ணி மனம் சஞ்சலப் பட்டுக்கொண்டிருந்தான்.

இரவு 10 மணி ஆயிற்று; அந்த ஊரில் வரதமான ஒரு அம்பிகை ஆலயம். மன்னவர் அம்பிகைக்கு முன் ஒரு வெண்கலப் பானையில் நெய் மிதக்கும்படி கற்கண்டு சாதம் வைத்து விளக்கையணைத்துவிட்டு ''நீங்கள் இருவரும் இன்றிரவு இக்கோயிலுக்குள் இருக்கவேண்டும்'' என்று கட்டளையிட்டு, கோயிலுக்குள் விடுத்துப் பூட்டிவிட்டார்.

இருள் நிறைந்த கோயிலுக்குள் இருவரும் நுழைந்தார்கள். அனந்தன், தேவியை மனக் கண்ணால் நோக்கி, ''அம்பிகை! கருணையன்னையே! எல்லாம் நின் செயலே! தெய்வத் திருவருளின்படி யாவும் நடக்கும்'' என்று கூறிவிட்டு ஒருபுறத்தில் பதுமாசனம் இட்டு அமர்ந்தான். ''சிவசிவ சிவசிவ'' என்று கூறிக்கொண்டு ஒருமைப்பட்ட உள்ளத்துடன் தியானித்துக் கொண்டிருந்தான்.

அறிவாகரன், மிகுந்த துக்கத்தை யடைந்தான். அனந்தனை நோக்கி ''அண்ணே! காலையிலிருந்து ஆகாரமேயில்லை. இந்த நிலையில் நீ ஏன் வரட்டுத் தவளை போல் சிவசிவ என்று கத்தி தொண்டைத் தண்ணீரை வற்றவைக்கின்றாய்? உன்னுடன் சேர்ந்து நான் இந்த கதிக்கு ஆளானேன். திரு

வருள் திருவருள் என்று கத்துகின்ருயே. ஒருவரு ளும் இப்போது உதவாது'' என்று கூறுஞன்.

இரவு 12 மணி ஆயிற்று; அறிவாகரனுக்குப் பசிதாங்க முடியவில்லை. மெல்ல கையாலும் காலா லும் தடவிக்கொண்டு அந்தக் கோயில் முழுவதும் சுற்றிஞன். அம்பிகைக்கு முன் இருந்த வெண்கலப் பானை கிடைத்தது. மெல்ல அதில் கையை விட் டான்; நெய் மணம் மூக்கைத் தொளைத்தது; கற் கண்டு பொங்கல் எப்படி இருக்கும் அவனுக்கு? காலையில் இருந்து ஒன்றும் சாப்பிடாமல் பட்டினி கிடந்தவன்; தேவாமிர்தம் போல் இருக்குமல்லமா?

சிறிது எடுத்து வாயில் வைத்தான்; தித்தித்தது. அதில் முந்திரிபருப்பு, சாரப்பருப்பு, பாதாம்பருப்பு, ஏலக்காய், குங்குமப்பூ எல்லாம் சேர்ந்திருந்தன. மிகுந்த சுவையுடன் கூடியிருந்தது; ''ஆ! ஆ! என்ன அருமை! அண்ணே! இதோ பாரும்; நான் உன்னைப் போல் வரட்டுச் சித்தாந்தம் பேசிக்கொண்டே வாளா கிடவாமல் முயற்சி செய்தேன்; கிடைத்தது பிரசா தம். நெய் ஒழுகுகின்ற கற்கண்டுச் சாதம்; உன்னைப் போல் ஒரு புறம் கிடந்து சிவசிவ என்ருல் இது எனக் குக் கிடைத்திருக்குமா? தன் முயற்சி வேண்டும்; இப் போதாவது தெய்வயத்தனம்— திருவருள் என்ற பிடி வாதத்தை விட்டு மெல்ல எழுந்து என் பக்கம் வாரும்; கொஞ்சம் பிரசாதம் தருவேன்'' என்ருன்.

அனந்தன், ''தம்பி! மனிதப் பிரயத்தனம் அற்பப் பயனையே தரும்; அப்பன் அருள் அளவற்ற பயனைத் தரும். ஆனல் எப்போது தரும்? எந்த வகையில்

தரும்? என்று நம்மால் வரையறுத்து அறிய முடியாது. நான் இருந்தபடியே இருப்பேன். சிவன் செயல்படி எல்லாம் நடைபெறும். திருவருளைப் பழிக்காதே. சாமானியமான அறிவைக்கொண்டு திருவருளின் திறத்தை அறிய முடியாது. நரி வாலைக் கொண்டு கடலாழங் காண முடியாது. என் செயலாவது யாதொன்றுமில்லை; இனித் தெய்வமே உன் செயலே என்று உணரப் பெற்றேன்!'' என்பது அநுபவமிகுந்த அருள் ஞானியின் அமுதவாக்கு—ஆதலால் நான் இங்ஙனமே யிருப்பேன். நீ பசியாறினுல் நான் ஆறியது போல்தான்'' என்ருன்.

கற்கண்டுப் பொங்கல் முக்கால் பகுதி சாப்பிட்டு முடிந்தது. அடியில் ஒரு கோலி பருமனுள்ள கற்கள் இருந்தன. அறிவாகரன், கோயில் பிரசாதத்தில் கற்கள் இருப்பது இயல்புதானே. ஆனுல் இத்தனைப் பெரிய கல்லுகளா? அடபாவமே! இந்தக் கோயில் நிருவாகஸ்தர்கட்கு மூளையிருக்கின்றதா? அண்ணே! சிவசிவ என்கின்ற உனக்கு இந்தா இந்தப் பரிசு'' என்று அத்தக் கற்களை அவன் தலையில் ஒவ்வொன்ருக எறிந்தான.

இருளில் அனந்தன் தலையிலும் மார்பிலும் கற்கள் வந்து வீழ்ந்தன. அனந்தன், ''தம்பி! நீயா அடிக்கின்ருய்! அம்பிகை என்னை அடிக்கின்ருள். அவளுடைய சந்நிதியில் நிகழ்கின்றவை யாவும் அவள் செயலே. இந்தக் கற்கள் அவள் தந்த அருட்பிரசாதங்கள்'' என்று புன்னகை பூத்த முகத்துடன் அந்தக் கற்களை எடுத்து வைத்துக்கொண்டான்.

அறிவாகரன் கையையும் நாவினுல் சரி செய்து கொண்டு, உண்ட மயக்கம்; அங்ஙனமே அயர்ந்து நன்கு உறங்கினுன். அனந்தன் விடிகின்றவரை சிவ நாமத்தைச் செபித்தான்.

விடிந்தது. மன்னவஞர் வந்து கதவைத் திறந்தார். இருவரும் எழுந்து அரசனை வணங்கினுர்கள்.

அரசர், "என்ன, உங்களுக்கு என்ன அநுபவம் வந்தது? இப்போது என்ன கூறுகின்றீர்கள்?" என்ருர்.

அறிவாகரன், "அரசே! கைப்புண்ணுக்குக் கண்ணுடி வேண்டுமா? சந்தையில் அடித்தற்குச் சாட்சி வேண்டுமா? இவர் சிவசிவ என்று இரவு முழுவதும் பட்டினியிருந்தார்; தெய்வத் திருவருள் இவருக்கு முன்னின்று அருளவில்லை. நான் பிரயத்தனப்பட்டேன்; கற்கண்டு அன்னம் பானையுடன் கிடைத்தது. உயர்ந்த நெய் மிதக்கக் கிடைத்தது. ஆ...ஆ! அருமையிலும் அருமை! உண்டேன்; உவந்தேன்; உறங்கினேன். இப்போது தெம்பாக இருக்கின்றேன். ஆதலால் பிரயத்தனம்தான் சிறந்தது" என்ருன்.

"நீர் என்ன கூறுகின்றீர்?" என்று அனந்தனைக் கேட்டார்.

"நான் என்ன சொல்லவேண்டும். ஈசன் திருவருட் செயல்படிதானே யாவும் நடைபெறும். நம்மால் ஒரு அணு அசையுமா? இரவு இவர் என்னைக் கல்லால் அடித்தார். ஆனுல் இவர் அடிக்கவில்லை.

இவரை அதிஷ்டித்து சிவபெருமானே அடித்தார். அடித்த கற்கள் யாவும் இதோ'' என்று மடியிலிருந்து எடுத்தார்.

அவைகள் கற்கள் அல்ல; மாணிக்கம், வைரம், வைடூரியம், பச்சை, நீலம், கோமேதகம், நவரத் தினங்கள், ஒவ்வொன்றும் எத்தனையோ ஆயிரம் பொன்பெறும்.

''அறிவாகரரே! பார்த்தீரா தெய்வத் திருவருளை! நான் சர்க்கரைப் பொங்கலையும், பொங்கலுக்கு அடியில் நவரத்தினங்களையும் வைத்தேன். நீர் பிர யத்தனப்பட்டீர் அதற்குப் பயன் உண்டு. அது அற் பப்பயன்; ஒரு வேளை பசியாறக்கூடிய பயன்.

இவர் திருவருளைத் திடமாக நம்பி தெய்வ யத் தனப்படி நடைபெறட்டும் என்று இருந்தார். நீர் வெறும் அன்னத்தை உண்டு விலைமதிக்க முடியாத நவமணிகளை இவர்மீது எறிந்தீர். இவருக்குத் திரு வருள் இருந்த இடத்தில் தேடிவந்து அருளுகின்றது. இனி இவர் ஆயுள் உள்ளவரை இந்த நவமணி களால் கவலையின்றி வாழ்வார். எனவே மனித யத் தனம் அற்பப் பயனையே நரும். மெய்வருந்தக் கூலி தரும். தெய்வத் திருவருள் அளவற்ற நலன்களை நல்கும். ஆகவே பிரயத்தனமும் வேண்டுந்தான். அதே சமயம் தெய்வத் திருவருளைச் சிந்திக்கவேண் டும். தெய்வ யத்தனத்தைப் பழிக்கக்கூடாது. நீர் பழித்துத்தானே உம்மிடம் கிடைத்த கற்களை இவர் மீது எறிந்துவிட்டீர். இவர் அவற்றை சினத்தால் எடுத்து உம்மீது எறியாமல், தெய்வமே அடித்தது

என எண்ணி அமைதி கொண்டார். ஆகவே நீவிர் இருவரும் இனியும் வ. திட்டமல் செல்லுங்கள். தெய்வத் திருவருளே எல்லாவற்றுக்கும் பரம காரணம்'' என்றுர் மன்னர்.

அறிவாகரன் வெறுங்கையுடன் திரும்பினுன். அனந்தன் நவமணிகளுடன் திரும்பினுன். தெய்வத் திருவருளை சிந்தித்தான்; வந்தித்தான்; வாழ்த்தினுன்.

# எல்லாம் ஈசன் செயல்

முருகப்ப செட்டியார் உப்பு வியாபாரி. சிறந்த சிவ பக்தர். சதா திரு ஐந்தெழுத்தை ஓதிக் கொண்டேயிருப்பார். மாலையில் சிவாலயம் போவார். திருமுறைகளை ஓதுவார். "கைலாச நாதா! கருணைக் கடலே! தேவதேவா! மகாதேவா! நீலகண்டமூர்த்தி! என்னைக் காத்தல் நின் கடன்" என்று துதி செய்வார்.

சந்தைகள் தோறும் கழுதைகள் மீது உப்பு மூட்டைகளை யேற்றிக் கொண்டுபோய் விற்பார். அவர் மிகுந்த ஏழையுமன்று; பெரும் பணக்காரரு மன்று. ஏதோ ஒரு சிறு முதலைவைத்து வியாபாரம் புரிந்து அதனால் வரும் வருவாயைக் கொண்டு, குடும்பத்தைக் கண்ணியமாக நடத்தி வந்தார். தன் வீட்டை நாடிவந்தவர்க்கு அன்னமும் நீரும் வழங்கி உபசரிப்பார். நல்ல பண்பும் நண்பும் உடைய அவர் இவ்வாறு இனிது வாழ்ந்தார்.

ஒருநாள் கழுதைகளின் மீது உப்பு மூட்டை களை ஏற்றிக்கொண்டு எட்டு மைல்களுக்கு அப்பா லுள்ள சந்தைக்குப் போய் சிறிது உப்பை விற்றார். அன்று அதிகம் விற்கவில்லை. உப்பை எல்லாம் கழுதைகளின் மீது திரும்பவும் ஏற்றிக்கொண்டு, உடன் உள்ள வியாபாரிகளுடன் புறப்பட்டு ஊருக்கு வந்துகொண்டிருந்தார். வரும்போது சிவ பாராயணஞ் செய்து கொண்டே வந்தார்.

திடீர் என்று கருமேகங்கள் எழுந்து கனமழை கொட்டியது. உப்பு வியாபாரி முருகப்ப செட்டியாருக்கு மிக்க வருத்தம். "சிவபெருமானே! ஏழைப் பங்காளா! இது என்ன சோதனை? ஆண்டவனே! உன்னைச் சதா தியானித்து வழிபடுகின்ற எனக்கு இந்தப்படி நஷ்டத்தைக் கொடுக்கலாமா? சுவாமி! அநியாயமாக என் உப்பெல்லாம் கரைந்து போய் விட்டனவே! ஐயா! நான் என் செயவேன். கண்ணுதற் கடவுளே! உனக்குக் கருணை யில்லையா? பரம கருணாநிதி! இவ்வாறு என்னைத் துன்பத்துக்கு ஆளாக்கி விட்டனையே, இது தர்மமா? இது முறையா? இது நீதியா?" என்று சலித்துக்கொண்டார். கடவுளை வெறுத்துக்கொண்டார்.

சிறிது தூரம் வந்தவுடன் நல்ல இருள் சூழ்ந்து விட்டது. மூன்று கள்வர்கள் புதரில் ஒளிந்திருந்து திடீரென்று புலிகள்போல் வெளிப்பட்டு தங்கள் கையில் இருந்த துப்பாக்கியை எடுத்து நீட்டினார்கள். சுடுவதற்கு முயன்றார்கள். மழையில் நனைந்து விட்டபடியால் துப்பாக்கி வெடிக்கவில்லை. திருதிருவென்று விழித்தார்கள். வியாபாரிகள் ஆறு, ஏழு பேர்கள் துப்பாக்கியை நீட்டிய உடன் உயிர் போய் விட்டது என்று அஞ்சி நாடி நரம்புகள் யாவும் ஒடுங்கி நின்றார்கள். மழையில் மருந்து நனைந்து துப்பாக்கி வெறுங் குழாயாகச் செயலற்றவுடன், வியாபாரிகள் அவர்கள் மீது பாய்ந்தார்கள். கள்ளர்கள் துப்பாக்கியைப் போட்டுவிட்டு ஓடிவிட்டார்கள். முருகப்பசெட்டியாருக்கு உயிர் திரும்பியது. "ஆ! ஆ! மழை கொட்டி உப்பு நனைந்தவுடன் தெய்வமே இப்

படி மழையை அனுப்பி என் உப்பைக் கரைத் தனையே, உனக்குக் கண் இல்லையா?'' என்று தெய் வத்தை நொந்து கொண்டோமே. மழையில்லையானல் துப்பாக்கி மருந்து நனைந்திருக்காது; நம்மைக் கள்வர் கள் சுட்டுத்தள்ளி யிருப்பார்கள். உப்பு கரைந் தாலும் உயிர் கரையாமல் இருந்ததே நல்லது. ''கருணைக்கடலே! என்னைக் காப்பாற்றும் பொருட்டு மழை இல்லை; கருணை மழை பொழிவித் தருளினீர். இல்லையேல் இந்நேரம் இறந்தே போயிருப்பேன். ஐயனே! உன் கருணைக்கு நான் என்ன கைமாறு செய்ய வல்லேன்? என்றும் தேவரீரைக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஏத்தி ஏத்தி உமது கருணை வாழி'' என்று துதி செய்து வீட்டைச் சேர்ந்தார்.

# பூவும் - நீரும்

ஒரு கானகத்தில் உத்தமமான தாய் தந்தையர்கள் அழுதுகொண்டிருந்தார்கள். அவர்களுடைய அருமந்த புத்திரன் வந்தான்.

"அம்மா ! அப்பா ! ஏன் அழுகின்றீர்கள்?"

"மகனே ! ஒன்றுமில்லை. கண்ணில் தூசுபட்டது"

"அம்மா ! அப்பா ! சிவனடியார்கள் விளையாட்டுக்குக்கூடப் பொய்சொல்லக்கூடாது. உண்மையை ஒளிக்கின்றீர்கள். உங்கள் அழுகைக்குக் காரணம் யாது?"

"மகனே ! உன்னைப் பற்றித்தான் நாங்கள் கவல்கின்றோம்."

"ஆ ! என்னைப் பற்றி அழுகின்றீர்களா? நான் என்ன பிழை செய்தேன் ?"

"அருமைக் கண்மணி! நீ பிழை செய்திருந்தால் நாங்கள் அழமாட்டோம். பிழை செய்யாமையால் தான் வருந்துகின்றோம்."

"அம்மா ! அப்பா ! உங்கள் சொற்கள் விந்தையாக இருக்கின்றன; பிள்ளைகள் குற்றஞ் செய்யாமையால் வருந்துகின்றவர் உண்டோ ? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே ?"

"அருமைப் பாலகனே ! நாங்கள் பன்னெடுங் காலம் புதல்வன் இன்றி வருந்தினோம். சிவ

மூர்த்தியை வேண்டி அரிய பெரிய தவஞ் செய்தோம். சிவபெருமான் தோன்றி என்ன வரம் வேண்டும் என்ருர். புத்திர வரம் வேண்டும் என்ரேம். "கூன், குருடு, சப்பாணி, முடம், திருடு, சூது, வாது, வஞ்சனே, பொய், மடத்தனம் இப்படியான குணம் அமைந்த பிள்ளே வேண்டுமானுல் 100 ஆண்டுகள் வாழும். அன்பு, அடக்கம், கல்வி, கேள்வி, அறிவு முதலிய நற்குணங்கள் அமைந்த புதல்வன் வேண்டுமானுல் 16 ஆண்டுகள் இருக்கும். உங்கள் விருப்பம் யாது?" என்ருர்.

நாங்கள் சற்புத்திரனே வேண்டினேம். அந்த வரத்தின்படி மகனே! நீ அவதரித்தனே. எனவே உனக்கு ஈசன் தந்த ஆண்டு பதினறு. நேற்றுடன் பதினேந்து ஆண்டுகள் முற்றுப் பெற்றன. இன்று பதினருவது ஆண்டு பிறந்துவிட்டது. இன்னும் உன் வாழ்நாள் ஓராண்டே உளது. நாங்கள் இருக்க, எங்கள் கண்முன்னே குணக்குன்றமாகிய நீ மாள்வதா? அதனேக் கண்டு நாங்கள் எங்ஙனம் சகிப்போம்? இதனே நினேக்க எங்கள் உள்ளம் வெடித்து விடும்போல் வேதனே மேலிடுகின்றது."

"அம்மா! அப்பா! சற்று நில்லுங்கள். எனக்குப் பதினறு ஆண்டு என்று வரந் தந்தவர் யார்?"

"சிவபெருமான்."

"அவர் இப்போது இருக்கின்ருரா? இறந்து விட்டாரா?"

"மகனே! இது என்ன வினு? சிவபிரான் இறக்கின்றவரா? மூவருக்கும் தேவருக்கும் இறப்பு பிறப்பு

உண்டு. அமிர்தம் உண்ட அமரர்கள் இறப்பார்கள்; ஆலகாலமுண்ட நீலகண்ட பரமன் என்றுமுள்ள வர். அவர் நித்தியர்.''

"அம்மா! அப்பா! எனக்கு ஈசன் நித்தியர் என்று தெரியும். நீங்கள் அழுவதைக் கண்டால் வரந்தந்தவர் காலமாகி விட்டாரோ? என்ற ஐயம் நிகழ்கின்றது. வரந் தந்த வள்ளல் இருக்கின்ற போது, வரத்தை மாற்றி வாங்கிவிடலாந்தானே? இதற்கு ஏன் அழுகை? நீவிர் சிவனை எப்படி வழி பட்டீர்கள்?''

"மகனே! பூவும் நீருங்கொண்டு வழிபட் டோம்.''

"இப்போது பூவும் நீரும் உண்டுதானே?''

"ஆம்; பூவும் நீரும் எங்கும் இருக்கின்றன.''

"நீவிர் வருந்தற்க. வரந் தந்த வள்ளல் சிவ பெருமான் இருக்கின்றார். அவரைத் திருமஞ்சனஞ் செய்ய நீர் இருக்கின்றது. அருச்சனை செய்ய மலர் இருக்கின்றது; அருள்புரிய அப்பரங் கருணைத் தெய்வம் இருக்கின்றது. வரம்பெற நான் இருக்கின் றேன். கண்டு மகிழ நீங்கள் இருக்கின்றீர்கள். அறம் பிறழ்ந்து வந்தால் உடைபட இயமன் இருக்கின் றான்; வருந்தற்க.''

மார்க்கண்டேயர் மலர்க் குடலை எடுத்துப் புறப் பட்டார்; சிவலிங்கமூர்த்தியை நித்தமும் நீராட்டி மலர் சூட்டிக் காதலாகிக் கசிந்து கண்ணீர் பெய்து திருஐந்தெழுத்து ஓதி வழிபட்டார்.

அவருடைய உயிரைப் பற்றவந்த கூற்றுவன் தன் பரிவாரத்துடன் உதைபட்டு மாய்ந்தான். மார்க் கண்டேயர் என்றும் பதினாறுகவாழ்ந்தார். அவருக்கு வாழ்வு தந்தவை எவை? பூவும் நீரும் எனவுணர்க. இதனை யுணராத மாந்தர் பலர் வறிதே வாழ்ந்து மாய்கின்றார்கள்.

புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணல் அதுகண் டருள்புரி யாநிற்கும்
எண்ணிலி பாவிகள் எம்மிறை ஈசனை
நண்ணறி யாமல் நழுவுகின் றாரே.

—திருமூலர் திருமந்திரம்

ஒரு குடங்கையில் தண்ணீரை மொண்டு இலிங் கத்தின் மேல் வார்த்து, அன்புடன் அறுகு, வில்வம் ஒன்றேனும் இட்டுப் பூசித்தவர் இப்பரந்த வுலக மெல்லாம் ஆண்டு சிவபதஞ் சேர்ந்து பேரின்ப முறுவர்.

ஒருகுடங்கையிற் சலங்கொண் டறுகுவில்வ மொன்றினால்
திருகு சிந்தை யிற்றிலிங்க பூசை செய்த சீலர்தாம்
பெருகியுற்ற பிருதுவிப் பரப்பெலாம் புரந்துபின்
அருகிருந்து சிவபதத்தில் அரசு செய்ய வல்லரே.

—சிவரகசியம்

சிவலிங்கமூர்த்தியைப் பூவும் நீருங்கொண்டு உருகிய உள்ளத்துடன் பூசித்தோர் இம்மையில் எல்லா நலன்களும் பெற்று, மறுமையில் இந்திராதி இமையவர் போற்றி செய்ய இன்புற்று, பின்னர் முத்தி நலமும் பெறுவர்! (மீட்டிங்கு வாராத வீடு பேறடைவர்.) சிவ ரகசியம் என்ற நூல் கூறுகின் றது. கன்றை எடுத்து எறிந்து விளாவை யுதிர்த்து

காற்று மழைக்கு அஞ்சிய பசுக்களின் பொருட்டுக் குன்றெடுத்து மழை தடுத்த திருமாலை விடையாகக் கொண்டு, விடைக்கொடியுடன் கருணை வடிவு கொண்டு, மணி மன்றில் திருவடி எடுத்து அருள் புரியம் சிவபெருமானுடைய மலரடியில் மலர்எடுத்து அர்ச்சித்த அடியார்கள், இன்றெடுத்த பிறவி இனி எடுக்கமாட்டார்கள்.

இனிய கனியமுதம் போன்ற இந்தப் பாடலைப் படியுங்கள்:

கன்றெடுத்து விளவெறிந்து காலெடுத்த மழைக்குடைந்த
காலி காக்கக்
குன்றெடுத்த மால்விடையின் கொடியெடுத்து வடி
வெடுத்துக் கூறுெனுத
மன்றெடுத்த சேடியின் மலரெடுத்துச் சாத்தியபின்
வழிபட்டோர்கள்
இன்றெடுத்த உடற்பிறவி இனியெடா வண்ணமெண்ணும்
எய்துவாரே.

பூவும் நீரும் கொண்டு உமையம்மையார் கச்சியம் பதியில் தனி மாமரத்தின்கீழ் இறைவனை வழிபட்டு இடப்பாகம் பெற்றார்.

பூவும் நீரும்கொண்டு திருமால் சிவமூர்த்தியைப் பூசித்துச் சக்கரம் பெற்றார்.

பூவும் நீரும்கொண்டு இராமர் பூசித்து நலம் பெற்றார்.

பூவும் நீருங்கொண்டு கண்ணபிரான் சிவபெருமானைப் பூசித்து சந்ததி பெற்றார்; அம்மைந்தனுக்குச் சாம்பன் என்று பேரிட்டார்.

இவ்வாறு மூவரும், தேவரும், முனிவரும், சித்தரும், முத்தரும், பக்தரும், தானவரும், வானவரும் சிவமூர்த்தியைப் பூவும் நீரும் கொண்டு வழிபட்டு நலம் பெற்ருர்கள்.

''பூவார் மலர்கொண்டு அடியார் தொழுவார் புகழ்வார் வானேர்கள்''
''ஏடுடைய மலரான் முனைநாள் பணிந்தேத்த அருள் செய்த
பீடுடைய பிரமாபுரம் மேவிய பெம்மான்''
—தேவாரம்

''தினத்தினஞ் சதுர் மறைமுனி முறைகொடு
புனற் சொரிந்தலர் பொதிய விணவரொடு
சினத்தை நிந்தனை செயு முனிவரர் தொழ மகிழ்வோனே''
—திருப்புகழ்

ஒரு பெரிய அரண்மனையில் அமைச்சர், அரசர் முதலியோர்கட்கு உயர்ந்த உணவு படைக்கப்படுகின்றது. நெய்யின் நறுமணம் கமகம என்று நெடுந்தூரங் கமழ்கின்றது. அவ்வழியே சென்ற விறகு தலையனுக்கு நாவில் நீர் ஊறியது. ஆசையால் உந்தப்பட்டான். பாவம் அங்கே நுழைய முடியுமா? விரள விரள விழித்தான். அது சமயம் ஒரு பெரிய பிரபு வந்தார், அவர் பின்னே மெல்லச் சென்ருன். விருந்துக்கு ஏற்பாடு செய்தவர், பிரபுவினுடைய ஏவலன் என்று எண்ணினர். விறகுதலையன் உள்ளே சென்று ஒருபுறம் அமர்ந்தான். லட்டு, ஜிலேபி, வடை, பாயசம், உணவு எல்லாம் வாரி வாரியுண்டான்.

''கயிலாய மலைக்கு நான் செல்ல முடியுமா? அது சிவலோகம். பெரிய பெரிய தவமுனிவர்கள்

செல்லக் கூடிய இடம். கயிலை எங்கே? அடியேன் எங்கே? ஆனால் ஒரு தந்திரம் புரிந்தேன். பூவும் நீரும் சுமந்து அடியார் ஒருவர் சென்றார். அடியேன் அவர் பின்னே சென்றேன். சிவமூர்த்தியைக் கண்டேன். சிவபோகம் என்னும் பேரின்பத் தேனை உண்டேன். பூவும் நீரும் சுமப்பார்க்குக் கயிலையில் செல்வாக்கு நிரம்பவுண்டு'' என்று திருநாவுக்கரசு சுவாமிகள் கூறுகிறார்கள்.

''போதொடு நீர் சுமந்தேத்திப் புகுவார் அவர்பின் புகுவேன்
யாதும் சுவடுபடாமல் ஐயா றடைகின்றபோது
காதல் மடப்பிடியோடுங் களிறு வருவன கண்டேன்
கண்டேன் அவர்திருப்பாதங் கண்டறியாதன கண்டேன்''

ஆதலால் நாள்தோறும் பூவும் நீருங்கொண்டு மனிதவுடம் பெடுத்த ஒவ்வொருவரும் புனிதராம் பொருட்டு இறைவனை வழிபட்டு, மும்மை நலன்களும் பெற்றுச் செம்மையடைவார்களாக.

# தெய்வத்துணை

கானகத்தில் ஒரு சந்யாசி நெடுங்காலமாகத் தவஞ்செய்து கொண்டிருந்தார். அவர் சிறந்த ஒழுக்கமும் உயர்குண நலனும் உடையவர். ஒருமைப்பட்ட மனத்துடன் புலன்களை வென்று தவ வேந்தராக அவர் திகழ்ந்தார். அக்கானகத்தில் வாழும் கொடிய விலங்கினங்களும் அவரிடம் குழந்தைகள்போல் அடங்கி அன்பு செய்தன.

அம்முனிவர் பெருமான் பச்சிலைகளையும், உலர்ந்த சருகுகளையும், கிழங்குகளையும், நீரையும் உணவாகக் கொண்டு உடம்பை வாட்டி, வினைகளை வீட்டி தவசீலராகத் திகழ்ந்தார்.

ஒருநாள் அவர்முன் மகாலட்சுமிதேவி தோன்றி காட்சியளித்தனர். முனிவர் திருமகளைத் தொழுதார்.

"முனீந்திரா! நீ முன்னே செய்த நல்வினைப் பயன் காரணமாக சிலநாள் நான் உன்னிடம் தங்கியிருக்கப் போகின்றேன்".

"தாயே! நான் தவத்தையே தனமாகக் கொண்டவன். வெறுக்கை (செல்வம்) மீது வெறுக்கையுற்றவன். உமது கருணையும் அதனால் வரும் செல்வமும் நாட்டில் இல்லறத்தாருக்கல்லவா வேண்டும்; என்னிடம் நீ இருந்து பயனில்லையே."

"தபோதனரே! இப்போது உனக்கு செல்வம் வேண்டாம் என்றிருக்கலாம். முன்னே நீ செய்த புண்ணியத்தின் பயனுக உன்னிடம் குறிப்பிட்ட ஒரு காலம்வரை இருக்கத்தான் வேணும். இது இறைவனுடைய அருளாணையின் நியதி. நான் உன்னிடம் இருக்கும்போது உனக்கு எல்லாம் நன்மையாகத் தான் முடியும். ஒரு பயமும் வராது. சகல சித்திகளும் உண்டாகும். அரச மரியாதைகள் கிடைக்கும். உலக மக்கள் மதித்துக் கொண்டாடி உபசரிப்பார்கள்."

முனிவர் "அம்மா! எல்லாம் ஈசன் செயல். உன் கருணை கடாட்சப்படி நடக்கட்டும்" என்ருர்.

அவரிடம் லட்சுமியின் பரிபூரண அருள் பதிந்தது.

முனிவர் நீராடித் திரும்பும் வழியில் ஒரு பெரும் புதையல் வெளிப்பட்டது. அதில் தங்கப் பவுன்கள் நிறைந்திருந்தன லட்சுமி கடாட்சம் ஏற்பட்டிருக்கின்ற காரணத்தால் அவருடைய காலடியில் அது வந்தது. அவரோ ஆசாபாசம் விட்டவர். அதைக் கண்டு சிரித்தார். "தேவி! இது எனக்கு ஏன்? தலை மயிர் இல்லாதவருக்கு மலர்ச்செண்டால் என்ன பயன்? தவஞ் செய்கின்ற எனக்கு இப்பணம் எதற்கு?" என்று கூறி அதனைத் தீண்டாமலேயே தான் தவஞ்செய்யும் மரத்தடி யடைந்தார்.

மறுநாள் முனிவர் "நம்மிடம் திருமகள் தங்கியிருக்கின்ருளே! அரச மரியாதை கிடைக்கும் என்

ருளே! இதை சோதித்துப் பார்ப்போம்'' என்று எண்ணினர்.

அந்தக் காட்டுக்கு அருகில் இராஜசேகரம் என்ற ஒரு நகரம். அதனைப் பராந்தகன் என்ற அரசன் அரசு புரிந்து வந்தான். முனிவர் அரசவை சென்ருர். பெரிய மண்டபம்; அமைச்சர்கள், பிர தானியர்கள், ஏனைய பரிசனங்கள் புடைசூழ மன்னர் பெருமான் அரியணை மீது அமர்ந்திருந்தான். முனி வரைக் கண்டு எழுந்து எதிர்வந்து தொழுதான்.

முனிவர் அம்மன்னவன் தலையில் இருந்த மணி மகுடத்தைக் காலால் உதைத்தான். (லட்சுமி தேவி யின் சொல்லை சோதிக்குமாறு இவ்வாறு செய்தார்.)

சபையில் உள்ளவர்கள் ஆ! ஆ! என்று அலறி ஞர்கள். அமைச்சர்கள் திடுக்கிட்டார்கள். மன்ன வன் மனம் பதறியது. அந்த ஒரு கணத்தில் அந்த சபையே ஆடிவிட்டது. முனிவருக்கு என்ன ஆபத்து வருமோ என்று எல்லோரும் எண்ணினர் கள்.

இலட்சுமிதேவி முனிவருடைய நடையை நோக் கிப் புன்னகை புரிந்தாள். இந்த முனிவனிடம் நாம் அருள் புரிந்தால் இவன் வெறி பிடித்தவன் போல் இப்படி மன்னவனுடைய மணிமகுடத்தை உதைத் தானே என்று கருதினள். உடனே திருமகள் அரு ளால் அந்தக் கிரீடத்திலிருந்து ஒரு நாகப்பாம்பு வெளிவந்து படம் எடுத்து ஆடியது. இதைக் கண்ட அரசனும் அவையோறும் அதி அற்புதங் கொண்டார்கள். ஆ! முனிவர் பெருமான் திரிகால

ஞானி. நமக்கு வர இருந்த இடரைக் கருணையினுல் தவிர்த்தருளினுர்.

இந்தப் பாம்பு முடிக்குள் நுழைந்திருக்கவேண்டும். நான் இதை அறியாமல் எடுத்துத் தலையில் அணிந்து கொண்டேன். ஆ! இந்தப் பாம்பு கடித்திருந்தால் நான் மாண்டுபோவேன். இதை கானகத்தில் தவஞ் செய்யும் இவர் யோகக் காட்சியால் கண்டு, நாகம்பாம்பு கடித்து அதனுல் நான் மாளாது வாழும் பொருட்டு என்னைக் காத்தருள வேண்டி வந்து உதவி செய்தார் என்று மன்னவன் நினைத்தான்.

மாதவ முனிவருடைய மலரடிமீது பலமுறை வீழ்ந்து வணங்கினுன். "சிறியேனை வாழவைத்த தெய்வமே! என் இடர் களைந்த எந்தை பெருமானே! குடிமுழுதாண்ட குருமணியே! தங்கட்கு நான் என்ன கைம்மாறு செய்ய வல்லேன். தேவரீரை என் உயிருள்ள வரை பூசிப்பேன்; நேசிப்பேன்" என்றெல்லாந் துதித்தான். எல்லோரும் அவருடைய அடிமலர் மீது வீழ்ந்து தொழுதார்கள்.

அவரைப் புஷ்ப ரதத்தின்மீது ஏற்றி குடை, சாமரம், ஆலவட்டம் முதலிய உபசாரங்களுடன் மேளதாளங்கள் முழங்க விண்ணுலகம் அதிருமாறு, வாணவேடிக்கையுடன் ஊர்வலம் செய்தார்கள்.

முனிவர் சித்திக்கின்றுர். இது என்ன விந்தை. ஒரு விநாடியில் நமக்கு இத்துணைச் சிறப்பும் இராஜ மரியாதையும் நகர்வலமும் நடைபெறுகின்றன.

மன்னவனைக் காலால் உதைத்தேன். என் காலை வெட்டித் தண்டிக்க வேண்டிய மன்னன் காலில் வீழ்ந்து அடிமையாகி நிற்கின்றான். இது திருமகள் அநுக்கிரகம். முடியிலிருந்து அவள் சர்ப்பமாக வந்து இத்தனைக் கூத்தும் புரிவிக்கின்றாள். அவள் இன்னும் என்ன என்ன திருவிளையாடல் செய்யப் போகின்றாளோ? என்று எண்ணி தனக்குள் சிரித்துக்கொண்டார்.

அரண்மனைக்கு அருகில் உள்ள பூங்காவனத்துக்கு இடையில் கட்டியுள்ள சந்தன மாளிகையில் முனிவரைப் புதிய வெல்வெட்டு விரித்த ஆசனத்தில் அமர வைத்து மன்னன், மன்னனுடைய மனைவி, மகள் முதலியோர் மயில் விசிறி எடுத்து விசிறி பால், பழம், தேன், இளநீர் தந்து உபசரிக்கின்றார்கள். அதல பாதளத்தில் இருந்த ஒருவனை இமய மலையின் உச்சியில் அமர்த்தியதுபோல் இருந்தது. காட்டில் தனித்துப் போற்றுவார் ஒருவருமின்றி காய், சருகு உண்டிருந்த முனிவர் இன்று இராஜோபசாரத்துடன் தங்கப் பிடியிட்ட வெண் சாமரம் மன்னவனே வீச, பஞ்சு மெத்தையிட்ட தந்தக் கட்டிலில் வீற்றிருக்கின்றார்.

இப்படி சில தினங்கள் கழிந்தன. முனிவர் முடி மன்னனை நோக்கித் தான் கானகம் போகவேணும் என்றார். மன்னவன் மறுத்து "தேவரீர் இங்ஙனமே இருந்து எங்களை உய்விக்க வேண்டும்" என்றான்.

முனிவர் மீளவும் இலட்சுமியின் கருணையின் வலிமையைச் சோதிக்க நினைத்தார்.

நடு இரவு. அரசனும் அரசமாதேவியும் ஒரு கட்டிடத்துக்குள் பஞ்ச சயனத்தின்மீது பள்ளி கொண்டு உறங்கிக் கொண்டிருந்தார்கள். முனிவர் அந்த படுக்கை வீட்டுக்குள் நுழைந்து மன்னவன் முதுகிலும், மகா ராணியின் முதுகிலும் பளார் பளார் என்று நான்கு அடி கொடுத்து, இருவருடைய கரங் களைப் பிடித்து, கரகர என்று மாடுகளை இழுத்து வரு வதுபோல் இழுத்துக் கொண்டு வெளியே வந்தார். இது எத்துணை அடாத செயல். அரசருடைய படுக் கையறையில் மற்றவர் நுழையலாமா? கோப்பெருந் தேவியை மற்றவர் தீண்டலாமா? தீண்டி அடிக்க லாமா? தலை போகின்ற காரியம்.

மன்னவன் இன்னதென்றறியாமல்திகைத்து நின் ருன். இலக்குமிதேவி திடுக்கிட்டாள். தவ முனி வர் திடீர் என்று இந்த அடாத செயலைச் செய்து நம் மைச் சோதிக்கின்ருரே! நாம் அவரிடம் தங்கியிருக் கின்றபோது அவருக்கு ஒரு அவமரியாதை வரக் கூடாதே என்று எண்ணினுள். உடனே திருமகள் செயலால் அரசன் படுத்திருந்த கட்டிடம் திடீர் திடீர் என்று இடிந்து விழுந்தது. இதைக் கண்ட மன்ன வன் ஆ! ஆ! நான் இதன் உள்ளே படுத்து அயர்ந்து உறங்கிக்கொண்டிருந்தேனே. கட்டிடம் இடியப் போவதை அறிவுக் கண்ணுல் அறிந்த அருந்தவ முனிவர் என்னைக் காக்குங் கருணையால் இங்ஙனம் செய்தனர். இல்லையேல் நானும் என் தரும பத்தினியும் மாண்டு ஒழிந்திருப்போம். இப் பேராபத்திலிருந்து என்னைக் கருணை மேலீட்டினுல் காத்தருளினுர்.

'செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது'

இந்த உதவிக்கு என்ன கைம்மாறு செய்தாலும் ஈடா குமா? வாழ்நாள் முழுவதும் நாம் இவருக்கு மீளா அடிமையாகி வாழ்வதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும்'' என்று எண்ணிய பராந்தகன் மாத வருடைய மலரடியைப் பலகாலும் பணிந்து எழுந் தான். கண்ணீரால் அவருடைய கால்களைக் கழுவினுன்.

இச்செயலைக் கண்ட முனிவருக்கு அதி ஆச்சரி யம் ஏற்பட்டது. திருமகளின கருணைத் திறத்தை நினைந்து நினைந்து விம்மிதம் அடைந்தார். கமலா சனியின் கருணையின் வலிமைதான் என்னே? உலக மெல்லாம் இறைஞ்சும் இந்தக் கோமானை கோவ ணுண்டியின் கால் மேல் வீழ்ந்து வணங்குமாறு செய்கின்ருள். தேவியின் பெருமையே பெருமை. அவளின் அருளிருந்தால் துரும்பும் அரசு புரியுமே? அம்மம்ம! நினைக்கவும் முடியாத அற்புதம். செய் யத்தகாத செயலைச் செய்த எனக்குச் சிறப்பின் சிக ரம் சேர்கின்றது என்று சிந்தித்தார். தேவியை வந்தித்தார்.

இவ்வாறு முனிவர் சில காலம் அரச மரியாதை களுடன் மிக உயர்ந்த சுகாசனங்களில் அமர்ந்து எல்லோருடைய வணக்கங்களுக்கும் உரியராய் விளங்கினுர்.

ஒருநாள் இரவு இலட்சுமிதேவி அவருடைய கனவில் தோன்றி "முனிவரே நான் நாளை காலை உம்மை விட்டு அகலுவேன். இனி உமக்கு இங்கு ஒரு உபசாரமும் நடவாது'' என்று கூறி மறைந்

தாள். முனிவர் எழுந்தார். திருமகள் விலகிவிட்டாள் என்பதை உணர்ந்தார்.

முனிவர் முதல்நாள் மன்னவன்பால் கொடுத்த மாம்பழத்தை வெட்டிக் காலையில் ஒரு துண்டையுண்டான். உடனே மயங்கி விழுந்தான். அரச வைத்தியர்கள் வந்தார்கள். அம் மாம்பழத்தில் நஞ்சு கலந்திருக்கின்றதென அறிந்தார்கள். நஞ்சு தணியும் நன் மருந்தை நல்கினர். பராந்தகன் குணமடைந்தான்.

அக்கனி அரண்மனை நந்தவனத்தில் பழுத்தது. அது மரத்தில் இருக்கும்போது நல்ல நாகம் அதில் நஞ்சைக் கக்கியிருந்தது. முனிவர் இக்கனி நஞ்சு கலந்ததென்பதை அறியாது மன்னனிடம் முதல் நாள் மாலை தந்தார்.

மன்னவன் "ஓ! இந்த முனிவர் இப்பழத்தில் நஞ்சூட்டி நம்மைக் கொன்று அரசுரிமையைக் கைப்பற்றக் கருதினர் போலும். இவரைக் கொல்வது நல்ல தன்று. முன் இருமுறை நம் மரணத்தைத் தடுத்து உதவி செய்தவர்.

கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன் றுள்ளக் கெடும்.

ஆதலால் இவருடன் இனி பழகக்கூடாது என்று தன் மனதுக்குள் நினைத்து, தன் ஏவலரிடம் முனிவரை யாதொரு இடையூறும் இன்றி காட்டில் விட்டு வருமாறு கட்டளையிட்டான்.

காவலர் முனிவரை அழைத்துப்போய் கானகத்தில் விடுத்து "முனிவரே! எமது மன்னரைக் கொல்லுமாறு நீர் நஞ்சு கலந்த கனியைத் தந்த கார

ணத்தால் உம்மை மன்னர் அகற்றிவிட்டார். இனி நகருக்குள் வராதீர். வந்தால் தலைபோகும்'' என்று கூறிச் சென்றார்கள். முனிவருக்குச் சிரிப்புத்தான் வந்தது. ஆ! திருமகள் செய்யும் திருவிளையாடல் தான் என்னே! அவள் விலகிய அடுத்த கணத்தில் எனக்கு அரச மாளிகையில் இடமில்லை. அன்றியும் அரசனுடைய வெறுப்பும் ஏற்பட்டது.

திருமகள் கடாட்சம் இருந்தால் தீமையும் நன்மையாகும். அவளுடைய கடாட்சம் இல்லையேல் நன்மையும் தீமையாக முடியும். நான் தந்த மாம்பழமே நஞ்சாக மாறி எனக்கு இந்த நிலை யமைந்தது.

நான் சுகத்தை விரும்பாதவன். துக்கத்தை வரவேற்கிறவன். சாமானியமான மனிதர்கள் என்றால் கதி கலங்கி மதிமயங்கி அதிக வேதனை அடைவார்கள். நேற்று அரச போகம். இன்று காட்டில் நிற்கும் யோகம்.

தேவி! நின் திருக்கூத்தை அறிந்தேன். சில காலம் என்பால் தங்கி வேண்டாம் என்ற உயர்ந்த சிறப்பையெல்லாம் எனக்கு வலிதில் தந்து விளையாடினாய்.

அம்மா! நீ ஆண்டியை அரசனாக்குவாய். துரும்பை இரும்பாக்குவாய். இரும்பைத் துரும்பாக்குவாய். குட்டிச்சுவரை அரண்மனையாகச் செய்வாய். அரண்மனையைக் குட்டிச் சுவராக்குவாய். உன்னால் எல்லாம் ஆகும்.

தாயே! உனக்கு வணக்கம் என்று தேவியைத் தொழுதுவிட்டு எப்போதும் போல் மனத்தையடக்கித் தவஞ் செய்யத் தொடங்கினார்.

# எளிய வழி

ஒரு ஊருக்குப் போகும் பிரயாணி சுலபமான வழி எது என்று எண்ணுவான். அன்றியும் கல்லும் முள்ளும் இல்லாத வழி எது என்றும் எண்ணுவான். மற்றும் பாம்பு, தேள், புலி, கரடி இல்லாத வழி எது என்றும் எண்ணுவான். இனி திருடர் பயம் இல்லாத வழியாக இருக்க வேண்டும் என்றும் நினைப்பான்.

ஆகவே வழியானது வளைவு இன்றியும், நேராக வும், தூரம் இல்லாமலும், கரடுமுரடு இன்றியும் அமைதல் வேண்டும். மேலும் வழியின் அருகில் நல்ல நிழல் தரும் மரங்கள் இருக்க வேண்டும். வழிநடப்போர்க்கு நிழலும் காற்றும் இன்றி யமையாதவை.

இப்படியிருப்பின் அது எளிய வழியாகும். எளிய வழியைத் தெரிந்து அதில் பயணம் புரிவது அறி வுடைமையாகும்.

குலவீரசிங்கம் என்பார் ஒருவர் மலாயாவி லிருந்து சென்னை வந்து திருச்சிராப்பள்ளிக்கு வந் தார். அவருக்குப் பழநிக்குச் சென்று ஞான தண்டாயுதபாணியைத் தரிசிக்க வேண்டும் என்ற விருப்பம் உண்டாயிற்று.

> "உனது பழநிமலை யெனும்
> ஊரைச் சேவித் தறியேன்"

என்கின்றார் அருணகிரிநாதர். ஆதலால் சிறந்த திருத்தலம் பழநியம்பதி. அதனைச் சேவிக்க விரும்

பிய அவருக்கு வழி தெரியாது. புதியவர் இதற்கு முன் இந்தியாவுக்கு வந்ததில்லே. பாவம்! பழநி யிருக்குந் திசைகூடத் தெரியாது.

ஒருவரைப் போய் "ஐயா! பழநிக்குச் சுருக்க மான வழி எது?'' என்று வினவினர்.

அவர் கூறினர்.

"ஐயா! பழநிக்குத்தானே போகவேண்டும்? சுருக்கமான வழி கூறுவேன். திருச்சிராப்பள்ளி சந்திப்பில் ரயில் ஏறி நேரே ஈரோடு போங்கள்; ஈரோட்டிலிருந்து கோயம்புத்தூர் சென்று பொள் ளாச்சி வழியே பழநிக்குப் போங்கள்'' என்ருர்.

மற்ருெருவர்,

''ஐயா ! அது சுற்றுவழி. இவர் விளங்காமல் கூறுகின்ருர். இவருடைய வார்த்தையைக் கேட்டு நீர் அலேய வேண்டாம். பழநிக்குப் போவதானல் ஈரோடுக்கு ஏன் போக வேண்டும். சுத்தமடத்தன மாக இந்த மனிதன் கூறுகின்ருன். நேரே தஞ்சை போய், மாயவரம் போய், அறந்தாங்கி வழியே காரைக்குடி போய், மானமதுரை போய், மதுரை சென்று, திண்டுக்கல் வந்து பழநிக்குப் போங்கள்'' என்ருர்.

இது முன்னே கூறிய வழியைவிட அதிக் தூரம் உள்ள வளேந்த வழி.

மற்ருெருவர் வந்தார்,

"இந்த இருவர்களும் சுத்த மடையர்கள். நேர் வழி காட்டத் தெரியவில்லை. இந்த மூடர்கள் பேச்சைக் கேட்டு அன்பரே நீர் அலைய வேண்டாம்.

பழநி இதோ இருக்கின்றதே. இவர் எப்படி எப்படியோ வழி கூறுகின்றாரே. உண்மையை உணராதவர்கள் இப்படித்தான் உளறுவார்கள். இவர்கட்கு மெய் வழி தெரியாது. எனக்குத்தான் மெய் வழி தெரியும். ஆதலால் நான் கூறும் ஒரு மொழியைக் குருமொழியாகக் கொள்ளும். நீர் எளிதில் பழநியைச் சேரலாம். நேரே இங்கிருந்து விருத்தாசலம் வழி விழுப்புரம் போங்கள்; விழுப்புரத்திலிருந்து நேரே பாகாலா போய் தர்மாபுரம் வழி குண்டக்கல் போய், அங்கிருந்து பெங்களூர் போய், பங்கார்பேட்டை, ஜோலார்பேட்டை வந்து, சேலம் வழி ஈரோடு வந்து கோவை போய் பழநி போங்கள். இந்த நேர்வழியைவிட்டு இம்மடச் சாம்பிராணிகள் ஏதேதோ தெரிந்த மாதிரி வழி சொல்லுகின்றார்கள்" என்றார்.

தான் சொல்வது மெய்வழியென்றும் தன்னை மூடர்க்கு வழிகாட்டப் பகவான் அனுப்பினார் என்றும் தானே பரம குருநாதர் என்றும் கருதிக்கொண்ட அவர் ஒரு வாரம் பிரயாணஞ் செய்யக்கூடிய வழியைக் காட்டியருளினார்.

இப்படி பலர் வழியல்லாத வழிகளையும், வளைந்த வழியையும், சிரமமான வழியையும் காட்டினார்கள்.

ஆனால், ஒருவர் மட்டும் அவருக்கு, "ஐயா! திருச்சியிலிருந்து திண்டுக்கல் போய் பழநிக்குப் போங்கள்" என்றார். இதுதானே எளிய வழி.

இதுபோல் இறைவனையடைய வேறு வேறு சமய குருமார்கள் வழியல்லாத வழிகளைக் காட்டினார்கள். கடினமான வழியையும் காட்டினார்கள்.

முத்தி நெறி மிகமிக எளிதாக இருக்க வேண்டும்.

ஒருவன் "ஐயா! முத்தி நலம் பெறுவதாயின் தினம் ஒரு ஆணியை விழுங்குங்கள்" என்றான்.

ஒருவன் "இருட்டறையில் தலைகீழாக மூன்று நாட்கள் நிற்க வேண்டும்" என்றான். ஒருவன் "தண்ணீருக்குள் எட்டு நாள் இருக்க வேண்டும்" என்றான். ஒருவன் "பதினைந்து நாட்கள் பட்டினி கிடக்க வேண்டும்" என்றான்.

ஒருவன் "நெருப்பை விழுங்க வேண்டும்" என்றான். இவைகளைக் கேட்டவன், "எனக்கு முத்தி நலமே வேண்டாம்" என்றான்.

முடிவாக அருணகிரிநாதர் கூறுகின்றார். "அன்பனே! முத்தி நலம் உனக்கு எளிதாகக் கிடைக்க நான் வழி கூறுகின்றேன் கேள். பட்டினி கிடக்க வேண்டாம்; கானகம் புகுத வேண்டாம்; காற்றைக் குடிக்க வேண்டாம்; மூச்சைப் பிடித்து விழி பிதுங்கச் சிரமப்பட வேண்டாம்; பச்சிலையுண்டு உடம்பை வாட்ட வேண்டாம்.

"காட்டிலே வாழ்ந்த வள்ளியெம்பிராட்டிக்கு அருள் புரிந்த முருகன் திருவடியில் மனதை ஒருமுக மாகச் செலுத்து. அங்ஙனம் செலுத்துவாயானல் வீட்டின்பம் எளிதாகச் சித்திக்கும். இதனையறி யாது மூச்சைப் பிடித்துக்கொண்டு திக்குமுக்காடித் திரியாதே" என்று அருளிச் செய்தார். இதோ பாருங்கள் அந்தத் தீந்தமிழ்ப் பாடல் :

காட்டிற் குறத்திப் பிரான்ப தத்தே கருத்தைப் புகட்டில்
வீட்டிற் புகுதல் மிகஎளிதே விழி நாசிவைத்து
மூட்டிக் கபால மூலாதார நேரண்ட மூச்சை யுள்ளே
ஓட்டிப் பிடித்தெங்கும் ஓடாமல் சாதிக்கும் யோகிகளே.

# பெண்மை

கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை.

கற்பு என்பது ஆடவருக்கும், மகளிருக்கும் பொதுவாம். ஆடவரது கற்பை நல்லொழுக்க மென்று கூறுவர். சிறப்பாக மகளி ரொழுக்கத்தையே கற்பென்று பண்டைக்காலந் தொட்டு ஆன்ருேர் வழங்கிவருகின்றனர். ஈண்டு மாதர்களது ஒழுக்கத்தைப்பற்றி சிறிது ஆராய்வோம்.

கற்பிக்கப்படுவது கற்பு எனப்படும். அது, தாய் தந்தையரால், உபாத்தியாயரால், மாமி மாமன்களால் கணவனுல் கற்றுக்கொடுப்பதாம். அவ்வொழுக்கத்தினின்றும் வழுவாமலிருப்பதே பெண்களது கடமை. இல்வாழ்க்கைக்குத் துணையாக இருந்து அறமார்க்கத்திற்கு உதவி செய்வது பெண்களேயாம். ஆடவருக்கு மகிழ்ச்சி, புகழ், செல்வம், பெருமை, முத்தி முதலிய சகல சௌபாக்கியங்களும் உண்டாவது பெண்களாலேயே.

ஓராடவனுக்கு, கற்புடைய மனைவி அருகிலிருப்பாளே யாமாயின், அவனுல் முடியாத காரியம் மூவுலகத்திலுமில்லை. ஒரு காலத்தில் விந்த பருவதமானது செருக்குற்று நிமிர்ந்தபோது அதன் செருக்கை யடக்கவுன்னி, தேவர்கள் யாரும் செந்தமிழ்க்குரவராகிய அகத்திய முனிவர் பாலணுகித் தங்கள் குறையை விண்ணப்பம் புரியுங்கால், 'கற்

பின் சிறந்த உலோபா முத்திரை யென்னும் வனிதை யர் திலகம் தங்கள் பாலிருப்பதனுல் மாதவராகிய தாங்கள் மனத்தில் நினைத்தால் முடித்தற்கரிய கருமம் எதுதானுளது? என்று மொழிந்தனர்.

செயிரில் கற்பின் றிகழ்மணிக் குன்றனை
மயிலன்னுணின் மனைக்குரியாளெனி
லுயருந்தவ வுன்றனுளத்திடை
முயலிலேது முடித்தற்கரியதே

ஒருவனது இல்வாழ்க்கையானது உயர்ந்த வீடு, நிறைந்த செல்வம், கணக்கற்ற பணியாட்கள் முதலிய சிறப்புகள் பல விருக்கினும் மாட்சிமை யடையாது. நற்குண நற்செய்கை பூண்ட பத்தினி இருந்தால்தான் மாட்சிமை யடையும்.

மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினு மில்

—உத்தரவேதம்.

ஒருவன் எத்துணை பாக்கிய வீனனு யிருக்கினும், மாண்புடைய மனைவி மட்டும் அவனுக்கு இருப்பாளேயாமாயின் அவனைக் காட்டிலும் பாக்கியவான் உலகிற் கிடையாது. ஒருவன் எல்லா பாக்கியங்களும் உடையவனுயிருந்து நற்குண நங்கையை மட்டும் அடையானே யாமாயின் அவனே தௌர்ப் பாக்கியன்.

இல்லதெ னில்லவள் மாண்பானு லுள்ளதெ
னில்லவள் மாணுக் கடை

—உத்தரவேதம்

உயிருக்கும் உடலுக்கும் பரஸ்பரம் நட்பு இருந்து வருகிறது. உயிரைவிட்டு உடலிராது,

உடலைவிட்டு உயிரிராது. உயிரை உடல் விரும்புகிறது. உடலை உயிர் விரும்புகிறது. உயிரால் உடல் பயனடைகிறது. உடலால் உயிர் பயனடைகிறது. எனவே, நாயகன் உயிர், நாயகி உடல். நாயக நாயகி என்கின்ற இருவருக்கும் பரஸ்பரம் அன்பும் ஆதரவும் இருத்தல் வேண்டும். உண்மைக் காதலன் காதலியை விட்டுப் பிரிந்திரான். உண்மைக் காதலி காதலியை விட்டுப் பிரிந்திராள். நாயகன் நாயகியை விரும்பவேண்டும். நாயகி நாயகனை விரும்ப வேண்டும். நாயகனுல் நாயகி பயன்பெறுகிருள், நாயகியால் நாயகன் பயன்பெறுகிருன். ஆதலால் பெண்கள் நாயகனுடன் உயிருடன் உடம்பு போல் ஒருமித்து வாழவேண்டும்.

இல்வாழ்க்கையில் சகல பொறுப்பும் மகளிரிடத்தே அமைந்திருக்கிறது. இல்லறமென்கிற மாளிகையானது மாதர் என்கிற கடைகாலின் மீது நிற்கிறது. கடைகால் கெட்டுவிட்டால் மாளிகை நிற்காதல்லவா? மாதர்கள் தமது கடமையினின்றுந் தவறுவார்களே யாமாயின் இல்வாழ்க்கையின் மாட்சிமையே கிடையாது.

பெண்கள் நாயகன் துயிலினின்றும் எழுவதற்கு முன் எழுந்து, கைகால் முகங்களைத் தூய்மை செய்து தனது நாயகனைக் கடவுளாக நினைத்து பக்தியுடன் பதியின் பாதங்களில் வீழ்ந்து நமஸ்கரிக்க வேண்டும். நாயகன் உணவுக்கு வந்தபோது, அன்புடன் அருகிலிருந்து உபசரித்து, அன்னை மகனுக்கு அன்னம் ஊட்டுவதுபோல், பரிவுடன் உணவளித்து நாயகன் உண்டபின் தாம் உண்ணுதல் வேண்டும்.

இரவு காலத்தில் தனது கரத்தால் படுக்கைவிரித்து நாயகனை அப்படுக்கையில் துயிலுமாறு செய்து, அவன் துயின்ற பின் தாம் துயில வேண்டும்.

கொழுந னுண்டபின் தானுகர் கொள்கையும்
விழிதுயின்றபின் துஞ்சலு மென்றுயி
லெழுதன் முன்ன மெழுதலு மேயன்றே
பழுதிற் கற்புடைப் பாவையர் செய்கையே

—காசி காண்டம்

பக்தியிற் சிறந்த ஒரு பாவலன், தான் படித்த படிப்பின் திறமையனைத்தினையும் தான் வழிபடும் பரமனுக்குப் பரத்துவஞ் சூட்டுவதிலேயே உபயோகப்படுத்துவதுபோல், நாயகியானவள், தனது அழகினை முழுதும், நாயகனுக்கே உபயோகப்படுத்த வேண்டும். ஈஸ்வரனை யடைவதற்கென்றே எப்படி கல்வி கற்கப்படுகிறதோ? அப்படியே பெண்கள் தங்கள் உயிருக்குயிராகிய நாயகன் கண்டுகளிக்கவே நல்ல ஆடை, அழகிய ஆபரணம், மலர் இவைகளால் தங்களை யலங்கரித்துக்கொள்ள வேண்டும். நாயகன் பிரிந்திடில் நல்லுடைதவிர்ந்து, ஆபரண அலங்காரமின்றி நாயகன் வருமளவும் அவனையே சிந்தித்திருத்தல் வேண்டும்.

"நாளல்லா நாள்பூத்த நன்மலரும் போலுமே
ஆளில்லா மங்கைக் கழகு"

—மூதுரை

பெண்களுக்கு உயிரினுஞ் சிறந்ததாக ஓம்பப்படும் சிறந்த விரதம் பதிவிரதமாம். பதிவிரதமென்ருல் கணவனைக் கடவுளாக நினைந்து பக்தி செய்வதென்று பொருள்படும். இந்த விரதத்தை

எந்த பெண் அனுஷ்ட்டிக்கிருளோ, அந்த பெண் மணியைக் காண சப்த நதிகளும், தெய்வங்களும் வரும். அந்த மாது சிரோன்மணியின் திருவடி எவ் விடத்திற்படுகிறதோ, அந்த இடந்தான் க்ஷேத்திரங் கள் எல்லாவற்றினுஞ் சிறந்த புண்ணிய க்ஷேத்திரம்.

நண்ணு கற்புடை நங்கையர் சீறடி
மண்ணி னெவ்விடந் தோயினு மற்றஃ
தெண்ணு கின்ற தலங்க ளெவற்றினும்
புண்ணியத்தல மென்று புகல் வரால்

—காசி காண்டம்

நாயகன் ஒரு சமயத்தில், அனுவசியமாகச் சினந்து வைதாலும் கற்புடைய மாதர் நாயகன் மீது கோபியாமலும், எதிர் நின்று தகுதியற்ற வார்த்தைகளைப் பேசாமலும் பொறுமையுடனிருக்க வேண்டும். நாயகன் கோபந்தணிந்து சாந்தமாக இருக்கும்போது, குற்றமில்லாமலே கோபித்ததைக் குறித்து இனிமையாகக் கூறி அவன் மனதைக் கரைத்துவிட வேண்டும்.

ஒருவேளை முரட்டுக் கணவனுக இருந்து தங் களை அடித்தாலும் தம் விதியை நொந்து "பெண்டிர்க் கழகதிர் பேசாதிருத்தல்" என்ற ஆன்ருேர் வாக் கைச் சிந்தித்து, நாயகனுக்கு நல்லறிவு தோன்ற வேண்டுமென்று, ஆண்டவனைப் பிரார்த்திக்க வேண்டும். தனித்த சமயத்தில் நாயகனிடத்தில், என்னை மிகவும் ஓங்கியடித்தீரே! அந்தக் கைவலிக் குமே? என்று உபசார வார்த்தைகளை நயம்பட வுரைத்தால் எவ்வளவு முரடனுக விருந்தாலும்

திருந்திவிடுவான். நாயகி கூறுகிற தேனினுமினிய செழுஞ் சொற்களைக் கேட்டவுடன், எத்தகைய கடின சித்தமுடையவனும் மனங்கசிந்துருகி ஆகா! இத்தகைய உத்தமியை வீணே வைதோமே? விருதாவிலே அடித்தோமே? என்று தனது முரட்டுத்தனத்தைக் குறித்து வருந்தி, உடனே சாந்த புருடனாக மாறிவிடுவான். பெண்கள், தங்கள் கற்பாலும், பணிவாலும், உபசாரத்தாலும், இன்சொல்லாலும் வன்கண்மையுடைய நாயகனையும் நன்மன முடையவனாக மாற்றிவிடலாம். நாயகன் ஒரு சமயம் சினந்து பேசாதிருப்பானேயானால் பெண்கள் கணவனிடமேகி மனமுருகுமாறு பேச வேண்டும்; அப்போது உடனே நாயகனது கோபமாறிவிடும்.

கற்புடைய மாதர்களுக்குக் கணவனைக் காட்டிலுஞ் சிறந்த கடவுள் கிடையாது. கணவனைக் காட்டிலுஞ் சிறந்த நேயருங் கிடையாது. கணவனுடைய வார்த்தையைக் காட்டிலுஞ் சிறந்த வேதங் கிடையாது. கணவனுடைய திருவடிப் பூசையைக் காட்டிலுஞ் சிறந்த தேவ பூசை கிடையாது. கணவனுடைய அருகிலிருப்பதைக் காட்டிலுஞ் சிறந்த சுகம் சுவர்க்கலோகத்திலுங் கிடையாது. கணவனைக் காட்டிலுஞ் சிறந்த பந்துவுங் கிடையாது.

கண்ணிற் சிறந்த வுறுப்பில்லை கல்வியி
னுண்ணிய வாய பொருளில்லை — கொண்டானின்
துன்னிய கேளிர் பிறரில்லை யின்ருளின்
என்ன கடவுளுமில்.

“கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி” என்றபடி நாயகனது குறிப்பறிந்து ஆவன செய்து

அல்லன விலக்கி மகிணன் மன மகிழுமாறு நடக்க வேண்டும். நாயகனது நாமத்தை கூறினல் அவனது ஆயுள் சிதையுமானபடியால் கற்புடைய மாதர் தம்வாயாற் கணவனுடைய பெயரை யுரைக்கப் படாது. நாயகன் நிற்கும்போது தாம் எதிரில் அமர்ந் திருத்தல் கூடாது. நாயகனுடைய உச்சிட்டத்தை தேவாமிர்தமாக நினைந்து அருந்துதல் வேண்டும்.

திருந்து மாயுள் சிதையுமென் றெண்ணித்தம்
பொருந்து காதலர் நாமம் புகன்றிடார்
இருந்த போதன்றித் தாமுனிருந் திடார்
அருந்து மிச்சி லமிழ்தி னுகர்வரால்.

—காசி காண்டம்

குடும்பம் விருத்தி யடைவதற்கும், தேய்ந் தழிவதற்கும் பெண்களே காரணமானபடியால், வருவாய்க்குத் தக்கபடி செலவு செய்தல் வேண்டும்; இல்வாழ்க்கைக்கு வேண்டியவற்றை ஈட்டுதல் வேண்டும். வருவாயைக் கவனியாமல் ஊதாரியாய் செலவழித்து நாயகனுக்கு மன வருத்தத்தை யுண்டு பண்ணுமல் சிக்கனமாக வாழப் பழகவேண்டும். கண்ண பிரானை குசேலர் சந்தித்தபோது, கண்ண பிரான் குசேலரை நோக்கி, "நேயரே! நின் மனைக் கிழத்தி வருவாய்க்குத் தக்க செலவு செய்பவளா?" என்று கேட்டனர்.

நின்னுடைய மனைக்கிழத்தி நிரம்பு பெரு நீர்மையளே
மன்னுடைய சொற்காத்துச் சோர்விலா மாண்பினளே
தன்னுடைய வுயிராநின் றனைப் பேணுந் தன்மையளே
உன்னுடைய வருவாய்க்குத் தக்கசெல வுளுற்றுவளே.

—குசேலோபாக்கியானம்.

வற்றுத சமுத்திரம்போற் குவிந்திருக்குஞ் செல்வமுடைய வீட்டில் பிறந்து வறியவனுக்கு வாழ்க்கைப் பட்டாலும், பெண்கள் தமது தாய் வீட்டினது செல்வப் பெருக்கை நினைத்து மனந்தருக்கி, உன்னை மணந்து என்ன பலனைப் பெற்றேனென்று நாயகனை உதாசீனமாகப் பேசப்படாது. கொழுநன் நித்திய தரித்திரனுயிருந்தாலும் குபேரனுக நினைத்து அடக்கத்துடனும் மனமகிழ்ச்சியுடனும் நடக்கவேண்டும். நாயகன் கடன் பட்டு நெஞ்சங் கலங்கி நின்ற காலத்து, தங்களுடைய சொத்தாகிய என்னை விற்று கடனைத்தீர்த்து சுகமடை வீரென்று கூறிய கற்பரசி வாழ்ந்த நாடல்லவா நம் நாடு. பல்லோரும் மதிக்கப் பணியாளர் பணிகேட்க, வாசலில் முரசு வாத்தியங்கள் முழங்க, செல்வத்திற் சிறந்து, ஏழடுக்கு மாடிமேல் அறுசுவை யுணவுண்டு வாழும் பெருவாழ்வு வந்தாலும் நாயகனுடன் மன மொருமித்து வாழவேண்டும்; அச்செல்வமெல்லாம் ஒழிந்து மரத்தடியிலே குச்சுவீட்டிலே புல்லரிசிக் கஞ்சியுண்டு வருந்தத்தக்க தரித்திரத்தில் தாழ்ந்தாலும் மணாளனேடு மனமொருமித்து மகிழ்ச்சியுடன் வாழவேண்டும். உலக முழுவதும் தன் ஆக்ஞாசக்கரத்தைச் செலுத்தி வெண்கொற்றக் குடையின்கீழ் அரியணை மேலிருந்து செங்கோல் பற்றி அரசு புரிந்த மன்னர்கள் மன்னனுகிய நளச்சக்கரவர்த்தி, சகல சுகத்தையுமிழந்து வெப்பமான கானக மணுகியபோது அவனுடைய தரும பத்தினியாகிய தமயந்தியானவள் தன் தாய் வீடு சென்றுளா? இல்லை. நாயகனேடு இருந்து அவனுக்கு வந்த சுகதுக்கத்தை தானு மனுபவித்

தாளல்லவா? உற்று நோக்குங்கள். குறைந்த வரு வாயுடைய நாயகனைப் பார்த்து, விலையுயர்ந்த ஆடை வேண்டும், ஆபரணம் வேண்டும், அயலா ரைப்போல டம்பமாக இருக்கவேண்டும் என்று அவன் மனம் கலங்கும்படி தொந்தரை செய்து, கடன்படச் செய்தல் கூடாது. அயல்வீட்டுப் பெண்க ளணிந்துள்ள ஆடையாபரணங்களைக் கண்டு பொறுமை யடைதலும், இம்மாதிரி நமக்கில் லையே யென்ற ஏக்கமுங் கூடாது.

குழந்தையினிடத்தில் தாயாருக்கு எப்படி அளவு கடந்த கருணையுண்டோ அதுபோல கண வனிடத்தில் பத்தினிக்குக் கரைகடந்த கருணை யிருக்கவேண்டும். அநேக வகையான நல்லுரை கூறி குழந்தைக்கு எவ்வாறு தாய் அன்னமூட்டு வாளோ அதுபோல பத்தினியானவள் தன் கணவ னுக்கு அருகிலிருந்து இதமான வார்த்தைகளை யுரைத்து இனிய உண்டிகளை யுதவி உணவருந்தச் செய்ய வேண்டும். வேலைக்காரியானவள் எப்படி எசமானனிடத்தில் பயந்து அடக்கத்துடன் கண் ணுங் கருத்துமாக இட்ட வேலையைச் செய்து இன் னுரை கூறி யுபசரிப்பாளோ அதுபோல நாயகியா னவள் நாயகன் குளிக்கிறபோதும், பூசைபுரியும் போதும், ஏனைய சமயங்களிலும் ஏவாமுன்னமே வேண்டிய பணிவிடைகளையாற்றி எந்தவகையாலுங் கணவனுக்கு அசமாதான முண்டாகாத வகையில் ஒழுக வேண்டும். செந்தாமரையில் வீற்றிருக்குந் திருமகளைப் போல் நாயகன் கண்டுகளிக்குமாறு நன் ருக அலங்காரஞ் செய்துகொள்ளவேண்டும். பூமா

தேவியானவள் தன்னை மிகவுந் துன்புறுத்தித் தோண்டியுங்கூட வெட்டுபவர்களுக்கு குளிர்ந்த நீரைத் தந்து உபசரித்து பொறுமையுடனிருப்பது போல், நாயகனுல் சில சமயத்தில் துன்பம் நேர்ந்தாலும் தான் நன்மையையே செய்து பொறுமையுடனிருத்தல் வேண்டும். தன்னிடமெய்தும் புருடர்களுக்கு நாணமின்றி விலைமகளெவ்வாறு இன்பத்தை யளிப்பாளோ அதுபோல சயனகாலத்தில் நாயகனுக்கு இன்பமளிக்கவேண்டும். இராஜ்ய பாரத்தை வகித்து மதிமயங்கும் மன்னனுக்கு அருகிலிருந்து மந்திரி எவ்வாறு ஆபத்து வந்த காலத்தில் நல்லறிவு புகட்டுவானே அதுபோல குடும்ப விஷயத்தாலும் வியாபாரத் துறையாலும் வேறு பல காரணத்தாலும் ஒரு வேளை கணவனுடைய கருத்து வேறுபட்டால் அப்போது பத்தினியானவள் தரும விரோத மில்லாத யுக்திகளை யுரைத்துக் காப்பாற்ற வேண்டும். இந்த ஆறு குணங்களை யுடைய வளையே பெண்ணென்று கற்றவர்கள் கருதுகிறார்கள்.

அன்னை தலையயு மடியாள் பணியமலர்ப்
பொன்னி னழகும புவிப் பொறையும்—வன்னமுலை
வேசி துயிலும் விறன்மந் திரிமதியும்
பேசி,லிவையுடையாள் பெண்.

பெண்கள் நகைகளை இரவல் வாங்கும் வழக்கத்தை அறவே யொழித்தல் வேண்டும். நாயகனுடைய அன்பே சிறந்த ஆடையென்றும், நாணமே சிறந்த ஆபரணமாகவும்கொண்டு எந்தவகையாலும் கணவன் மனம் வருந்தாதிருக்கும்படி வாழுதல்

வேண்டும். கொழுநனுடைய ஆயுள் வளருமாறு மஞ்சளுங் குங்குமமுந் தரித்தல் வேண்டும்.

இல்லறத்திற் கியைவன வீட்டுவார்
அல்ல செய்தே வறிதினழித்திடார்
புல்லுகாதல ராயுட் பொலிவுற
மல்ல லோங்கணி மஞ்ச ளணிவரால்.

—காசிகாண்டம்

நாயகன் உத்தரவில்லாமல் வெளியே போகப் படாது. திருவிழா நோக்கலும், விரதமனுஷ்டித்தலும், புண்ணியதீர்த்தமாடுதலும், தேவதாபூசை புரிதலும் கணவனுடைய அனுமதி பெற்றே புரிதல் வேண்டும்.

விழவு கண்ணுறன் மேதுகு நோன்புறல்
பழுதிற்றூநதி யாடுதல் பண்ணவாத்
தொழுது வாழ்த்துதரேமறு கற்பிேனார்
கொழுந ரேவலி னன்றிக் குறிக்கொளார்.

—காசி காண்டம்

கற்பின் வழியொழுகி புகழை விரும்பிய நற்குணமுடைய பத்தினி ஒருவனுக்கு இல்லையாயின், தன்னையிகழ்ந்து உரைக்கும் பகைவர் முன் சிங்கவேறுபோல நடக்கும் பெருமிதநடை அவனுக்கு இல்லை.

புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்
னேறு போற் பீடுநடை.

—பொய்யாமொழி

ஆதலால் நாயகன் பெருமையுடன் உலாவுவதற்கு நாயகியே காரணமாம். கணவனுக்கு பல பல

நீதி நெறிகளும், சதாகாலம் பயிலும்படியான தரும நூல்களாலுண்டாகிற நல்ல பலன்களும், சிறந்த அழகும், தினந்தோறும் பெருமையுடைய வெற்றியும் உலகத்தோரால் மதிக்கப்படும் புகழும், என்றுமக லாத இன்பமும் கற்புடைய பெண்களாலேயே உண் டாகும்.

பற்பல நெறிகளும் பயிலு நூல்களா
னற்பய னடைதலுந் தேசு நாடொறும்
பொற்புடை வெற்றியும் புகழு மின்பமும்
கற்புடை மனைவியாற் கணவற் கெய்துமே.

—மகாபாரதம்

பெண்கள் எப்போதும் தனித்திருத்தல் கூடாது. முதலில் தாய் தந்தையர் காவலிலும், பின்னர் கணவன் காவலிலும், கணவனுக்குப் பின் மைந்த னுடைய காவலிலும் இருந்து தம்முடைய கற்பைக் காப்பாற்ற வேண்டும்.

பார்க்கிறவர்கள் இந்த உத்தமியைப் பத்தினி யாகப் பெறுவதற்கு இவன் பண்டைக்காலத்தில் என்ன தவஞ் செய்தானோ? என்று இறும்பூதெய்து மாறு பெண்கள் நடக்கவேண்டும். அவ்வாறொழு குஞ் சற்குணவதியை உலகமுழுதுங் கண்டு புகழும்.

# பெண்கள்

உலகத்திலே பெண்கள் கற்பு தவருது உத்தம குணங்களுக்கு உறைவிடமாகி தங்கள் கடமையி னின்றுந் தவருது சிறந்து விளங்கிஞல்தான் நமது நாடு முன்னேற்றமடையும். கற்பு தவருத பெண்க ளால் உலகிற்கு அநேக நன்மைகள் விளைந்திருக் கின்றன. கோசலா தேவியும் தேவகிபிராட்டியும் இல்லையாஞல் தருமத்தை நடத்திக் காட்டவந்த இராமச்சந்திரரையும் கண்ணபிரானையும் நாம் அடைந்திருக்க முடியுமா? இன்னும் தாயுமாஞர், இராமலிங்க சுவாமிகள், இராமகிருஷ்ண பரமஹம் சர், விவேகானந்தர் முதலிய ஆன்ருேர்களைத் தவங் கிடந்து பெற்று வளர்த்து நமக்களித்தவர் அவர் களது அன்னைகளல்லவா? கற்புடைய மாதர்கள் இல்லையாஞல் உயர்ந்த அவதார புருடர்களை நாம் அடைய முடியாதல்லவா? இனி வருங்காலத்துப் பெரியோர்களை யளிப்பதும் பெண்மணிகளே யல் லவா?

"ஓரும் வேதாந்தத் துச்சியற்பழுத்த ஆராவின்ப அருங்கனி பிழிந்து சாரங்கொண்ட சைவசித்தாந்த" செந்நெறிப் பரமாசிரியர்களாகிய திருஞானசம்பந்த மூர்த்திசுவாமிகளையும், திருநாவுக்கரசுசுவாமிகளை யும், சுந்தரமூர்த்திசுவாமிகளையும், அருணகிரிநாத சுவாமிகளையும் நமக்குத் தவஞ்செய்துப் பெற்றுக்

கொடுத்த பகவதியம்மையாருக்கும், மாதினியாருக்கும், இசைஞானியாருக்கும் முத்தம்மையாருக்கும் நாம் என்னே கைம்மாறு செய்ய வல்லேம். உலகம் உள்ள நாள் வரைக்கும் அவர்களை நெஞ்சார நினைத்து வாயார வாழ்த்த வேண்டுமல்லவா? இத்தகைய உயர்ந்த புத்திரர்களைப் பெற்று அழியாப் புகழடைந்ததற்கு காரணம் அவர்களது கற்பொழுக்கமேயாகும். நிலமானது செழுமையுற்றிருந்தால் தான் அதில் விளையும் பயிர் செழுமையுற்றிருக்கும். நிலத்தில் சத்தில்லையானுல் பயிரும் பயனற்றதாக முடியும். அதுபோல உத்தமமான குழந்தைகள் தோன்றவேண்டுமானுல் பெண்கள் உத்தம குணங்களுடையவராக இருத்தல் வேண்டும்.

பெண்கள் இளம்பருவத்தில் தாய்தந்தைகளிடத்தில் இல்வாழ்க்கையின் ஒழுக்கங்களை யுணர்தல் வேண்டும். விளையாடல்களில் அதிகமாக நேரங்களை வீணுக்காமல் கற்பிலக்கணங்களைக் கற்றுக் கொள்ள வேண்டும். தேவாரம், திருவாசகம், திருப்புகழ் முதலிய அருட்பாடல்களை ஓதியுணர்தல் வேண்டும். பெண்களுக்கு முக்கியமான தருமம் பொறுமையானபடியால் அதை இளமையிலிருந்தே கையாண்டு வரவேண்டும். தாய் தந்தைகளோ? பெரியோர்களோ? தம்முடைய குற்றங்கண்டு கடிந்துரைத்தால் அக்குற்றத்தினின்றும் விடுபட்டுப் பொறுமையுடன் இருக்க வேண்டும். இனிமையாகச் சமையல் செய்யும் வகையை இளம் பருவத்திலேயே பெண்கள் நன்ருகப் பயில வேண்டும். ஒரு மனிதன் தான் நோயின்றி வாழவேண்டுமென்ருல் உடலுக்

குத் தக்கவாறு ஆகாரத்தை வகைப்படுத்தியுண் பதே அவசியமாகும். அவ்வாறு நாயகனுக்கு வகைப் படுத்திக் கொடுப்பவள் நாயகியேயானபடியால் சமையல் செய்யும் விதத்தை நன்ருகத் தெரிந்து கொள்ள வேண்டும். பெண்கள் இளம்பருவத்தில் அடிக்கடி அயல்வீட்டிற்குப் போகும் கொடிய வழக் கத்தை அடியோடு தொலைத்தல்வேண்டும். "தொட் டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்" என்றபடி இளமை யில் எதைப் பழகுகின்ருர்களோ அதுதான் இறுதி வரை தொடர்ந்து வரும். ஆதலால் இளமையி லிருந்தே இனிமையாகப் பேசவும், அமைதியுடன் உலாவவும், உடலையும் உடையையும் தூய்மையாக வைத்துக் கொள்ளவும் பழகவேண்டும்.

பெண்மணிகள் விவாகத்திற்குப்பின், மாமியாரி டத்தில் இல்லறத்தின் இயல்புகளைப் பழகுதல் வேண் டும். ஏன் இளமையில் நூல்வாயிலாகப் படித்ததும், தாய் தந்தையர் சொல்லிக்கொடுத்ததும் போதாதோ வென்னின்? அவைகள் மட்டும் போதாது. வழக்கறி ஞர் (வக்கீல்) தொழிலுக்கு சட்டநூல் படிக்கிற ஒரு மாணவன் உபாத்தியாயரிடத்தில் சட்டநூல் படித்த வுடனே நீதிமன்றத்தில் நியாய வழக்கு பேச முடி யுமா? ஒருபோதும் முடியாது. சட்டநூல்களைப் படித்தபின் வழக்கறிஞர் தொழிலில் அனுபவப்பட்ட ஒரு வழக்கறிஞரிடம் அப்பியாசப்பட்டபின்னர் எவ் வாறு அவ்வேலையைத் திறமையாகச் செய்வானே, அதுபோலப் பெண்கள் இளமையில் இல்லற தருமங் களைப் படித்ததோடும், பிதாமாதாக்களிடத்தில் கற்

றுக் கொண்டதோடுமட்டும் அமையாது மாமியிடத்தில் அடக்கத்துடன் இருந்து பழக வேண்டும்.

பெண்களுக்குத் தெய்வம் கொண்டநாயகன். அந்நாயகனுக்கு முன்னறிதெய்வம் மாதாவேயான படியால் தன் பர்த்தாவைப் பெற்ற மாமியைத் தெய்வம்போல் பாவித்து, மாமியின் ஆணைக்குக் கீழ்ப்பட்டு, அன்புடன் நடக்க வேண்டும். தன் கணவனை பத்துமாதஞ் சுமந்து பெற்று, எத்தனையோ சிரமப்பட்டு வளர்த்துக் காப்பாற்றி, முன்னேற்றமடையச் செய்து, தக்க பருவத்தில் நம்மிடத்தில் இன்புறக் கணவனைக் கொடுத்தது மாமியாரல்லவா, என்று பெண்கள் மாமியைத் தாய்போல் எண்ணி ஆதரவு காட்டிப் பணிவுடன் இருக்கவேண்டும்.

மாமியைப் பகைத்து, நாயகன் நாம் சொன்னபடி கேட்கிறானென்று மாமிமேல் நாயகனிடம் பழிகூறி மாமியின் மனம் நோகச் செய்யப்படாது. குடும்பத்தில் நெடுநாளாக இருந்து அனுபவமுற்ற மாமியார், மருமகளைச் சீர்திருத்துமாறு குற்றங்களை எடுத்துக் கூறி சினந்து கடிந்தாலும் நாம் சீர்படுமாறல்லவா சொல்கிறார்களென்று மாமி சொல்லைக் குருமொழியாகக் கொண்டு குற்றங்களினின்றும் விலகி குணவதியாக ஆக வேண்டும். மாமியார் அடிக்கடி புத்தி கற்பிக்கிற வேளைகளில் "இந்தக் கிழப்பிணம் வாயை மூடிக்கொண்டு வீழ்ந்து கிடக்காமல் 'வாள் வாளெ'ன்று கத்திக்கொண்டு தொந்தரவு செய்கிறதே" என்று மாமியை வெறுக்காமல் அன்பு செய்யவேண்டும். இந்தக் கிழவியைப் போய் நாம்

கேட்பதா என்றிராமல் எந்த வேலையைத் தொடங்கிஞலும் மாமியைக்கேட்டு அவள் சொற்படி நடக்க வேண்டும். மாமியாரிடத்திலும், மஞ்ஞளரிடத்திலும் பேசுகிறபொழுது சுருங்கிய முகத்துடனில்லாமல், எவ்வளவு துக்கமிருந்தாலுஞ் சகித்துக் கொண்டு, மலர்ந்த முகத்துடன் இருக்க வேண்டும். மாமியுடன் சண்டை பிடித்து நாயகனிடத்தில் கோள் சொல்லி மாமியைத் தத்திரமாக வீட்டைவிட்டகற்ற வழி தேடப்படாது. எல்லா பாக்கியமும் மாமியாரால் வந்த பாக்கியமென்று எண்ணி மாமியிடத்தில் வாஞ்சையுடன் ஒழுக வேண்டும்.

தன் தாய்வீட்டுப் பெருமையை நினைத்து மனந் தருக்குற்று, என் தாய் வீட்டில் குபேர சம்பத்தாக இருந்தேன்; அங்கே ஒருநாள் சிலவு இங்கே ஒரு மாதத்திற்கு காணும், என் தமையன் முகந்துடைக்கிற துணி மட்டும் ஒருநாளைக்கு ஒன்பது துணி ஏகாலியினிடம் விழும், நெய்யாறு பாலாருக ஓடும், அங்கே கீழே சிந்திய தானியத்தைப் பொறுக்கிக் கொண்டு வந்தாலே இங்கே ஒரு வருடத்திற்கு உணவாகும் என்கிற வீண்டம்பமான வார்த்தைகளை மாமியிடத்திலும் பிறரிடத்திலும், எப்போதும் சொல்லப்படாது. மாமியார் ஒரு சமயத்தில் கொடியவளாக இருந்தாலுங்கூட தான் மட்டும் அன்புடன் பணிவிடை செய்து, உணவுக்கு வந்த சமயத்திலே மாமியாருக்கு உணவு கொடுத்து அருகிலிருந்து உபசாரஞ் செய்ய வேண்டும். மாமிக்கு நோய்வந்த சமயத்தில் "என்னைப் படாதபாடு படுத்தினதிஞல்தான் இப்போது அனுபவிக்கிருள்" என்று சும்மாயிராமல்

மருந்து முதலியன தந்து மகளைப்போல் உதவி செய்ய வேண்டும். மாமியார் காலிலேபட்டது தன் கண்ணிலே பட்டதாக நினைத்து, எந்தவகையிலும் மாமியிடத்தில் வெறுப்புருமல், இதவசனங்களைக் கூறி இனிமையாக நடக்கவேண்டும். அவ்வாறு நடப்பார்களேயானுல் எத்துணைக் கொடிய மாமியுந் தன் கொடுமையையுணர்ந்து, துர்க்குணத்தை அறவே ஒழித்து, நல்வழிப்பட்டு, மருமகளிடத்து அன்புபாராட்ட ஆரம்பித்துவிடுவாள். "ஆகா இந்த உத்தமியை மருமகளாகப் பெறுவதற்கு நான் என்ன புண்ணியஞ் செய்தேனே?" என்று மாமியார் மனங் களிக்குமாறு நடக்கவேண்டும். "மாமியார் மெச்சிய மருமகளில்லை" என்ற வசனத்தைப் பொய்யாக்கி, கண்டோர் கண் களிக்குமாறு ஒழுகவேண்டும். தான் நடக்கும் இனிய ஒழுக்கத்தைக் கண்டு மற்றைய குடும்பங்களில் "மருமகளென்ருல் அவளல்லவோ மருமகள்" என்று புகழுமாறு தலைசிறந்து விளங்க வேண்டும்.

பெண்மணிகளுக்கு மாமியார் எங்ஙனம் முக்கியமோ? அங்ஙனமே மாமனுரும் முக்கியமே. மாமனுரையும் முக்கியமாகப் போற்றக் கடமையுண்டு. தனது கணவனை ஈன்று வளர்த்து கலையுணர்வு பெறச்செய்து விவகாரங்களை யுணர்த்தி நல்வழிப் படுத்தியவர் மாமனுரே யல்லவா? அவைகளைப் பெண்கள் நன்குணர்ந்து மாமனுரிடம் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளார்கள். குலவிருத்திக்காக மருமகளாகக் கொண்டவரை ஒருபோதும் துன்பஞ் செய்யப்படாது. நமது நாயகன் நம் வசமாக இருக்

கிறபோது, இந்தக் கிழவனைப்பற்றி நமக்கென்ன என்று பெண்கள் மாமனாரிடத்தில் அவமதிப்புக் கொள்ளுதல் கூடாது. "சனியனை விலைக்கு வாங் குப்போல் இந்தப் பெண்ணை ஏன் கொண்டு வந் தோம்?" என்று அவர் வருந்தாமற்படிக்கு இந்தத் திருமகளை மருமகளாகப் பெறுவதற்கு என்ன தவஞ் செய்தோமோ? என்று மனமகிழுமாறு பெண்கள் நடக்க வேண்டும்.

மாமனாரைத் தன்னுடைய தகப்பனாரைப்போல் பாவித்துத் தள்ளாத காலத்தில் அவருக்கு வேண் டிய பணிவிடைகளை அருவருப்பின்றி அன்போடு செய்ய வேண்டும். இந்தப் பெரியாருக்குப் பணி விடை செய்ய நாம் கொடுத்து வைத்தோம் என்று மனமகிழ்ச்சியுடன் உபசாரம் செய்யவேண்டும். இவ் வாறு மாமனாரை இனிய உணவு முதலியனவால் உபசரித்து வந்தால் அவர் உள்ளங்களித்து, 'இந்த மாது சிரோன்மணி எனக்கு மருமகள் மட்டுமல்ல என் குலத்தை விளக்க வந்த குலதெய்வம்' என்று எல்லோரிடத்திலும் புகழுவார். அதனால் உலகமே புகழும்.

பெண்கள் தனது கணவனுடைய சகோதரர் களிடத்தில் மிகவும் விசுவாசம் காட்டவேண்டும். தன் கணவன் நன்றாய் சம்பாதிக்கிறவனாயிருந்து தனது, கணவன் கூடப்பிறந்த மூத்தார், மைத்துனன் மார்கள் வருவாய் இல்லாமலும், சமர்த்தில்லாமலும், இருந்தால் அதற்காக அவர்களை வெறுத்து, அவ மதிப்புக்கொண்டு அவர்கள் மனம் புண்படுமாறு நடக்கப்படாது. அவர்களுக்கு எல்லாவிதமான

நன்மைகளும் உண்டாகுமாறு சர்வேஸ்வரனைப் பிரார்த்திக்க வேண்டும்.

"உன்னுடைய சகோதரன் என்ன சம்பாதிக்கிருன்? சோம்பேரியாகத் திரிந்து வருகிருன். அவனை ஏன் சேர்த்து வைத்துக் கொண்டு வேளைக்கு வேளைக்கு தீனி போடவேண்டும்? வேறே விட்டு விடு" என்று பெண்கள் தன் கணவனிடம் தலையணை மந்திரம் போடப்படாது. ஒருவேளை தன் நாயகன் அவர்களைக் கண்டித்து வெறுத்தால், நாயகனிடத்தில் நல்லுரை கூறி "அவர்கள் உமது சகோதரர்களல்லவா? நீங்களே வெறுத்தால் அவர்களை வேறு யார்தான் ஆதரிப்பார். இறக்கும்போது கொண்டு போவது ஒன்றுமில்லையே? இறக்கப் போகிருேமே தவிர, மீண்டும் அவர்களுடன் பிறக்கப் போவதில்லையே? சகோதர வாத்சல்யமல்லவா சிறந்த செல்வம். உடன்பிறப்பாலல்லவா தோள் வலியுண்டாகும். இராமாயணத்தில் இராமலட்சுமண, பரத சத்ருக்னர் எவ்வளவு ஒற்றுமையாயிருந்தார்கள்? அதனாலல்லவா அவர்களை இன்னும் உலகம் போற்றுகிறது" என்று இவை முதலான நீதி மொழிகளைக் கூறி கணவனுக்கு அவர்கள் மேலிருந்த கோபத்தை மாற்றி சகோதரர்களிடத்தில் அன்புடையவனாகச் செய்யவேண்டும். அவ்வாறு செய்தால் தன் கணவனுடைய தமயனார் "ஆகா! இவள்தான் என்னுடைய புத்திரி" என்று மனமகிழ்ந்து வாழ்த்துவார். தன் கணவனுடைய இளைய சகோதரர்கள், "இவள்தான் எங்களை ஈன்றெடுத்த தாயார், இக்குணவதியின் அன்பென்கிற குடை நிழலில் யாம் வாழு

கிரேும்'' என்று துதி செய்வார்கள். ''தமயன் பத்தினி, தாய்'' என்ற பழமொழியும் நிலை நிற்கும்.

மூத்தார், மைத்துனன் பத்தினிகளாகிய ஓரகத்திகளிடம், ஒற்றுமையுடன் ஒரு தாய் வயிற்றுப் பெண்களைப்போல் ஒழுகுதல் வேண்டும். ''ஓரகத்தி'' என்ருல் ஒற்றுமையாக ஒரு வீட்டில் வாழ்பவள் என்று பொருள். ஆதலிஞல் ஓரகத்திகளிடம் பகைபாராட்டப்படாது. ஒருத்தி சிறிது கடுமையாகப் பேசிஞலும், அறிவின்மையாற் பேசுகிருள் என்று அதனைப் பொருள்படுத்தாது, தன் கடமையினின்று தவறப் படாது. ஓரகத்திகளுக்குள் ஒற்றுமையின்றி, சதா காலமும் ஒருவரையொருவர் ஏசிப் போரிட்டுக் கொண்டிருந்தால் அந்த வீட்டில் இலட்சுமி கடாக்ஷம் விலகிவிடும். ''போரிட்ட வீடும் புனிதனில்லா நாடும் பாழ்'' என்ற பழமொழியை யுன்னி, எக்காலத்திலும் எக்காரணத்தை முன்னிட்டும் யாரிடத்திலும் விரோதித்துக் கடிந்து பேசிச் சண்டையிடப் படாது.

கணவனுடன் பிறந்த நாத்திகளிடம் மிகமிக அன்பு பாராட்டல் வேண்டும். அநேக மாதர்கள் பொருமை கொண்டு அவர்களை வெறுத்து பகை பாராட்டுகிருர்கள். நாத்திகள் தாய்வீடு வந்தால், தங்கள் தாயாரைப்போல் நல்லுணவு தந்து, அவர்கள் மனம்மகிழுமாறு நடக்க வேண்டும். அவ்வாறு நடப்பார்களேயாமாயின் அவர்களும் இவர்கள்மீது மிகவும் பட்சம் வைத்து ''காண முடியாத கற்பக விருட்சம் இவளல்லவா'' என்று புகழ்ந்து போற்றுவார்கள்.

இப்படி பெண்கள், நற்குண நல்லொழுக்க முடையவர்களாக இருந்து, மாமி மாமன் மூத்தார் மைத்துனன் நாத்தி இவர்களிடத்தில் அன்பு செய்து எல்லோராலும் நன்கு மதிக்கப்பட்டு 'நற்குணவதி' என உலகம் போற்ற விளங்க வேண்டும்.

கணவனிடத்தில் பெண்கள் எக்காலத்திலும் பொய் சொல்லப்படாது. பெண்களுக்குத் தெய்வம் கொழுநனேயல்லவா? தெய்வத்தினிடம் பொய் சொன்னால் எத்துணைப் பாவம் உண்டாகுமோ, அத்துணை பாவம் நாயகனிடத்தில் உண்டாகும். பொய் மிகவுங் கொடிய பாவத்தை விளைவிக்கும். விளையாட்டிற்கும் பொய் பேசுதல் கூடாது. பொய் பேசுவதால் நம்பிக்கையற்றுவிடும். பிறகு உண்மை சொன்னாலுங் கூடப் பொய்யாகவே ஆகிவிடும். "பொய் சொல்லுகிற வாய்க்கு போசனங்கிடையாது" என்ற வசனமும் உண்டல்லவா? ஓயாமற் பொய் சொல்லுகிறவர்கள் முடிவில் பல்லோராலும் பழிக்கப்பட்டு உணவு இன்றி வருந்துவார்கள். நம்மை உயர்த்துவது சத்தியமே யாகும். அல்ப விஷயத்திற்குக்கூட பொய் கூறப்படாது. கூடுமான வரை சிறிது சிறிதாகப் பொய்யைக் கடிந்து அறவே ஒழிக்க வேண்டும்.

பெண்களுக்குரிய ஆபரணங்களுக்கெல்லாம் தலைசிறந்து விளங்குவது மங்கலநாணே (தாலி) யாகும். அதனை மிகவும் காப்பாற்ற வேண்டும். அந்த மங்கல நாண் இல்லையானால் ஏனைய ஆபரணங்களை அணியக் கூடாதல்லவா? எல்லா நகைகளும் அணிந்து சுமங்கலியாக இருக்கச் செய்வது

அம்மங்கல நாணினது மகிமையாலே என்பது சொல்லாமலே விளங்கும். அது போல் பெண்களுக்கு முக்கியமான பந்து நாயகனேயாகும். நாயகனையொட்டியே எல்லா பந்துக்களும் உண்டானார்கள். நாயகனிடத்தில் அந்தரங்கமான பிரியம் இருக்க வேண்டும். பெண்கள் எல்லா நகைகளையும் களைந்து வைத்தாலும் மங்கலநாணைக் களைவார்களா? ஒருக்காலும் களையமாட்டார்கள். அதுபோல் எல்லா பந்துக்களையும் துறந்தாலும் நாயகனை மட்டும் ஒருபோதும் துறந்து இருக்கப்படாது.

"கொண்டானி·துன்னிய கேளிர் பிறரில்லை"

என்ற வாக்கியத்தையும் உற்றுநோக்குக. ஊசி போகிறவழியே நூல்போகின்றதல்லவா? அதுபோல் கணவன் மனம்போல் ஒழுகி, கருத்து வேறுபாடு இல்லாமல் காதலாகி ஒருமித்த உள்ளமுடையவராய் வாழவேண்டும். வெளியே சென்றிருந்த நாயகன் மீண்டும் வீட்டிற்கு வந்தகாலை, அவன் உடலும் உள்ளமும் அயர்ந்து வந்திருப்பானாதலால் பெண் மணிகள் உண்ணீர் தந்து மிகவும் உபசரிக்க வேண்டும். அன்னிய புருடர்கள் ஐயப்படுமாறு அடிக்கடி அயல் வீடுகளுக்குச் செல்லப்படாது. அப்படிப் போகவேண்டிய அவசிய கருமம் ஏற்பட்டால் நாயகனிடத்தில் அனுமதி பெற்றுக் கொண்டு துணையோடு செல்ல வேண்டும். தனித்துப் போகப்படாது. பெண்கள் தம்மை நன்றாக அலங்கரித்துக்கொண்டு அயலாருடைய பார்வை தம்மீது விழுமாறு தெருவாயிற்படியினிடமும், மாடி மீதும், ஜன்னலிலும் நிற்கப்படாது. தன்னுடைய ஆடையாபரணங்களின்

அழகையெல்லாம் நாயகன் பார்த்து மகிழ நடக்க வேண்டும். பெண்கள் காரணமின்றி அடிக்கடி நகைத்தல் கூடாது. நாயகனிடத்தில் அதிகந் தெரிந்த மாதிரி தருக்கித்துப் பேசப்படாது. நாயகன் வெளியூர் சென்ற சமயத்தில் அவனுக்கு வழியில் இடையூறின்றி இன்பமுற்று, இனிது வந்துசேர வேண்டுமென்று இஷ்ட தெய்வத்தைப் போற்ற வேண்டும்.

தனது வீட்டிற்கு அகாலத்தில் அதிதிகள் வந்தாலுங்கூட அவர்களுக்கு அன்போடு இயன்ற அளவு உணவு தந்து உபசரிக்க வேண்டும். இளையான் குடிமாற நாயனர் மிகவும் மிடியால் வருந்தி நின்றபோது மழைக்காலத்தில் ஒருநாள் நள்ளிருளில் "மூன்னம்பலர் அடி தேடவு முடிதேடவு மெட்டாப் பொன்னம்பலநாதன்" அடியார் திருக்கோலந் தாங்கி வந்து அன்னங் கேட்ட காலை, நாயனர் உணவுதருவதற்கு ஒன்றுமில்லாமையால் உள்ளம் உடைந்து, தம் பத்தினியாரை நோக்கி "மானினேர் விழியாய்! நம் மனைதேடி வந்த மாதேவன் அடியாரைப் பசி தீர்க்க வேண்டுமே! இப்பொழுது என் செய்யக்கடவேன்?" என வருந்தினர். அக்காலை அவ்வம்மையார் இரவு காலத்தில் "நானென்ன செய்வேன்? தனக்குமிஞ்சியல்லவா தருமம்; நாமே பட்டினி கிடக்க வந்த பரதேசிக்கு நாம் எங்கு போவது" என்று கூறினரா? இல்லை. "நம்பனை மறவாத நல்லன்புடையயள்! மனையில் உணவுக்காம் பண்டம் மற்றென்றும் காண்கிலேன். ஏதிலாரும் இனித் தருவாரிலலை. போதுவைகியதால் பேரமிடம்

வேறில்லை. இன்று பகல் செய்யில் விதைத்த விதைகளைக் கொண்டு வந்தால் அதனையுணவாக்கி அடியாரை அமுது செய்விக்கலாம்'' என்றனர்.

அவருடைய அந்த நல்லுரையைக் கேட்டு நாயனுர் அதனைக் கொண்டு வந்தார். அவ்வம்மையார் அவ்விரவில் எத்துணை சிரமமுற்று சமையல் புரிந்து அதிதிக்கு உணவு தந்தனர். அவ்வம்மையில்லையானல் நாயனுருக்கு அழியாப் புகழ் உண்டாகாதல்லவா? ஆதலால் கற்புடைய மாதர் கணவனுடன் கருத்தொருமித்து வந்த அதிதிகளை இன்சொல் கூறி இனிது உபசரிக்க வேண்டும்.

நமது நாடு பண்டைக் காலத்திலிருந்து ''கற்பிற் சிறந்த நாடு'' என்று பிற நாட்டாரும் மதிக்க நனி சிறந்து விளங்குகிறது. கற்பை யணிகலமாகக் கொண்ட காரிகையரும், கற்புக்கு அணிகலமாகிய பெண்மணிகளும் வாழ்ந்த நாடு நம்முடைய நாடு. கணவன் அயலூருக்குச் சென்றிருந்த ஞான்று தன்னைக் கண்டு அயலார் காமுறுதல் கூடுமென்று கணவன் வருமளவும் வருமளவும் கல்லுருவடைந்திருந்த கற்பரசியும், மும்மூர்த்திகளையும் குழந்தைகளாகச் செய்த மொய்குழலும் (அநசூயை), அக்னியாற்றைக் கடந்த ஆரணங்கும் (சந்திரமதி), பார்வையினுலேயே வேடனை எரித்த பத்தினியும் (தமயந்தி), மணலைச் சோருகச் சமைத்த மங்கையர்க்கரசியும் (வாசுகி), பதினுலு வருடம் வனவாசஞ்செய்யப் புகுந்த நாயகனுடன் உடல் நிழல் போல் பிரியாது சென்ற நல்லணங்கும் (சீதை), இப்போதும் திருமண காலத்தில் சாட்சியாகக் காட்டி வழிபாடு செய்யத்

தக்க உயர் பதவியைப் பெற்ற உத்தமியும் (அருந் ததி), இயமனும் அஞ்சும்படி தொடர்ந்து சென்று வாது செய்து இறந்த கணவனை எழுப்பிய இளம்பிடி யும் (சாவித்திரி), தினகரனைத் தடுத்த திருமகளும் (நளாயினி), கொழுநன் மரித்தான் என்ற வார்த்தை செவிமடுத்த உடனே ஆவிநீத்த குலமகளும் (பதும கோமளை), அக்கினியிற்றோன்றி ஐவரை மணந்து கற் பழியாதிருந்த அரிவையர் திலகமும் (திரௌபதி), இன்னோரன்ன மதநெடுங்கண் மாதரசிகள் பல் லோர் இருந்து பண்டைக் காலத்தில் நமது தேசத்தை மிகவும் அலங்கரித்தனர்.

பெண்கள் அத்தகைய கற்பரசிகளின் வியக்கத் தக்க வரலாறுகளை நன்கு தெரிந்துகொள்ளவேண் டும். அப்பதிவிரதா சிரோன்மணிகளை எதனுல் உலகம் போற்றுகிறது? அவர்கள் எவ்வாறு ஒழு கினுர்கள்? என்பதை ஒவ்வொரு மாதர்களும் உணர் தல் அத்யாவசியமாகும். அவற்றை யுணர்ந்து தாங் களும் அங்ஙனம் நடப்பதற்கு முயலவேண்டும். பெண்கள் தம்மை யெய்திய கணவனை வழிபடுதல் பெறுவாராயின் தேவர்கள் வாழும் சுவர்க்க லோகத் தில் அத்தேவர்களால் பெருஞ்சிறப்பினைப் பெறுவர்.

பெற்ருர் பெறிற்பெறுவா பெண்டிர் பெருஞ் சிறப்
புத்தேளிர் வாழு முலகு

—திருவள்ளுவர்

எப்போதும் பெண்கள் நாயகனது சொல்லைக் கடவாமலும், நாயகனது காவலுக்கு உட்பட்டும், கண்டவர் கை கூப்பி நமஸ்கரிக்குமாறு கற்பிற் சிறந்து விளங்கவேண்டும்.

காவல் தானே பாவையர்க் கழகு
—ஔவைப் பிராட்டியார்.

நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்ற நாற் குணங்களுமே மாதர்களுக்குச் சிறந்த அணிகலன். நாணம் என்பது—ஆடவர்களைக் காணின் இயற்கை யிலுண்டாகும் வெட்கம், மடம் என்பது—சகலமும் தெரிந்தும் தெரியாதது போலிருத்தல், அச்சம் என் பது—நூதனங்களைக் கண்டவுடனும் கேட்டவுட னும் அஞ்சுதல், பயிர்ப்பு என்பது—அன்னிய புருடர்களின் சரீரமாவது அன்னியர் வத்திர மாவது பட்டவுடனே அருவருத்தல்; இந்த குணங்கள் நான்கையும் பெண்கள் அவசியம் மேற் கொள்ளவேண்டும்.

பெண்களால்தான் குடும்பம் முன்னேற்றமடைய வேண்டியிருப்பதால், கண்ணுங் கருத்துமாயிருந்து வனிதையர் குடும்பத்தைக் கவனிக்க வேண்டும். கணவன் வருவாயை அனுசரித்து அதில் ஒரு சிறு பாகமாவது சேமித்து (மிச்சம் பிடித்து) வைக்க வேண்டும். மாரி காலத்திற்கு வேண்டியவற்றைக் கோடை காலத்திலும், மறுமைக்கு வேண்டிய வற்றை இம்மையிலும், சேர்த்துக்கொள்ள வேண் டிய கடமையிருப்பதால் பெண்கள் வருவாயில் எட் டில் ஒரு பங்காவது முதுமைக்கு வேண்டுமென்று சேகரித்து வைக்கவேண்டும். வருவாய் ஒரு பங்காக இருந்தால் இரு பங்காக சிலவழித்து நாய கனைக் கடன்காரனுக ஆக்கி, கடன் தந்தவருடைய உபத்திரவத்தில் நாயகனை ஆளாக்கிக் கலங்கவிடப் படாது. குடும்பத்தின் இலக்கண மறியாத சில

பெண்கள் வீட்டிலுள்ள அரிசி முதலிய பண்டங்களைத் தன் கணவன் முதலிய குடும்பத்தினர் அறியாமற்படிக்கு விற்றுக்கொள்வது, அல்லது அவற்றைத் தாய்வீட்டிற் கனுப்புவதுமாகிய கொடிய வழக்கத்தை யுடையவர்களாக இருக்கிருர்கள். என்னே மதியீனம்! இது எத்தனை இழிவுடையது! கணவன் வீடு செல்வத்திற் சிறந்து, தாய் வீடு தரித்திரத்தினல் சிறுமையுற்றிருந்தால், நாயகனுக்குக்கூறி நாயகன் உத்தரவின்மேல் ஏதாவது தாய்வீட்டிற்கு உதவி செய்யலாம்.

பெண்கள் பதியுடன் எக்காலத்தும் எதிர்த்துப் பேசப்படாது. தன்னை ஏதாவது ஒரு விடயத்தில் கணவன் கண்டித்தால், "நீர்மட்டும் அப்படி நடக்கலாமோ? நான் நடப்பதுதான் உமக்கு குற்றமோ? மற்றவர்கள் நடப்பதற்கு நான் நடப்பது மேல்தான்" என்று இவ்விதமான பயனற்ற வார்த்தைகளைப் பகரப்படாது.

பெண்டிர்க் கழகெதிர் பேசாதிருத்தல்
—வெற்றிவேற்கை

தெய்வப் புலமை தங்கிய திருவள்ளுவரது திருத்தகு தேவியாகிய வாசுகியம்மையாரது ஒழுக்கத்தைச் சிறிது ஆராய்க. திருவள்ளுவர் ஒரு சமயத்தில் தன் பத்தினியை விளித்து தண்ணீர் கொணர்தியென்றனர். அம்மையார் கிணற்றில் கயிறுடன் சேர்ந்த குடத்தை விடுத்து தண்ணீர்குடம் பாதி கிணற்றில் இருக்கும் சமயம் நாயனர் அம்மையாரை அழைத்தனர். உடனே தண்ணீர்க்குடத்தை விட்டு விட்டு அவ்வம்மையார் நாயகன்பால் நணு

கினர். அக்குடம் பாதிக் கிணற்றிலேயே நின்றது. மற்ருெரு சமயம் அம்மையார் அரிசி தீட்டிக்கொண்டிருந்தார். நாயனுர் அழைத்தார். அச்சமயம் உலக்கையை மேலே தூக்கி இருந்தார். அழைத்தவுடனே அப்படியே விட்டுவிட்டு வந்தார். அவ்வுலக்கை அந்தரத்திலேயே நின்றது. மற்ருெரு சமயம் திருவள்ளுவர் பகலில் நெசவுத் தொழில் புரியுங்கால் நூற்பந்து கீழே விழுந்தது. அதனை எடுக்கப் பத்தினியைத் தீபங் கொண்டு வரச் சொன்னுர். அம்மையார் பகலாயிற்றே? இப்போது தீபம் எதற்கு என்று கூறவில்லை; உடனே தீபங் கொணர்ந்தனர். வேருெரு சமயம் நமது தெய்வப் புலவராகிய வள்ளுவர் பழய அன்னத்தைப் புசித்துக்கொண்டிருந்தார். மனைவியை யழைத்து 'அன்னம் சுடுகிறது விசிறியைக்கொண்டு ஆற்றுவா' யென்றனர். அம்மையார் யாதென்றும் பதில் கூறவில்லை; பழயது சுடுமா? இது என்ன விபரீதம் சித்தப்பிரமையா? என்றும் நினைத்தாரில்லை; உடனே விசிறி கொண்டுவந்து வீசினர். என்னே அவரது கற்பின் மாண்பு. பதியினிடத்து அவருக்கிருந்த பக்தி இத்துணைத்தென்று அளக்க வல்லவர் யாவர்? பதியின் வார்த்தையை அவ்வம்மையார் எப்படி பின்பற்றி ஒழுகினுர். சகோதரிகள் உய்த்துணர்க.

வயது வந்த ஆடவர்கள் யாராயிருப்பினும் பெண்கள் தனித்திருந்து உரையாடப்படாது. இந்த மாதரசியின் குரல் வீணையோ புல்லாங்குழலோ என்று மற்ருேர் இறும்பூதுறும்படி இனிமையாகப் பேசவேண்டும். அன்னம் போலவும், பெண் யானை

யைப் போலவும் மிருது நடையுடையவர்களாக தலை யிரங்கித் தன் காற் பெருவிரலைப் பார்த்தவண்ணமாக நடக்கவேண்டும். அம்பிகையைப் பற்றிச் சொல்ல வந்த ஆளுடைய பிள்ளையாரும்,

''மாதர் மடப்பிடியும் மட வன்னமு மன்னதோர்
நடையுடை மலைமகள் துணையென மகிழ்வார்''

என்று நடையின் அழகை நன்கு வர்ணனை புரிந் துளார். பெண்கள் அயல் புருடர்முன் பல்லைக் காட்டி சிரித்தலும், அவர்கள் எதிரில் நின்று பரிகசித் தலும் வெறுக்கத்தக்கனவாம். ''சிரித்தாயோ சீரைக் குலைத்தாயோ'' என்ற முதுமொழியையும் உற்று நோக்குக.

நாயகனுக்கு இதமாக நடவாதும், அவன் இதய மகிழுமாறு ஒழுகாதும், அவமதிபுரிந்து அவன் உள் ளம் உடையுமாறு ஒழுகுகின்ற பெண்கள் அருமை யான விரதங்கள், தேவதா பூசனைகள், தேவாலய மாதர்க்கு தெரிசனை முதலிய எத்தகைய சற்கருமங் களை யாற்றினும், அம்மாதர்க்கு உய்வு கிடையாது. இயம தூதுவர் துன்புறுத்த எரிவாய் நரகத்தில் வீழ்வர்.

உரிய கேள்வ ருவந்து பணிந்திட
தரிய நோன் பொடு பூசனையாற்றுவார்
கரிய கூற்றுவன் றூதர் கடிந்திட
எரியுந் தீ நரகத்திடை யெய்வார்

—காசி காண்டம்.

கணவனுடைய உடல் நலத்திற்குத் தக்கவாறு உபசரித்து கண்ணை இமை காப்பதுபோல் கணவன் உடலுக்கு ஊறு வராவண்ணம் ஓம்பவேண்டும், பதி

நோய்வாய்ப் பட்டபோது சீதாஷ்ண ஸ்திதியை அனுசரித்து உடலுக்குத் தக்க உணவைத் தந்து க்ஷேமத்தை உண்டு பண்ணவேண்டும். ஒருவேளை நாயகனுக்கு வருவாய் அற்றுவிட்டதானுல், உத்யோகம் விலகியதானுல், நம்முடைய பாக்கியம் இவ்வளவுதானென்று நாயகனுக்கு நல்ல சம்பத்து உண்டாக வேண்டுமென்று ஈசுவர வழிபாடு செய்ய வேண்டும். வருவாய்க்கு வேண்டிய சாதனங்களைப் பணிவாகவும் இனிமையாகவும் இயம்பவேண்டும். அப்படிக்கின்றி அவன் சம்பாதிக்க வில்லையே என்று சதா செல்லரிப்பதுபோல் அவனை வருத்தப் படுத்துதல் கூடாது. நீங்காத அன்பும், சாந்த குணமும், ஏனைய நற்குணங்களும் திரண்டு ஓர் வடிவெடுத்தாப்போல் விண்ணவரும் வியக்குமாறு வீறு பெற வேண்டும். தனது கணவன் எத்துணைத் தரித்திரனுக இருந்தாலும் அவனையே அளகேசனுக நினைத்து, கொண்டான் நினைவறிந்து ஒழுகும் நீர்மையளாக, இருக்கவேண்டும்.

குசேல முனிவரைக் காட்டிலும் தரித்திரத்தில் மெலிந்தவர் வேறெருவர் கிடையாதல்லவா? "வறுமையாகிய தீயின்மேற் கிடந்து நௌியு நீள்புழுவாயி னேற்கிரங்கி யருள்வாயே" என்ற அருணகிரியார் திருவாக்குக்கு இலக்கியம் அவரேயல்லவா? மிடியால் எத்துணை சிரமமுற்றனர்? அவருக்கு வாய்த்த பத்தினியார் இருபத்தேழு மக்களுடன் எவ்வளவு வருந்தினர். உடையும் உணவும் இன்றி எத்துணை நாள் துன்புற்ருர். அவ்வம்மையார் எப்போதாவது மணுளனிடம் மனங் கசிந்து உரை

செய்ததுண்டா? மிடியால் மிகமிக வருந்தியும் மக்களால் பல வகையாலும் இன்னலுற்றும் முனிவுருது நாயகனிடம் எவ்வளவு பணிவாக நடந்தார். அவ்வம்மையாரைப்பற்றி அந்நூலாசிரியர் புகழ்ந்துரைத்த இருபாக்களை வரைகுதும்; சகோதரிகள் படித்துணர்க.

மணமக னுடம்பு போற்ற வல்லவண் மனைவியேயென்
றுணர்வினுர்மொழியு மாற்றமுவள்செய நேக்கிப்போலுந்
தணர்வறு மன்புஞ் சாந்தத் தன்மையு நன்மையான
குணமுமோருருவங்கொண்டோர் குடிப்பிறந்தனையநீராள்,
மாசிலாக் குலத்து வந்தாள் வருவிருந் துவப்ப வூட்டு
நேசமிக் குடையாள் கொண்க னினைப்பறிந்தொழுகுநீராள்
தேயுறு வாய்மை யுள்ளாள் சினந்திடலென்று மில்லாள்
பேசுதிண் கற்பு வாய்த்தாள் பெற்றதே கொண்டுவப்பாள்.

# கடமை

கற்புடையார் மேற்கொள்ளவேண்டிய முக்கிய மான கடமைகள் மூன்றுள்ளன. அவற்றை ஒவ்வொரு பெண்மணிகளும் தெரிந்துகொண்டு அங்ஙனம் நடப்பதற்கு முயலவேண்டும். அவைகளைப் பற்றிச் சிறிது விளக்குவாம்.

தன் வீடு தேடிவந்த விருந்தினரை நாயகனுடன் சேர்ந்து முகமன் கூறி உபசரிக்கவேண்டும். அவ்வாறு உபசரிக்கும்போது இரு சினேகிதர்கள் எப்படி மனங் கலந்திருப்பார்களோ அப்படி நாயகனுடன் மனங் கலந்திருக்கவேண்டும். நட்பினன் போல் நாயகனுக்கு நாயகி துணை செய்யவேண்டும். காரைக்காலம்மையார் சரிதையை ஊன்றிப் பாருங்கள். சிவனடியார் ஒருவர் உணவு வேண்டி வந்த ஞான்று அவ்வம்மையார் அந்த அடியாரை வரவேற்று *பாத்யம் §அர்க்யம் முதலியன தந்து பீடமளித்து அன்னத்தைப் படைத்தார். அக்காலை கறியமுது கைக்கூடாமலிருந்தபடியால், சிவனடியாருக்கு அமுது செய்விப்பதைக் காட்டிலும் சிறந்த பேறு மூவுலகிலும் இல்லை; பெறுதற்கரிய பேறு அடியார்க்கு அன்னம் படைப்பதே என்று உன்னி, தனது நாயகன் தன்னிட மனுப்பின மாங்கனி இரண்டில் ஒன்றை அவ்வடியார்க்கு உள்ளம் உவந்து படைத்து இனிமை கூறி உபசரித்து உலகம் உள்ள

---

*காலலம்ப நீர். §கையலம்ப நீர்.

நாள்வரைக்கும் அழியாப் புகழை யெய்தினர். சிவ பெருமான் தனது திருவாக்கால் "அம்மா" என்று அழைக்கும் பெரிய பாக்கியத்தையும் அடைந்தார். அருமைச் சகோதரிகள் உற்று நோக்குக.

அடியார்க்கு அன்னம் படைக்கிற விஷயத்தில் ஒரு வேளை கருத்து மாறுபட்டால், "பிறக்கும்போது ஏதாவது கொண்டு வந்தோமா? இறக்கும்போது கொண்டு போக முடியுமா? எல்லாம் ஈசன் தந்த செல்வமல்லவா? அவன் கொடுத்த பொருளை அவ னடியார்களுக்கு அளிக்கவேண்டாமா? இறந்த போதும் மறுமைக்குப் பற்றித் தொடர்வது நாம் செய்த புண்ணியமல்லவா?" என்று இவை முதலிய அறமொழிகளைச் சமயமறிந்து பணிவாகவும் இனிமை யாகவும் எடுத்துரைத்துக் கணவனையும் அறமார்க் கத்தில் ஈடுபடுத்தவேண்டும். தன் வீடு தேடி வந்த விருந்தினரை அன்புடன் உபசரிக்கிற பெண் மணியை அக்கினியும் கொளுத்தாது.

அரிச்சந்திரனும், சந்திரமதியும், தேவதாசனும், சத்தியகீர்த்தியும் விஸ்வாமித்திரருடைய கடனை நீக்குவதற்காகக் காசியம்பதியை நோக்கிச் செல் லுங்கால், விஸ்வாமித்திரர் அக்கினிதேவனை யழைத்து அரிச்சந்திரனைத் துன்புறுத்துமாறு அனுப் பினர். அக்கினி பகவான் அண்டம் வெடிபட ஊழி காலத்தெழுகின்ற வடவாமுகாக்கினிபோல் எதிர்ப் பட்டனன். அக்கினி சுவாலை விட்டு சூழ்ந்தது. அது கண்ட அரிச்சந்திரன் சத்தியகீர்த்தியை நோக்கி, "அக்கினியில் நான் வீழ்ந்து அழிகிறேன்; நீ இவர்களுடன் உய்வாய்" என்றனன். சத்திய

கீர்த்தி "அடியேனிருக்கத் தாங்கள் ஏன் அக்கினி யில் விழவேண்டும்? நான் வீழ்கிறேன்" என்றனன். சந்திரமதி "அடியாள் வீழ்கிறேன்" என்றனள். தேவதாசன் "மாதா பிதாக்களுடைய துன்பத்தை நீக்குவது மக்கள் கடமையல்லவா? நானே வீழ்ந்து மடிகிறேன்" என்றனன். அது கேட்ட சந்திரமதி மகனைத் தடுத்து அப்பெரிய அக்கினிக்குமுன் வந்து, "ஏ அக்கினி பகவானே! எப்போதாவது என்வீடு தேடி வந்த விருந்தினரை இகழ்ந்ததுண்டேல் என்னைக் கொல்லுதி" என்று கனலிற் பாய்ந்தாள். அக்கினி பன்னீர்போற் குளிர்ந்தது. சந்திரமதியின் கற்புத் தீ அக்கினியைக் கொளுத்தியது.

மதுமென் மொழியாள் கற்பு வளர்நெடு வடவைத் தீயின்
முதிர்தழ லதுதா னென்னைச் சுடுமெனு முழங்கு செந்தீ
யதிர்குர லார்ப்பு மாறி யடங்கினா வொடுங்கிக் காலை
கதிரவன் வரவு கண்ட விருளெனக் கழிந்த தன்றே.

—அரிச்சந்திர புராணம்.

ஆதலால் அதிதிகளுக்கு அன்னம் அளிப்பதனுல் இத்துணைப் பெரிய சக்தியுண்டாகிறது.

சில குடும்பங்களில் புருடன் தரும சிந்தையுடையவனுயிருக்க பெண்கள் அதற்கு நேர்மாருக இருக்கிருர்கள். நாயகன் ஒரு அதிதியை அழைத்துக் கொண்டு வந்தால் பெண்கள் உனக்கு வேலையில்லை, வழியில் போகிறவனை யெல்லாம் அழைத்துக்கொண்டு வருகிருயே; இவர்களுக்கெல்லாம் வடித்துக் கொட்ட யார் உறுதியாயிருக்கிருர்? தரும ராஜா போகும்போது உன்னைத்தான் வைத்துவிட்டுப் போனுர் போலும்" என்று இவை முதலிய கடுஞ் சொற்களை சரமழைபோல் பொழிகிருர்கள். நாயகன்

என்செய்வான் பாவம்; மனம் நொந்து விதியை வெறுப்பதைத் தவிற வேறு வழியில்லை.

தருமசிந்தையுடைய ஓர் குணபூஷணனுக்கு கடினசித்தமுடையபத்தினிஒருவளிருந்தாள். எப்போதும் ஏழைகளுக்கு இரங்கி உணவளிப்பதே அவனுக்கு வேலை. பசித்தவர்க்குப் பரிந்தளிக்கும் பரம தயாளன். ஒரு சமயம் அப்புண்ணிய புருஷன் தெருத்திண்ணையில் அமர்ந்திருக்கும்போது ஒரு பெரியார் பசியால் வாடி அவன்பால் வந்து "ஐயா! மெத்தப் பயியாயிருக்கிறது; நான் உணவுகொண்டு நாள்கள் மூன்ருயின; கண் பஞ்சடைகிறது; கர்தடைக்கிறது; புண்ணியவானே! இந்த வேளை ஒரு பிடி யன்னம் கொடுத்து என்னைக் காப்பாற்று" என்றனர். அது கேட்ட அவ்வுத்தமன் உள்ளே சென்று பத்தினியைப் பார்த்து, 'பெண்ணே! பசியால் மிகக் களைத்து ஒரு பெரியார் வந்திருக்கிருர்; அவருக்கு ஒருபிடி யன்னமாவது கொடுத்து உதவுவாய்; உனக்கு மிகுந்த புண்ணியமுண்டாகும்" என்றனன். அவள் அதைக் கேட்டவுடனே சினமிகுந்து, "உனக்கு விருந்து ஒரு கேடா? வீட்டிருப்புத் தெரியாத நீயும் ஒரு ஆண்பிள்ளையா? உன்னேடு எந்நேரமும் இதே போராட்டமாக ஆய்விட்டது; தனக்கு மிஞ்சியல்லவா தருமம்; "அஞ்சு மூன்றும் அடுக்காய் இருந்தால் அறியாத பெண்ணும் கறி சமைப்பாள்"; சமையல் செய்ய அரிசி எங்கே? கறியமுது செய்யப் பதார்த்தமெங்கே? வெறுங்கையால் முழம் போடுகிருயே" என்று கடிந்துரைத்தாள். அதைக் கேட்ட நாயகன் மிகவும் சந்

தோஷித்து என்னால் ஒன்றும் முடியாது என்று சொல்லாமல், அரிசியுங் காய்கறியுங் கொண்டுவந்தால் சமைக்கிறேன் என்று சொன்னாளே அது போதும். இத்தனை நாள் இதுகூடச் சொன்னதில்லையே? என்று நினைத்து கடைக்கு ஓடி சமையலுக்கு வேண்டியவற்றை ஒரு நொடிக்குள் வாங்கிவந்து பத்தினி முன் வைத்தான். அவள் அவற்றைக்கண்டு, "உனக்கு சிறிதாவது யோசனையிருக்கிறதா? உன்னை நோவதில் என்ன பிரயோஜனம்; உன்னைப் படைத்த பிரமனையல்லவா நோவ வேண்டும்; அரிசி யரைக் காற் படியானாலும் அடுப்பங்கட்டி மூன்றுவேண்டு மல்லவா? பானை சட்டி முதலியவை எங்கே?' என்றனள். அக்குணகரன் சமையல் புரிவதற்குத் தகுதியாகிய பானைசட்டி முதலியவைகளை வாங்கி வந்து தந்து, "பெரியார் பசியோடு காத்துக் கொண்டிருக்கிறார்; விரைவில் சமையல் ஆகட்டும்" என்றான். மனைவி "உன் பவிசுககு அதிகாரம் ஒரு கேடா? உனக்கென்ன வாயால் சொல்லுவதற்கு? என்னால் முடியாது; தலைவலி அதிகமாயிருக்கிறது" என்று பாய்போட்டுப்படுத்துக் கொண்டனள். "உனக்கென்னடி கேடு? செக்குலக்கை போலிருக்கிறாயே! இந்த வம்பு எதற்கு?" என்றான். மனைவி 'என் உடம்பிருக்கிறது எனக்கல்லவா தெரியும். "எருது நோய் காக்கைக்குத் தெரியுமா?' வாயால் சொல்லுகிறவர்களுக்கென்ன; 'தலைவலியுங் காய்ச்சலும் தனக்கு வந்தாலல்லவா தெரியும்'. வீண் வம்பு செய்யாதே" என்று முக்காடு போட்டு நன்றாகக் கால்நீட்டிப் படுத்துவிட்டாள். புருடனுக்குச் சிறிது கோபம்

வந்தது. "இவ்வளவு சண்டித்தனம் செயகிருளே" என்று "அடிபாவி! வந்தவர் பசியோடு வீதியில் இருக்கிருர், உனக்கு இத்தனை அகமா?" என்று சிறு குச்சியை எடுத்து மெல்ல ஒரு அடி அடித்தான். அதற்கவள் ஓவென்றலறி, "அடா பாவி! என்னை அடித்துக் கொல்லவா புறப்பட்டாய்? உன்னிடத்தில் எத்தனை நாளைக்கு இந்தப் பாடுபடுவேன், உன் தலை மேல் இடி விழாதா? இனி உரலிலே அகப்பட்டுக் கொண்டு உலக்கைக்குப் பயந்தால் ஆகுமா? உனக்குத் தகுந்த புத்தி செய்து வைக்கிறேன். அடா படு பாவீ? இனி நான் உயிரோடிருக்கிறதில்லை, ஊமத் தங்காயைத் தின்று பழி போடுகிறேன்'' என்று இடி இடித்ததுபோல் கதறி தெருவில் வந்து, "ஐயோ! இந்த மனிதன் செய்கிற அக்கிரமத்தைக் கேட்க யாருமில்லையா? ஆணுடன் பெண்ணுடன் பிறந்தவர் யாரும் இந்த ஊரில் இல்லையா?'' என்று மண்ணை வாரித் தூற்றி, பெருங் குரல் கொண்டு, அவனைக் கண்டபடி வைது ஊரார் சிரிக்க அவமானத்தை விளைவித்தாள். மானத்தின்மேல் திருஷ்டியுடைய அந்த உத்தமன் என் செய்வான் பாவம்? பிச்சைக்கு வந்த பெரியார் சொல்லாமல் பிடித்தார் ஓட்டம்.

இதைக் கண்ட நாராயணபாரதியார் தமது திருவேங்கட சதகத்தில் தீப்பெண்டீரியல்பாகப் பாடி வைத்தனர்.

ஐயருக் கமுதுபடை யென்றுவந் தாய் நீயு
மாண்பிள்ளை யென் றெண்ணவோ

அரிசியெங் கேபானை சட்டியெங்கே யென்ப
    ளவள் சொன்ன வகைகளெல்லாம்
பையவே கொண்டுவந் தாலுஞ் சமைக்கப்
    படாதுதலை நோகுதென்று
பாயிற் கிடப்பள் சின மாயொன்று பேசினுல்
    பாருனக் கேற்ற புத்தி
செய்யவல் லேனென்பள் சற்றடித் தானஞ்சு
    தின்கிறேன் கூகூ வெனத்
தெருவீடு தோறுமுறை யிடுபெண் டிருண்டெனிற்
    றீய நமன் வேறு முண்டோ
வைகம் புகழ்சோலை மலையலங் காரனே
    மண வாள நாரா யணன்
மனதி லுறை யலர்மேலு மங்கைமண வாளனே
    வரத வேங் கடராய னே.

இப்படிப்பட்ட தீயகுணம் சிறிதும் இல்லாமற் படிக்கு பார்ப்பவர் "இந்தக் குணவதியைப் பத்தினியாகப் பெறுவதற்கு இவள் கணவன் என்ன புண்ணியஞ் செய்தனனோ?'' என்று அதிசயித்து வாயார வாழ்த்தும்படி பெண்கள் ஒழுகவேண்டும். ஆதலால் வீடு தேடிவந்த விருந்தினரை உபசரிக்குங்கால் நாயகனுடன் கருத்தொருமித்து நட்பினளாய் இருத்தல் வேண்டும்; அது முதற் கடமை.

இரண்டாவது. இல்லறஞ் செய்யும்போது தாயாரைப்போல் பரிவுடையவளாக நாயகனை உணவு உடைகள் முதலியன சமயமறிந்து கொடுத்து உதவவேண்டும். எவ்வாறு தாயார் மக்களின் குணமறிந்து, உடல் நல மறிந்து, சீதோஷ்ண நிலைமைகளையறிந்து வேளைக்கு வேளை சுவையுடைய

உணவுகளைத் தருகிறாளோ அது போலவும்; மக்கள் நோய்வாய்ப்பட்டபோது எத்துணைச் சிரமப்பட்டு, மணிமந்த்ர ஔஷதனங்களால் அதற்குப் பரிகாரந் தேடி, நோயை நீக்கி சுகத்தை உண்டு பண்ணு கிறாளோ அதுபோலவும் நாயகனுக்கு எக்காலத்தும் அன்புடையவர்களாயிருந்து, நாயகன் நோய் வாய்ப் படா வண்ணம் உடல் நிலையை யனுசரித்து நல்ல ஆகாரங்களைத் தந்து உபசரிக்கவேண்டும். நாயக னுக்கு எந்த உணவில் பிரியமோ அந்த உணவைத் தந்து அவன் மனம் மகிழுமாறு நடக்கவேண்டும். அந்த விஷயத்தில் தாயாராக இருக்கவேண்டும்; இரண்டாவது கடமை.

மூன்றாவது, மக்களைப் பெறுகின்ற விஷயத்தில் மனைவியாக இருக்கவேண்டும். நாயகனும் நாயகியும் எந்த அளவில் மனங்கலந்து வாழ்கிறார்களோ அந்த அளவில்தான் மக்கள் தோன்றும். எலியும் பூனையும் போல் சதிபதிகள் இருந்தால் அதுபோன்ற குழந்தை கள்தான் பிறக்கும் நாயகனிடத்தில் சந்தோஷ சித்த மும், சாந்த குணமும், குளிர்ந்த முகமும் உடையவர் களாகப் பெண்களிருந்தால் உலகம் போற்றுகிற நிலை யில் உத்தமோத்தமமான குழந்தை உற்பவிக்கும். தமோகுண சம்பன்னர்களுக்கு தமோகுண குழந்தை களும், சத்துவ குண சம்பன்னர்களுக்குச் சத்துவ குண குழந்தைகளும் பிறப்பதைக் கண்கூடாகக் காணலாம்.

குந்தியம்மையார் குழந்தைகளைப் பெற்றாள் என்ற வார்த்தையைக் கேட்டவுடனே, கற்பிற்

சிறந்தவளாயிருந்துங்கூட காந்தாரி பொருமை கொண்டு, "நேற்று ஒன்றுமில்லாமலிருந்த குந்தி இன்று தேவகுமாரனைப் போன்ற மகனை ஈன்றன ளாமே? நான் பல நாள் கருவிருந்தும் ஒன்றுமில்லாம லிருக்கின்றேனே? இந்த வயிற்றிலிருப்பது கல்லா? மண்ணு? ஒன்றுந் தெரியவில்லையே" என்று வயிற்றை இடித்துக் கொண்டனள். அதனால் உதிரங் குழம்பி பிண்டம் வெளிவந்து விழ, பின்னர் வியாசர் கருணையால் நூறு குழந்தைகளாகச் செய்தனர். கருவுற்ற காலத்தில் காந்தாரி கொண்ட பொருமைக் குணத்திலே துரியோதனாதிகள் பொருமையே வடி வெடுத்தாற்போலக் கொடியவர்களாகப் பிறந்தனர். குந்திதேவியாரது உத்தமக் குணங்களாலே அவ்வம் மையாரது திருவுதரத்திற் றேன்றிய, யுதிஷ்டிர ராதிய பாண்டவர்கள் ஐவர்களும் சற்குண சீலர் களாக, தரும சிந்தையுடையவர்களாக எல்லாவித சுகுணங்களுக்கும் உறைவிடமாக உலகம் இன்னும் போற்றுகிற நிலைமையில் விளங்கினுர்கள். இரு திறத்து மைந்தர்களுக்கும் குணம் பேதப்பட்டதற்குக் காரணம் அவரவர் தாயாரே யல்லவா? ஆதலால் பெண்கள் நற்குண நல்லொழுக்கமுடையவர்களாக இருந்து நாயகனிடத்தில் மக்களைப் பெறுதல் வேண் டும். எனவே மக்களைப் பெறுவதில் மனையவளா யிருக்க வேண்டியது மூன்றுவது கடமை.

எனவே நல்விருந்தோம்பலின் நட்டாளாக இருத்தலும், இல்லறஞ் செய்தலின் ஈன்ற தாய்போல் இருத்தலும், மக்களைப் பெறுவதில் மனைக்கிழத்தியா யிருத்தலும் ஆகிய இம்மூன்று நற்கடமைகளையும்

கற்புடையார் மேற்கொள்ளவேண்டியது அவசிய மாகும். இதனை அடியில் வரையும் ஆன்ருேர் அமுத வாக்காலறிக.

நல்விருந் தோம்பலி நட்டாளாய் வைகலு
மில்லறஞ் செய்தலி னீன்றதாய்—தொல்குடியின்
மக்கள் பெறலின் மனைக்கிழத்தி யிம்மூன் றுஞ்
கற்புடையார் பூண்ட கடன். —திரிகடுகம்.

# கணவன்

உலகமானது உணவு இல்லாமல் நிலைத்திராது. அவ்வுணவு நீரால் விளைகின்றது. நீர் இல்லையானல் உலகம் செழிக்காது. அந்நீரோ மழையில்லையானல் இல்லை. அம்மழையோ கற்புடை மகளிர் இல்லையானல் இல்லை. எனவே உலகிற்கு முக்கிய ஆதாரமாக இருந்துதவுவது கற்புடைப் பெண்டிரேயாம். அன்பர்கள் உற்று நோக்குக. உலகம் ஓங்கி வளர்ந்து செழிப்படைவது பெண்களது கற்பொழுக்கத்தாலேயே என்பது தெற்றென விளங்கும் உலகம் செழிப்படையும் பாரம் பெரும்பாலும் பெண்களது தலையின்மேலிருக்கிறது. அத்தகைய கற்பொழுக்கத்தைக் கூறுவது மிகவும் அரியதாகும்.

அதனை முன்னொருகால் சிவனெனும் பேர் தனக்கேயுடைய செம்மேனியன் கேட்க அகிலாண்ட கோடி யீன்ற அன்னையாகிய அறம் வளர்த்த நாயகி உரைத்தனர்; அதனை விளக்குதும்.

மஹா கைலாச மலையிலே தேவகணங்களால் சூழப்பெற்ற மஹா சபையிலே அரியணைமேல் வீற்றிருக்கும் ஆலமுண்டு அமரரைக்காத்த அண்ணலார் தம் வாம பாகத்திருக்கும் வரையரசன் திருமகளாம் உமாதேவியாரைநோக்கி, "அன்புள்ளவளே! குற்றமற்றவளே! பிரமபத்தினியாகிய சாவித்திரி, இந்திரன் பத்தினியாகிய இந்திராணி, திருமாலின் பத்தினி

யாகிய திருமகள், இயமனுடைய பத்தினியாகிய த்ருதி. மார்க்கண்டேயருடைய பத்தினியாகிய தூமாரணை, குபேரனுடைய மனைவியாகிய ருத்தி, வருணனுடைய வாழ்க்கைத் துணைவியான கௌரி, சூரியனுடைய பத்தினியாகிய சுவர்ச்சலை, சந்திரன் தேவியாகிய ரோகிணி, அக்கினியின் பத்தினியாகிய சுவர்காதேவி, கசியபர் பத்தினியாகிய அதிதி, வசிட்டரின் மனைவியாகிய அருந்ததி, அகத்தியரின் பத்தினியாகிய உலோபாமுத்திரை, இவர்களும் இன்னும் உலகங்களிலுள்ள இன்னோரன்ன பதிவ்ருதாமணிகளும் எப்போதும் உன்னை யனுசரித்திருக்கின்றனர். தர்மசம்வர்தனீ! அதனால் உன்னிடம் கேட்க விரும்புகிறேன். பெண்களது கற்பிலக்கணங்களைக் கூறுவாயாக. நீ என்னுடன் சேர்ந்து தருமத்தைச் செய்கிறவள்; உலகத்தைத் தாங்குகிறவள்; உலக முழுவதும் உன்னுடைய சக்தியால் நடைபெறுகிறது. இங்கு குழுமியுள்ள மாதர் கூட்டம் பதிவ்ருதா தருமத்தை உன்னால் கேட்க விரும்புகிறது. உன்னால் சொல்லப்படுவது மிகவும் சிறந்ததாக அல்லவா இருக்கும்? பெண்களுக்குப் பெண்கள் தான் கதி. எப்போதும் பசு பசுக்களிடத்திலேயே சேரும்; மனிதன் மனிதரல்லாதவரிடத்தில் சந்தோஷமடையான்; இனம் இனத்துடன் சேரும்; தேவியே! உலகில் இந்த இயல்பு ஆதிகாலம் முதல் நடக்கிறது. பெண்ணினால் சொல்லப்படுவது எதுவாயினும் அது பெண்களால் கொண்டாடப்படும். ஆடவன் சொல்வது மகளிரிடத்தில் அவ்வளவு மதிப்பையடையாது. பெண்களது அழியாத தருமம்

உனக்குத்தானே ஆதலால் உன்னைக் கேட்கிறேன். நீ உலகங்களுக்கெல்லாந் தாய்; நான் விரும்பிக் கேட்பதை நீ சொல்லக்கடவாய்'' என்றனர்.

எல்லாம் தெரிந்த ஈசுவரர் இவ்வாறு கேட்டவுடனே உமாமகேஸ்வரி அச்சமும் நாணமும் அடைந்து அந்த சபையில் ஒன்றும் பேசாமலிருந்தார். அக்கால அரனுர் அம்பிகையைக் கூறுமாறு பன்முறை வினவினுர். உமாதேவியார் "தேவருக்குந் தேவரே! மாலயனறியா மகாதேவரே! சர்வதருமங்களையும் சர்வ வித்தைகளையும் அறிந்த தங்களிடம் பெண் தருமத்தை நான் கூறுவது எப்படி'' என்றனர். பொன்னங்கடுக்கைப் புரிசடையோன் "மட்டுவார் குழலீ! மயங்கற்க. உலகம் உய்யும் பொருட்டாக மகளிர் தருமத்தை எடுத்துரைப்பாய்'' என்றனர் கங்கை சதத்ரு காவிரி முதலிய நதி தேவதைகளும், இருடிபத்தினிகளும், நாககன்னிகைகளும், கந்தருவ யட்ச கன்னிகைகளும் நாற்புறத்தும் வந்து கூடி பெருமாட்டியாரது அமுத வாக்கை எதிர்பார்த்துக் கரங்களைக் குவித்த வண்ணமாக நின்றனர். 'எறிதரங்கம் உடுக்கும் புவனங் கடந்து நின்ற ஒருவன் திருவுள்ளத்தில் அழகு ஒழுக எழுதிப் பார்த்திருக்கும் உயிரோவியம்'' ஆகிய உமாதேவியார் உள்ளம் உவந்து பெண்களது நன்மைக்காகவும் விரிசடை விமலனது விருப்பத்தைச் செய்வதற்காகவும் கரங்கூப்பி கண்ணுதலை வணங்கி கற்பிலக்கணத்தை கூறுவாராஞர். "சொற்பதங் கடந்த சோதியே! காரிகையரது கற்பிலக்கணத்தை தமது திருவருளால் கழறுவேன். ருதுகாலம் வரையிலும்

சிறந்த தேக சுத்தமுள்ளவள் கன்னியென்று சொல்லப்படுகிருள். தந்தை, தாய், சகோதரன், அம்மான், தந்தையின் சகோதரன் இந்த ஐவரும் அந்தக் கன்னிகையைத் தானஞ் செய்கிறதற்கு அதிகாரிகள். அந்தப் பெண்களுக்குத் தரும காரியத்தை நடத்துவதற்காகச் செய்யப்படும் விவாகங்கள் ஐந்து வகை. (பிரமம், பிரஜாபத்தியம், ஆரிடம், தெய்வம், ஆசுரம்) ஒருவரையொருவர் அன்பு கொள்வதனுல் இஷ்டப்படி கன்னிகையே தன்னே இரகசியத்தில் கொடுப்பதும் விவாகந்தான். (இது காந்தருவம், இராக்கதமும் பைசாசமும் தானமாக இல்லாமையால் சேர்க்கப்படவில்லே.) மேற்கூறிய விவாகங்களில் எதனுலாவது ஒரு கன்னிகை யாருக்குக் கொடுக்கப்படுகிருளோ அவனுக்கே மனேவியாவாள். ஆதலால் கன்னிகையைக் கொடுப்பவர்கள் நன்ருக ஆராய்ந்து பார்த்தே கொடுக்க வேண்டும். வேறு விதமாகக் கொடுக்கலாகாது. நாயகனேச் சேர்ந்த பத்தினியானவள் மனத்தினுலும் வாக்கினுலும் செய்கையினுலும் கணவனுக்கு அனுகூலமாகவே நடக்க வேண்டும். விவாகமானது முதல் கணவனுக்கு இன்னுதது செய்யலாகாது. தர்மார்த்த காமங்களுள் எதனே எதனே நாயகன் விரும்பினுலும் அந்த அந்த வகைகளிலெல்லாம் அவனுக்குப் பிரியமாயிருந்து அவனே உபசரிக்க வேண்டும். இதுதான் பெண்களுக்கு எக்காலமுள்ள பதிவிரதா தருமம். நாயகனேக் கடவுளாக நினேத்து தலேயன்பு பூண்டொழுக வேண்டும். உயிரை எவ்வளவு ஜாக்கிரதையுடன் காப்பாற்று

கிறுர்களோ அப்படி கணவனை ஓம்பவேண்டும். இது தான் ஒழுக்கத்தின் சுருக்கம். எப்போதும் கணவனைக் கவனிக்கும் கற்புள்ளவள் தெய்வத் தன்மையுள்ள வள். அவளுக்குக் கணவனைத் தவிர வேறு தெய்வ வழிபாடு இல்லை. தேவதேவரே! இதற்கு உதாரண மாக ஒரு பழைய சரித்திரத்தைக் கேட்டிருக்கிறேன்; உமது திருவருளால் அதனைச் சுருக்கமாகக் கூறு கிறேன்; கேளும்.

ஒரு பிராம்மணனுக்கு இரு மனைவிகள் இருந் தனர். அவர்களில் ஒருத்தி தெய்வ பக்தியுடன் தருமத்தைச் செய்யக் கருதுகிறவள். அவள் கணவனை அவமதித்துத் தேவதைகளிடத்தில் பக்தி வைத்து ஊக்கத்துடன் பூசித்துப் பெரிய தருமங்களை செய்து வந்தாள். சிறந்தவளான மற்றொருத்தி கணவனைப்பற்றியே தருமஞ் செய்ய நினைத்து அவனையே தெய்வமாகக் கொண்டு அவன் விருப் பத்தைச் செய்து வந்தாள். கணவன் சொல்லையே வேதவசனமாகவும் கணவன் பாதசேவையே தேவதா சேவையாகவும் கருதி பதிபக்தியிற் சிறந் திருந்தாள். இவ்வாறு நடந்துகொண்டிருக்கையில் அவ்விருவருக்கும் ஒரு காலத்தில் மரணம் நேர்ந்த போது அவ்விருவரும் பரலோகத்தின் வழியில் சென்றனர். அவர்களுள் தெய்வப் பற்றுள்ளவள் எவளோ அவள் நிற்க பதியினிடத்துப் பற்றுள்ளவள் புண்ணியலோகம் சென்றனள். தெய்வ பக்தியுள்ள வள் நின்றுகொண்டு மிக்கத் துயரத்துடன் அழு தாள். தென்திசைக் கதிபதியாகிய இயமன் அவளைப் பார்த்து, ''குற்றமற்றவளே! நீ வருந்தாதே. உனக்குப்

புண்ணிய லோகங்கள் இல்லை; நீ உன் தருமத்தைச் செய்யாமலிருந்ததனுல் உனக்கு அந்தப் புண்ணிய லோகங்கள் கிடையா. பெண்ணுக்குக் கணவனே தெய்வமாக எல்லாத் தேவதைகளாலும் விதிக்கப்பட்டிருக்கிருன். சிறந்தவளே! அந்தக் கணவனை அவமதித்தபின் புண்ணிய லோகங்களுக்குப் போவது பெண்ணரசியே! நீ மதிகெட்டு உன் தெய்வத்தை அறியாமற் போனுய். கணவனுகிய தெய்வத்தை வீட்டில் வைத்து விட்டு வேறு தேவதைகளைத் தேடி அலைந்தனை. கணவனுள்ள பெண் கணவனுக்குள்ள தருமத்தையே அனுசரிக்க வேண்டும்; ஆதலால் நீ திரும்பிச் செல். கணவனுக்கு அனுகூலத்தைச் செய். அதன்மேல் பதிவிரதைகள் போகும் லோகங்களுக்கும் போவாய். இல்லையேல் உத்தமமான பதிஉலகத்திற்கும் போகமுடியாது'' என்னும் பூரணமான சொற்களைச் சொன்னுன்.* அறக் கடவுள் இவ்வாறு சொன்னபின் அவள் மறுபடியும் திரும்பிச் சென்று கணவனையடுத்து அவன் விருப்பத்தையே முக்கியமாகச் செய்து கொண்டிருந்தாள். மஹாதேவரே! இப்படி இருப்பதனுல் பெண்களுக்கு கணவனே சிறந்த தெய்வம் ஆதலால் அவர்கள் கணவனையே முக்கியமாக நினைத்து அவனுக்குப் பணிவிடைகள் செய்யவேண்டும்.

*வருதிநீமடந்தை மீண்டுலகெய்தி வளருடற் ருங்கி நாயகன்பாற்
கருதியன் புடைய ளாகியங்கவனைக் கடவுளாக்கருதி நற்
கருத்திற்

புரிதியாங் கவன்றன் ரெழிலுயர் கதியிற் புகுவையென்
றுரைத்துவிட்கடன்ருன்

சுருதி களிதற்குச் சான்றெனவுரைத்துத் தோகைமீண்
டிவையெலாஞ் சொன்னுள்.
—மகாபாரதம்.

# சிவபெருமானுக்கு உமாதேவியார் கூறுவது

முப்புரமெரித்த முழுமுதலே! கண்ணுதற் கடவுளே! கணவனையுடைய காரிகை பகல் இரவுகளில் நடத்தும் சிறந்த ஒழுக்கத்தைக் கூறுகிறேன்; செவி சாய்த்துக் கேட்கவேண்டும். அவள் அதிகாலையில் கணவனுக்கு முன்னெழுந்து காலைக்காரியங்களைச் செய்யவேண்டும். அதன் பிறகு கணவனுடைய கருத்தையறிந்து அவனை எழுப்ப வேண்டும். காலைக் காரியங்களைத் தானே முறைப்படி செய்ய வேண்டும். "ஆகாரம் எப்படிச் செய்யலாம்?" என்று நாயகனைக் கேட்டு அவனுக்கு எப்படி பிரியமாயிருக்குமோ அப்படியே எல்லாவற்றையும் செய்ய வேண்டும். தன் கணவன் எப்படியோ அப்படியே மனைவியும் குருபக்தி செய்யவேண்டும். கணவனுடைய தேகநிலைமைக்குத் தக்கபடியும் அவன் மன விருப்பம் நிறைவேறும்படியும் உபசரிக்க வேண்டும். கணவன் வெளியிற் சென்ற பிறகு தன் காரியங்களை ஜாக்கிரதையோடு கவனிக்கவேண்டும். கணவன் வரக்கண்டு உடனே அன்புடன் காலலம்ப நீரும் ஆசனமும் சயனமுங் கொடுத்து மனத்திற்கு இனிமையாகப் பேசி உடம்பின் சிரமம் தீரும்படி சிறந்த உபசாரத்தைச் செய்யவேண்டும். அதிதிகள்

வரும்போதெல்லாம் மகிழ்ச்சியுடன் இருக்கவேண்டும்; செய்கையினுலும் வாக்கினுலும் அதிதிகளை மகிழச் செய்யவேண்டும். மங்களங்களையும் வீட்டின் சுத்தத்தையும் தான் செய்தும் செய்வித்தும் வீட்டிலுள்ள பண்டங்கள் எல்லாவற்றையும் எந்தக் காலமும் கவனிக்கவேண்டும். பெண்ணுனவள் பர்த்தாவின் தருமகாரியம் நேர்ந்தபோது தானும் அவனைப் போலவே தருமத்தில் ஊக்கத்துடன் இருக்கவேண்டும். தன் விஷயமான காரியம் நேர்ந்தபோது சோம்பலைவிட்டு அவன் உதவிக்காக முழுமுயற்சியையும் செய்யவேண்டும். கற்புள்ளவள் தர்மார்த்தங்கள் இரண்டிலும் எப்பொழுதும் தானே பாரத்தை வகிப்பவளா யிருக்கவேண்டும். கலவிக் காலத்தில் கணவன் உள்ளக் கருத்தை யறிந்து அதற்குத் தக்கபடி அலங்காரங்களைச் செய்துகொண்டு புன்னகையோடு முகமலர்ச்சியுள்ளவளாய் இன்சொற்களினுல் கணவனை மகிழ்விக்க வேண்டும். மாற்ருள் (சக்களத்தி) விஷயமாகக் கணவனுக்கு விரோதமாகக் கடுஞ்சொற்களைச் சொல்லலாகாது.

கணவனுக்குப் பிறகு மற்றவர்கள் போஜனத்தைக் கவனித்துப் பார்க்கவேண்டும். வேலைக்காரர்களுக்கும், வேலைக்காரிகளுக்கும், இடபங்களுக்கும், சண்டாளர்களுக்கும், நாய்களுக்கும், திக்கற்றவர்களுக்கும், அசக்தர்களுக்கும், பிச்சைக்காரர்களுக்கும், அன்னத்தையும் பிட்சையையும் ஆதரவுடன் கொடுத்து தன் கணவனுடைய தருமத்தை வளர்க்க வேண்டும். கணவன் கோபித்தாலும் பொருளில்

லாதவனுயிருந்தாலும், சக்தி யற்றவனுயிருந்தாலும் அவனை உபசரிக்க வேண்டும். எப்படிச் செய்தால் கணவன் கவலையற்று களிப்புற்றிருப்பானே அப்படிச் செய்ய வேண்டும்.

குடும்ப காரியத்திற்காகவும், வியவகாரியத்திற்காகவும், பொருள் சேர்ப்பதற்காகவும் நாயகனுல் அழைக்கப்படும்போது அவனுக்கு உதவிக்காக இனிமையும் அனுகூலமாகப் பேச வேண்டும். நாயகன் தருமத்தில் அன்பு குறைந்திருந்தாலும் இதத்தைச் சொல்ல வேண்டும். பிறரிடத்தில் இரகஸ்யமான விஷயங்களைச் சொல்வதையும் கலகத்தையும் விடவேண்டும். வெளியிற் பார்ப்பது, கவனிப்பின்மை, நியாயமான காரியங்களில் வெட்கப்படுவது, கோள் சொல்லுவது, மிகுதியாகப் புசிப்பது, பகலில் தூங்குவது முதலியவற்றை விட வேண்டும். கற்புள்ளவள் பிள்ளைகளோடுங்கூட ஏகாந்தத்தில் உட்காரலாகாது. ஏதாவது ஒரு பொருளை வைத்து வைக்கும்படி கணவன் கொடுத்தால் அப்பொருளை அடைக்கலம் வைத்ததைப் போலக் காப்பாற்றவேண்டும். மறந்துபோன பொருளையும் தன் சுத்தத்தினுல் திருப்பிக் கொடுக்க வேண்டும். கணவனுல் கொடுக்கப்பட்டது எதுவாகிலும் அதைப்பெற்று மகிழவேண்டும். நாயகனுக்கு அதிகமாகக் கட்டளையிடுவதும், அதிகப் பொருமையும், தூரத்தில் விடவேண்டும். பத்தினியானவள் எப்போதும் குழந்தையைப் போலவும் கிழவனைப் போலவும் கணவனை அனுசரித்திருக்க வேண்டும். எல்லா தேவர்களுக்குந்தேவரே! எப்போதும் இந்த

விரதம் தான் மனைவி செய்யவேண்டும். மகா தேவரே! இந்த பதிவ்ரதா தருமத்தைச் சுருக்கமாகச் சொன்னேன். எவளுக்குக் கணவனைக் காட்டிலும் தன்னுடைய போகத்திலும் ஐசுவரியத்திலும் சௌக்கியத்திலும் அதிக விருப்பமில்லையோ, அவள் தான் பெண்களுக்குள் பதிவிரதை. பெண்களுக்கு கணவனே தெய்வம்; கணவனே சுற்றம்; கணவனே தஞ்சம். பெண்களுக்கு கணவனைப்போன்ற கதி மற்றொன்றை நான் அறியவில்லை.

பிரபுவே! ஜன்மங்களுள் பெண்ஜன்மம் சிறந்த தென்று யான் நினைப்பது, புருடன் தவம் யாகம் முதலிய பெரிய காரியங்களைச் செய்து உடல் வருந்தி அடையும் பலன்கள் எல்லாவற்றையும் பெண்கள் பதிக்குப்பணிவிடை புரிவதால் எளிதில் அடைகிறார்கள். கணவனுள்ள பெண்ணுக்கு கணவனுக்கு அனுகூலஞ் செய்வதனாலேயே எல்லா சுகமும் உண்டாகிறது. பெண்ணுக்கு இவ்வகையாகத் தருமம் பூரணமாகி விடுகிறது; தேவரீர் பாருங்கள். பாவத்தினால் மதிகெட்ட பெண்கள் இதைவிட்டு மாறிப்போகின்றனர். பெண்ணுக்குத் தவமும் தானமும் கணவனுக்கு உட்பட்டிருப்பதுதான். அழகு குலம் புகழ் ஒளி இவை யெல்லாம் கணவனைப்பற்றியவை. இத்தகைய நியமமும் ஆசாரமும் உள்ள பெண்கள் தம் ஒழுக்கத்தினாலேயே சிறந்தவர்களாகிறார்கள்; நல்ல செய்கைகளைச் செய்தவள் தன் கணவனுடன் கூடவே புண்ணியலோகங்களுக்குச் செல்வாள். கணவன் கிழவனோ, குரூபியோ, அருவருக்கத்தக்கவனோ, பொருளுள்ளவனோ, இல்லாத

வனே எப்படியிருந்தாலும் அவனே பெண்களுக்குச் சிறந்த ஆபரணம். செல்வமும் அழகும் உள்ளவனு யிருந்தாலும் இல்லாதவனு யிருந்தாலும் கணவனை உபசரிப்பவள்தான் கற்புள்ளவள். அவளே பத்தினி களிற் சிறந்தவள். தரித்திரனும் குரூபியும் அறிவில் லாதவனும் குஷ்டரோகியுமான கணவனையும் உப சரிக்கும் பெண் அழிவில்லாத புண்ணியலோகங்களை யடைவாள். இப்படி நடந்துகொண்டிருப்பவள் கணவன் இறப்பானுயின் அவனுடன் தானும் மரண மடையவாவது வேண்டும்; திரும்பவும் தவஞ்செய்ய வாவது வேண்டும். இவ்வாறு நான் சொன்னேன். பெண்கள் பலவகையாகக் கூறப்படுகின்றனர். தேவர் தானவர் கந்தருவர் மனிதர் என்று அனேக வகுப்புகளாகப் பெண்களிருக்கின்றனர். அவர்கள் எல்லாரும் நல்லொழுக்கமும் சிறந்த ஆசாரமும் உள்ளவர்களுமாகலாம். திரிபுராந்தகரே! தீனதயா ளுவே! பெண்களுக்கு எது நல்ல தருமம் என்பதைச் சொல்வேன். அவர்கள் அசுரர்களாகவும், பிசாசர் களாகவும் அரக்கர்களாகவும் இருக்கின்றனர். அவர்களின் ஒழுக்கம் எல்லாவற்றையும் உலகத்திற் காகச் சொல்லுகிறேன்; கேட்கவேண்டும்.

எண்ணத்தில் கெடுதலுள்ளவர்களாகி விருப்பு வெறுப்பு மேற்கொண்ட பெண்களும் நியாய மாகவோ அநியாயமாகவோ கணவர்களுக்கு உப சாரங்களைச் செய்யவே செய்கின்றனர். தம் தருமத் தில் சிரத்தையில்லாமல் எவ்வகையினுலாவது கண வர்களைத் தூஷிக்கின்றனர். எப்போதும் விஷயங் களில் ஆசையதிகப்பட்டுக் கணவனுக்கு விரோத

மாகப் பேசுகின்றனர்; அப்படியே பொருள்களை யழிக்கின்றனர்; இதத்தை யார் சொன்னாலும் ஏற்றுக் கொள்வதில்லை. தங்கள் புத்தியைக்கொண்டு எவ்வகையிலாவது ஜீவிக்கின்றனர். சிலகாலம் குணமுள்ளவர்கள் போலும் பதிவிரதா தருமத்திலிருப்பவர்கள் போலும் இருந்து திரும்பவும் கெட்ட ஒழுக்கத்தை யடைந்து பாவிகளாகிறார்கள். வரம்பில் அடங்காமலும் நியமமில்லாமல் பல உடைகளைத் தரித்தும் திருப்தியில்லாமல் பொருளாசை கொண்டு அதிகப் பொறாமையும் கோபமும் உள்ளவர்களாகி, வேண்டினவர்களைப் பகைத்தும், காமசுகங்களையே முதன்மையாக விருப்பியும், பெரும்பாலும் பொய் சொல்லிக்கொண்டும் பெரியோர்களை எதிர்த்தும், மற்று மிவ்வகை நடைகளோடுமிருக்கும் பெண்கள் அசுரத்தன்மையுள்ளவர்கள். மற்றும்சிலர்எப்போதும் தீங்குகளையே செய்துகொண்டும், கலகத்தையே விரும்பிக்கொண்டும், கொடியவரும், கொடுஞ் சொற்சொல்லுகிறவரும், அருவருப்பும் நாணமும் அற்றவரும், அன்பில்லாதவரும், கணவர்கள்மேலும் புத்திரர்கள்மேலும் சுற்றத்தார்மேலும் கோபிப்பவரும், பயங்கரரும், மாமிசத்தை விரும்புகிறவருமா யிருந்து கொண்டும், எக்காலத்தும் சிரித்துக்கொண்டாவது அழுதுகொண்டாவது இருக்கின்றனர். எவ்வகையிலாயினும் கணவனை விட்டுக் கெட்ட வழியில் வியபிசாரஞ்செய்கின்றனர். தேவரே! சுற்றத்தாரால் பயமுறுத்தப்பட்டுத்தான் வீட்டுக்காரியங்களைச் செய்வது. அதனாலேயே தம் கரியங்களை விட்டுவிடுவதுமுண்டு. அப்படியே தற்கொலை என்னும்

கொடுமையைச் செய்துகொள்வர்; சந்தேகமில்லை. தயையும் அன்பும் இல்லாதவர்களாகிக் குடும்பகாரியத்தைக் கெடுப்பர். தருமத்திற்கும் பொருளிற்கும் விலக்கான கொடுஞ் செய்கைகளை எப்போதுஞ் செய்வர். அனர்த்த காரியங்களில் தேர்ச்சியுள்ளவரும் பிற உயிர்களில் தயையற்றவரும் பாவிகளும் மற்றும் இவ்வகையொழுக்கமுள்ளவருமான பெண்கள் பிசாசத்தன்மையுள்ளவர். மற்றும் சில அறிவில்லாதவர்கள் வெட்கங்கெட்டு அழுதுகொண்டும், ஆசாரமில்லாமலும், உடம்பில் அழுக்கைப் பூசிக்கொண்டும், மதுமாமிசங்களில் மிக்க ஆசைகொண்டும், பொய் சொல்லிக்கொண்டும், சிரித்துக் கொண்டும், புலம்பிக்கொண்டுமிருக்கின்றனர்.

சமாதானப்படுத்த முடியாத பெரும் கோபக்காரிகளும், இடைவிடாமல் தூங்குவதே காரியமாக இருப்பவரும், தாமத குணமிகுந்தவரும், அறிவு கெட்டவரும், சுருசுருப்பற்றவரும், பெருவயிறுள்ளவருமாகிப் பிறரால் செய்யப்பட்ட பலவகை உணவுகளை மிகுந்த அவசரத்துடன் உண்பர்; அவர்கள் மிக்க மன்மததாபம் கொண்டு, குணமும் அழகும் இளமைப்பருவமும் அன்புமுள்ளவனுமான சிறந்த கணவனைவிட்டு மற்றொருவனோடேயே எவ்வகையாலாவது சேர்வர். அவர்கள் வெட்கமில்லாதவர்கள். தருமத்தில் நம்பிக்கை யில்லாதவர்கள். யாரிடத்திலும் பகையுள்ளவர்கள். இப்படிப்பட்ட நடையுள்ள பெண்கள் இராக்கதத் தன்மையர்கள். இப்படிப்பட்டவர் எல்லாருக்கும் பரலோகத்தில் பேரின்பமில்லை. நரகத்திலிருந்து விடுபட்டபின்ன

ரும் அவர்களுக்கு மானிடப்பிறப்பு கிடைப்பது அரிது. அப்படிப் பிறந்தாலும் தங்கள் பாவத்திற் குத் தக்கவாறு தாங்கக்கூடாத அதிகத் துயரத்தை அனுபவிப்பர் ; ஏழைகளும் பலவகை துன்பப்படு கிறவர்களும் குரூபிகளும் பிறரால் இகழப்படுகிற வரும் விதவைகளும் பாக்கியமற்றவர்களும் மற்றும் இவ்வகைத் துன்பமுள்ளவர்களுமாவார். இத்த கைய துற்குணமுள்ளவள் தன் கணவனுக்கும் தன் குலத்திற்கும் தன் பாவத்தைச் சேர்த்துத் தானும் நூருயிர வருடம் நரகத்திலிருப்பாள்'' என்று இன் னும் இவை முதலிய பெண்தருமங்களை யெல்லாம் உமா தேவியார் கூறி "தேவரே! இவ்வாறு எல்லா வற்றிலும் சிறந்த பெண்தருமத்தை உமக்குச் சொன் னேன். தேவசிரேட்டரே ! நான் தங்களுடைய விருப்பத்தைச் செய்யக் கருதி அன்புகொண்டு உமது முன்னிலையில் சொன்னதற்காகத் தேவரீர் மன்னிக்க வேண்டும்'' என்றனர்.

இன்னணம் பேசி நாணிநின்ற பரமேஸ்வரிக்கு மகிழ்ச்சியுண்டாகும்படி வாக்கினுல் மகாதேவர் சிலாகித்தனர். இருடிகளும் இமையவர்களும் இயக் கர்களும் ஆயிரக்கணக்கான மாதர்களும் சங்கரி யைத் தலைவணங்கித் துதித்தனர். பிறகு சிவபெரு மான் உமாதேவியை நோக்கி ''நம்முடைய சம்வாத மாகிய இதனைப் படிப்பவனும் கேட்பவனும் இகலோகத்தில் செல்வம் ஆயுள் சுகம் இவைகளை யடைந்து சுவர்க்க லோகத்திலும் இன்பத்தை அனுபவிப்பான்'' என்று திருவருள் புரிந்தனர்.

# பெண்ணுக்குரிய பெருமை

பெண் மக்கள் கண்ணுங் கருத்துமாகக் காப்பாற்றத் தக்கது கற்பொழுக்க மொன்றேபாம். உயிரையிழக்க நேரினும் கற்பை யிழக்கப்படாது; பேதமை என்னுங் குணத்தை மேற்கொண்டு ஒழுகுதல் வேண்டும். பேதமை என்பது தமக்கு எல்லாந் தெரிந்திருந்தும் கணவன் எதிரில் ஒன்றும் தெரியாதது போலப் பெண்கள் அடக்கத்துடனிருத்தலாம்; "பேதமை யென்பது மாதர்க் கணிகலம்" என்ற பொன்மொழியையும் உன்னுக. பெண்கள் கணவனிடத்து மறந்தும் பொய் பேசக்கூடாது; கணவனுக்குத் தெரியாமல் சீட்டுக் கட்டுவது; கணவனுக்குத் தெரியாமல் பிறரிடம் கடன் கொடுப்பது; கணவன் வெளியே போயிருக்கும் சமயம் பார்த்து அயல் பெண்களுடன் போய் ஜவுளி முதலியன வாங்குவது; இவைகள் அருவருக்கத்தக்கனவாம். கணவனிடம் அடிக்கடி "இந்த நகை வேண்டும், அந்த நகை வேண்டும், ஜரிகை சீலை வேண்டும்" என்று தொந்தரவு செய்து, அவன் மனத்திற்கு துன்பத்தை உண்டாக்கப்படாது. "காவல் தானே பாவையர்க்கழகு" என்றபடி பெண்கள் தக்கதோர் துணையின்றி வெளியே செல்லப்படாது. தங்கள் உடம்பையும் கூந்தலையும் உடைகளையும் பரிசுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும். நாயகன்

வியாபாரம், உத்தியோகம், விவசாயம் இவைகளைப் பார்க்க வெளியே சென்ற பிறகு, வீணுரை பேசும் பெண்களையெல்லாம் அழைத்து கூட்டம் போட்டுக் கொண்டு "எதிர் வீட்டு ஏகவல்லி மாமியார் பொல்லாதவள்; அடுத்த வீட்டு அம்புஜத்தின் நாத்தி வாயாடி; பக்கத்து வீட்டு பங்கஜம் ரொம்ப ரொம்பப் பெருமை படைத்துக் கொள்ளுகிருள்; அவளை ஒரு நாளைக்குப் பேசிக்கொள்ளுகிறேன்" என்றெல்லாம் பயனற்ற வார்த்தைகளைப் பேசி வீண் காலம் போக்கப்படாது; கல்யாண முதலிய விசேடங்களுக்குப் போனால், அங்கு யாராவது உயர்ந்த சீலையை உடுத்திக் கொண்டிருந்தால், அவர்களைப் பார்த்து, "அம்மா! இந்த சீலை நன்ருயிருக்கிறது; என்ன விலை? எந்தக் கடையிலெடுத்தீர்கள்?" என்று கேட்கப்படாது. ஓய்வாக இருக்கும் போதெல்லாம், சந்திரமதி, தமயந்தி, நளாயனி, சாவித்திரி முதலிய கற்புடைக் காரிகையரது இனிய சரித்திரங்களைப் படிக்க வேண்டும்; படித்து அம்மாதரசிகளின் ஒழுக்கத்தை நன்ருக மனதில் பதிய வைத்துக்கொண்டு சிந்திக்க வேண்டும்; சிந்தித்து அதன்படி நடக்க முயல வேண்டும்; அக்கற்பரசிகளைப் போல் தாமும் உலகம் போற்றும் நிலையைப் பெறவேண்டும் என்று ஆசைப்படவேண்டும்; தம்முடைய கணவர் செல்வமுடையவராயிருக்கினும், அவசியமற்ற செலவுகளைச் செய்யாது சிக்கனமாகவே செலவு செய்ய வேண்டும்; தம்முடைய கணவர் பெரிய அதிகாரி, பெரிய தனவந்தர் என்று செருக்குற்று தலைநிமிர்ந்து நடக்கப்படாது; நம்மைவிடத் தாழ்ந்த நிலையிலிருக்

கும் பெண்களைக் கண்டு பரிதாபமுற்று தம்மால் ஆன உதவியைச் செய்து, அவர்களிடம் பாலுந் தேனும் போல் மொழிக்கு மொழி தித்திக்கப் பேச வேண்டும். அவர்களுடைய துன்பத்தை இனிய மொழிகளால் மாற்ற வேண்டும்; அல்ப விஷயங்களை யெல்லாம் பெரிதாக எண்ணி எண்ணி எந்நேரமும் பெருங்கவலையடையப்படாது; தமக்குக்கிடைத்தவற்றைக் கொண்டு திருப்தியடைய வேண்டும்; தம்மை விட தாழ்ந்தவரைக் கண்டு "நமக்கு இறைவன் இவ்வளவாவது கொடுத்தானே" என்று மகிழவேண்டும்; 'எதிர் வீட்டுக்காரி வைர அட்டிகை போட்டுக் கொண்டிருக்கிருளே; நமக்கு இல்லையே' என்று ஏங்கப்படாது; பதினைந்து ரூபாய் சம்பளக்காரன் மனைவி மாதத்திற்கு ஒரு புடவை வாங்குகிருளே? —என்னென்வோ நகை போட்டுக் கொண்டிருக்கிருளே? நீ நூற்றைம்பது ரூபாய் வாங்குகின்றனையே? உன்னுடைய மனைவியாகிய எனக்கு ஒன்றுமில்லையே? கண்டவனையெல்லாம் வீட்டிற்கு சாப்பாட்டிற்கு அழைத்து வருகிருயே? பணக்காரர் வீட்டில் எச்சில் கையில் கூடக் காக்கை ஓட்டுவதில்லையே? உனக்கு மட்டுமென்ன இவ்வளவு தாராளம்; காலமெல்லாம் இப்படியே ஏமாந்த சோணகிரியாகப் பிழைத்தால் எப்படி? இந்த மாதம் எப்படியாவது கடன்பட்டாவது நான் கேட்ட நகையை வாங்கிக் கொடுத்தால்தான் விடுவேன்; இல்லையேல் பார் என்ன செய்கிறேன்" என்று கணவனிடம் தகுதியற்றவும்; வெறுக்கத்தக்கவுமான வார்த்தையைப் பேசப்படாது. நாயகனுக்குப் பிரிய

மில்லாததைச் செய்யக்கூடாது. கணவன் எழுந் திருக்குமுன் எழுந்து, காலைக் கடன்களை முடித்து, நெற்றியை விபூதி குங்குமங்களால் அலங்கரித்து நாயகனைத் துயிலுணர்த்த வேண்டும்; நாடகம், வேடிக்கை முதலியவற்றை ஒருபோதும் பார்க்கப் படாது; நாயகனுடன் திருவாலயஞ்சென்று இறை வனை வழிபாடு செய்ய வேண்டும்; உரலிலும், அம்மி யிலும் வாசற்படியிலும் உட்காரப்படாது. ஆடவர் ஒருவரும் இல்லையென்று தெருத்திண்ணைமேல் உட் கார்ந்து தெரு வேடிக்கைப் பார்க்கப்படாது; மாடி யின் மேலிருந்தும் பலகணிக் கதவுகளைத் திறந்தும், தெருவில் போகின்ற ஆண் மக்களைப் பார்க்கப் படாது. அவர்கள் பார்க்கும்படியாகவும் நிற்கப் படாது. உபயோகமில்லாத சாமான் மலிவாக இருந் தாலும் அதனை வாங்கப்படாது. கணவனைக் கடன் காரனாக்கப்படாது. "கடன்படாது கால் வயிறு கஞ்சி குடித்தாலும் அதுவே சிறந்த வாழ்வு" என்று கருதி, கடன் வாங்காமல் இருப்பதைக்கொண்டு சமர்த்தாகக் குடித்தனஞ் செய்ய வேண்டும்; "நாளல்லா நாள்பூத்த நன்மலரும் போலுமே. ஆளில்லா மங்கைக்கழகு" என்றபடி கணவன் இல் லாத போது தங்களை அலங்கரித்துக் கொள்ளப் படாது; கணவன் அனுமதியின்றியும் தக்க துணை யின்றியும் தேர் திருவிழாக்களுக்குப் போகப்படாது; அறிவைக்கெடுக்கும் அசட்டுப் புத்தகங்களை படிக் கப்படாது; தங்களுடைய குழந்தைகளுக்கு அவ்வப் போது நல்ல நீதிகளை நன்றாக மனதிற்படும்படி உப தேசிக்க வேண்டும்.

இல்லதென் இல்லவள் மாண்பானல் உள்ளதென்
இல்லவள் மாணுக் கடை.

என்ற பொய்யாமொழிப்படி, தங்கள் அரும்பெருங் குணத்தால் வீட்டில் ஒன்றுமில்லையாயினும், எல்லா மிருக்கின்றதென நாயகனுக்கு மகிழ்ச்சியை விளை விக்க வேண்டும்; கணவன் பிறருடன் பேசும்போது கதவின் பிறகேயிருந்து ஒற்றுக் கேட்கப்படாது; நாய கனுக்கு ஆயுள், செல்வம், புகழ் முதலியவை மென் மேலும் வளருமாறு கடவுளை வணங்குதல் வேண்டும்; தேவாரம், திருவாசகம், திருப்புகழ், திருவருட்பா முதலிய அருள் நூல்களை அந்தி வேளை யில் உளங்கசிந்து ஓத வேண்டும்; தேனும் பாலும் போல் இனிமையாகப் பேச வேண்டும். எக் காரணத்தை முன்னிட்டும் கர்ண கடூரமான கடு மொழிகளைப் பேசப்படாது; அடித்தாலும் நாயகனே கதி; அணைத்தாலும் நாயகனே கதி என்று கண வனுக்கு அடங்கி நடத்தல் வேண்டும். இத்த கைய குணங்களை யணிகலங்களாகக் கொண்ட உத்தமப் பெண்கள் பண்டைக்காலத்தில் பலர் தோன்றி நம்நாட்டை அலங்கரித்திருந்தனர்; அவற் றில் ஒன்றை வரைகுதும்.

வடஇந்தியாவில் கி.பி. 1517-ம் ஆண்டில் நிராடபுரியில் இராஜ வம்சத்தில் அரதனசிங்கு என் னும் ஒரு மன்னனிருந்தான். அவனது தவத்தின் பயனுக மீராபாய் என்னும் ஒரு பெண்மகவு தோன்றி யது. அக்குழந்தை காண்பார் கண்ணைக் கவருங் கட்டழகுடன் வளர்ந்தது. "விளையும் பயிர் முளையி லேயே தெரியும்" என்றபடி அப்பெண் குழந்தைக்கு

இளமையிலிருந்தே கடவுட்பக்தி வளர்ந்தோங்கியது. அக்குழந்தையின் மனக்கோயிலில் கண்ணபிரான் குடிபுகுந்தனர். கண்ணு! கண்ணு! என்று கூவி யழைக்கும்; பொம்மை, மண் சொப்பு, ஏழாங்கல் முதலிய எல்லா விளையாட்டுக் கருவிகளும் கிருஷ்ண வடிவமாகவே அக்குழந்தைக்கு விளங்கியது. ஐந் தாவது ஆண்டிற் பள்ளியிற் சென்று படித்து நூல றிவு பெற்ருர். அம்மையாருக்கு 12-வது ஆண்டு பிறந்து வயது வளர வளர பகவத் பக்தியும், அடக்க மும் வளர்ந்தன. "இறைவனை காணு நாள் என்ருே?" என்று ஏங்குவார். கண்ணபிரானைக் காண்பதற்கு மிகவும் விரைந்து முயன்று வந்தார். கண்ணு! மணி வண்ணு! ஆயர் குலக் கொழுந்தே என்று தொழு வார்; "ஆவியீடேறும் வழியைச் சொல்லமாட் டாயோ" என்று அழுவார்; அன்பினுல் பாடிப்பாடி மூர்ச்சித்து விழுவார்; அடியார்களைக் கண்டால் விரைந்து எழுவார்; தன்வச மழிந்து பரவசமுற்று இன்பவடிவமாகிய இனிய பாடல்களைப் புதிது புதி தாகப் பாடுவார்; இறைவன் அருட்குணங்களை நாடு வார்; அப்பன் எங்கே எங்கே என்று தேடுவார்; விரைந்து ஓடுவார்.

அம்மையார் மங்கைப் பருவமடைந்தார்; திரு மகளைப்போல் தெய்வவனப்புடன் திகழ்ந்தார்; அவர் முகமண்டலத்தில் அருள் ஒளி வீசிற்று; மணப்பருவ மடைந்தார்; தாய் தந்தைகள் திருமணத்தைப் பற்றி ஆலோசித்தார்கள். அதுகண்ட மீராபாய் தாயா ரைத் தனியே வணங்கி "அம்மா! என்மனம் கண்ண பிரானிடம் பொருந்தியுளது; சாமான்யமான மனிதர்

களிடம் பற்றவில்லை; என் உடலும் உள்ளமும் கண்ணனுக்கே உரியவாம்; கண்ணன் கழலிணையே கருதுங்கருத்துடையேன்; அவருடைய திருவடித் தொண்டைப் புரிந்து காலங்கழிப்பேன்; ஆதலால், அடியேனுக்கு கல்யாணஞ் செய்யாதிருக்க வேண்டுகிறேன்" என்ருர். தாயார் இவ்வசனங்களைக் கேட்டு, சிறிது சினமடைந்து "குழந்தாய்! சிறு பெண்ணுகிய உனக்குப் பெரிய பேச்சு எதற்கு? சிறுபிள்ளைத்தனமாகப் பேசாதே! பெரியவர்கள் எதைச் செய்கிருர்களோ, அதைச் செய்துகொள்; அதுதான் உன் கடமை; சும்மா போ" என்று அதட்டி விட்டாள். அம்மையார் ஒன்றுமே பேசவில்லை. "இறைவன் திருவுளம்போல் நடைபெறுக" என்று எண்ணி எவ்வேளையும் இறைவனைச் சிந்தித்து வந்திருந்தார்.

தாய் தந்தையர் மகளுக்குத் தக்க வரனைத் தேடினுர்கள். பிறகு மீவார் தேசத்தரசனுகிய சாங்க மன்னனது மைந்தனுகிய போஜ மன்னனுக்கும் மீராபாயம்மையாருக்கும் சிறப்பாகத் திருமணம் நடந்தது. அம்மையார் அரசமாதேவியாக விளங்கினுர்; கணவனுேடு கலந்து கண்ணன் மீது கவிகள் பல பாடினுர்; பட்டாடை யுடுப்பதையும், பொன்னுபரணங்களை யணிவதையும் வெறுத்தார்; தவப் பெண்கள் போல் மரவுரியையே தரிப்பார்; தரைமேல் மான் தோலின்மீது படுப்பார்; உலக வாழ்வு அவருக்கு வெறுப்பாகத் தோன்றியது; தனக்கிசைந்த தோழியரைக் கூட்டித் தாம் பாடிய கீதங்களைச் சொல்லிக் கொடுத்தார்; அவர்களுடன் சேர்ந்து பாடுவார்; அவருடைய அன்பு வளர் பிறை மதிபோல் வளர்ந்

தோங்கியது; அரண்மனை அவருக்குச் சிறைச்சாலை யாக இருந்தது; கண்ணபிரானுடைய திருக்கோயி லுக்குப் போவார்; அங்கு பெண்மக்களுடன் மன முருகிப் பாடுவார்; நெடுநேரம் வரை தன்னை மறந்து நிற்பார்; பின் அரண்மனைக்கு வந்து கணவனுக்கு வேண்டியவற்றைச் செய்வார்; நாள்தோறும் கோயி லுக்குப் போய் என்புருகப் பாடியாடுவார்; இவரு டைய தேனினுமினிய பாடலைக் கேட்க மதுவை நாடிவரும் வண்டினங்களைப்போல் திரளான கூட் டங்கள் கூடின; நெடுந்தூரத்திலிருந்து கூட்டங் கூட்டமாக அம்மையார் பாடலைக் கேட்டு ஜனங் கள் வந்துகொண்டே யிருந்தார்கள்; அம்மையார் புதிது புதிதாக அருள்மயமாக நின்று பாடுவார்கள்; அப்பாடல்கள் அத்தனையும் சொல்லழகும், பொரு ளழகும் உடையனவாயிருந்தன. அம்மையார் பாட லைக் கேட்டு கல்மனமுடையாரும் கசிந்துருகிக் கதறு வார்கள். கல்லுமுருகும்; ஜனங்கள் அனைவரும் அம்மையாரை பெண் தெய்வமாக நினைந்து வணங்கி வாயார வாழ்த்தினர்கள்; பலாப்பழத்தை ஈக்கள் மொய்ப்பதுபோல் அன்பர்கள் அம்மை யாரைப் பக்தியுடன் சூழ்ந்திருந்தார்கள்; அவர்களும் உலக இன்பத்தை வெறுத்து அருள் நெறியை நாடி நின்றார்கள்.

அம்மையாருடைய புகழ் உலகெங்கும் பரவி யது; அவருடைய அருளொளி வீசிற்று; அக்காலத் தில் அரசர் பெருமானாக இருந்து அரசாண்ட அக்பர் சக்கரவர்த்தி செவிக்கும் எட்டியது; அக்பர் அம்மை யாரைச் சேவிக்கவும் அவருடைய பாடல்களையுங்

கேட்க விரும்பினுர்; "ஒரு அரசனது மனைவியை நாம் எப்படிக் காண்பது? அதிலும் இந்து இராணியை துருக்கிச் சக்கரவத்தியாகிய நாம் காண்பது அரிதாயிற்றே? உலகம் பழிக்குமே? உலகம் புகழும் உத்தமியைத் தெரிசிப்பது எவ்வாறு?" என்று பலமுறைச் சிந்திப்பார். தன் அரண்மனைச் சங்கீத வித்வானுகிய தான்சென் என்பவனிடம் தமது கருத்தைக் கூறி அவ்வெண்ணம் நிறைவேறும் வழியைக் கேட்டார். தான்சென், "மன்னர் மன்னு! சந்நியாச வேடத்துடன் தாங்கள் சென்று தெரிசிக்கலாம்; சந்நியாச வேடம் எங்கும் யாரையும் பார்க்க இடங் கொடுத்தருளும்; தங்களையும் ஒருவரும் கண்டு பிடிக்க மாட்டார்கள்" என்ருன. அக்பர் அவனுடன் சந்நியாசவேடந் தாங்கி வந்தார். அம்மையார் வழிபடுங் கோயிலுக்கு வந்தார்; அம்மையார் பாடலைக் கேட்டார்; அவருடைய மனம் உருகிற்று; ஆனந்தக் கண்ணீர் வடித்தார்; உரோமஞ் சிலிர்த்தார்; உடனே அம்மையாருடைய திருவடித் தாமரைகளின் மேல் அடியற்ற மரம்போல் விழுந்து வணங்கி, "பக்தியின் மிக்க உத்தமியே! என்னையாளுடைய அன்னையே! அடியேனுடைய ஆவியீடேறுமாறு உபதேசிக்க வேண்டும்; மோட்ச உலகத்திற்கு வழி காட்ட வேண்டும்" என்று வேண்டி நின்ருர். அம்மையார் அவருடைய அன்பின் பெருக்கைக் கண்டு மகிழ்ந்து, அருமையான ஞானமொழிகளால் இறைவன் திருவருள் நெறியை இனிமையாக எடுத்து விளக்கிக் காட்டினுர். அக்பர் புளகிதமுற்று, பரவசமடைந்து, விலை உயர்ந்த ஒரு பெரும் வைர கண்ட

சரத்தை அம்மையார் பாதத்தில் காணிக்கையாக வைத்து வணங்கினர். அதுகண்ட அம்மையார் அதிசயமுற்று, 'துறவிக்கு இத்தகைய சிறந்த ஆபரணம் ஏது? இது எனக்கு எதற்கு? இறைவன் திருவடிப் பக்திக்கு இடையூறல்லவா?' என்று வியந்து, "ஏ! சந்நியாசியே! உமக்கு இது எப்படி கிடைத்தது? நல்வழியிற் கிடைத்ததா?" என்று வினவினர். அக்பர், "அம்மணீ! அடியேன் யமுனை நதியில் நீராடும்போது இந்நகை எனக்குக் கிடைத்தது; இதனை உமது தெய்வத்திற்கு நிவேதனப் பொருளாகத் தந்தேன். ஏற்றுக்கொண்டருள்வீர்" என்ருர். அம்மையார் அதனை எடுத்து கிருஷ்ண விக்கிரகத்தின் கழுத்தில் தொங்கவிட்டார். அக்பர் அச்செய்கையைக் கண்டு வியந்து தன் நகருக்கேகினர்.

அம்மையாருடைய கணவனுகிய போஜனுக்கு அம்மையார், கோயிலில் கூட்டங்கள் மத்தியில் ஆடுவதும் பாடுவதுமாக இருப்பது வெறுப்பாக இருந்தது; தன் மனைவியைக் கண்டிக்க வேண்டுமென்று எண்ணி இருந்தான்; அச்சமயத்தில் வைரக்கண்ட சர விஷயம் அவன் காதிற்கு வந்தது; அதை அவன் வரவழைத்துப் பார்த்தான்; பத்துலட்ச ரூபாய் மதிப்புள்ளதாக இருந்தது; "இவ்வளவு விலையுயர்ந்ததைக் கொணர்ந்து பரிசளித்தவன் யார்?" என்று ஐயுற்ருன். அதைக் கண்ட ஓர் வியாபாரி அக்கண்ட சரத்தை அக்பருக்குத் தான் விற்றதாகக் கூறினன். மன்னன் கேட்டுத் தன் மனைவியைத் துருக்கன் கண்டு பேசினன் என்பதை மனம் பொறுக்கவில்லை; இந்த அவமானத்தை விடப் பெரிய அவமானம்

யாதுளது? "இத்தகைய பத்தினியை உயிருடன் வைத்திருக்கப்படாது" என்று வெறுப்புற்றான். உடனே அம்மையாரைப் பிடித்து சிறையிலடைத் தான்; அம்மையார் சிறைச்சாலையிலும் கண்ணனைப் பாடிக்கொண்டு, சிறிதுகூட நெஞ்சங் கலங்காமலும், கணவனை வெறுக்காமலும் இன்புற்று இருந்தார். பெரியோர்களுக்கு இன்பமும் துன்பமும் ஒன்றே யல்லவா?

அரசன் அம்மையார் சிறைச்சாலையிலும் ஆடல் பாடலுடன் கண்ணனைப்பாடி மகிழ்ந்திருப்பது கண்டு உளம் சகிக்காது அம்மையாருக்கு விஷத் தைக் கொடுத்தான்; அம்மையார் அவ்விஷத்தை வாங்கி விஷத்தையுடைய அரவையே அணையாகக் கொண்ட அனந்த சயனனை துதித்து மனமகிழ்ச்சி யுடன் குடித்தார். அவ்விஷம் அவருக்கு அமிர்த மாக மாறியது. அரசன் அது கண்டு வியப்புற்று, ஒரு கொடிய விடப்பாம்பை தங்கப் பெட்டி யிலடைத்து, அம்மையாரிடங் கொண்டுபோய் "இதில் துளபமணி மாலை இருக்கின்றது" என்று சொல்லிக் கொடுத்தான். அம்மையார் துளபமாலை என்றவுடனே மிகவும் ஆவலுடன் வாங்கி, பெட்டி யைத் திறந்தார்; அதிலிருந்த பாம்பு படமெடுத்துச் சீறிவந்து கடித்தது; அம்மையார் அதைக் கண்டு "அப்பனுடைய சயனமென்று" மகிழ்ந்து அப் பாம்பை எடுத்துக் கழுத்தில் மாட்டிக்கொண்டு, "அரவணைச் செல்வ! அறிதுயிலமர்ந்த அண்ணலே!" என்று ஆனந்தக்கூத்தாடினார். இவ்வற்புதச் செய லைக் கண்ட மன்னன் வியப்பும் அச்சமும் ஒருங்கே

யடைந்து திகைத்து நின்றான், "பாம்புக்கும் அஞ்சாத பாவையே! இன்னும், நீ உயிருடன் இராதே, மாய வித்தைகளைக் கற்றுக்கொண்டு எங்களை மயக்கு கின்றாய்; உன்னைக் காண எனக்கு விருப்பமில்லை; ஆதலால், நீ இறக்கக் கடவாய்" என்று கூறினான். அம்மையார் கணவனைப் பணிந்து, "அப்படியே தங்கள் விருப்பத்தை நிறைவேற்றுகிறேன்" என்றார்.

அம்மையார் நடுநிசியில் எழுந்தார். எங்கும்ஒரே இருள்; கண்ணனைக் கருத்திலிருத்திக் கொண்ட அவருக்கு சிறிதும் அச்சமென்பதே இல்லை; "கண்ணா! கண்ணா!" என்று பாடிக்கொண்டே சிறையை விட்டு நடந்தார்; பிரவாகமாக வெள்ள மோடும் ஆற்றங்கரைக்கு வந்தார்; ஈன உலகத்தின் துன்ப வாழ்வை வெறுத்தார்; "கண்ணா! நீ என்று மகலாது கண்துஞ்சும் நீருக்குள் உன்னுடன் கலந்தி ருக்க அடியேனும் வருகின்றேன்" என்று ஆற்றில் குதித்தார்; தண்ணீருக்குள் முழுகிய அம்மையாரை தண்ணீரால் கொல்லமுடியவில்லை; உடனே அம்மை யாரை கருமுகில் போன்ற ஒரு தெய்வ வடிவம் வந்து எடுத்து மேலே விடுத்து, "அம்மணீ! நீ பெண்மணி களுக்குள் கண்மணி போன்றவள்! உன்னால் அநே கர் நல்வழிப்பட வேண்டும்; இன்னும் சிலநாள் இவ் வுலகில் நீ தங்கியிருந்து மனிதர்களுடைய மருளை நீக்கி அருளையுண்டாக்கிப் பின்னர் நமது உலகத் திற்கு வருவாய்; அஞ்ஞானமாகிய இரவில் தூங்கு வோருக்கு ஞான ஒளியைக் காட்டித் தட்டி எழுப்பு வதற்கு விரைந்து செல்" என்று கூறி மறைந்தது. மீராபாய், கண்ணன் தனக்குச் செய்த திருவருளை

நாடி உளங்கசிந்து நடத்தார்; சூரியன் தோன்றினன். அம்மையார் ஆண்டவனைப் பாடிக்கொண்டே பிருந்தாவனத்தைத் தேடிச் சென்றார்; வழியில் எதிர்ப்பட்டவர்களையெல்லாம் வழி கேட்டுக்கொண்டே பிருந்தாவனஞ் சேர்ந்தார். அங்கிருந்து ஆண்டவனை அருட்கண்ணால் பார்த்துப் பரவசமடைந்து பாடினார். அப்பாடல்களைக் கேட்டுக் கல்லும்புல்லுங் கரைந்துருகின; பறவைகளும் மிருகங்களும் அசைவற்று நின்றன; திரளான ஜனங்கள் கூடினர்; அவர்கள் அம்மையாரைப் பணிந்து அவரது பாடலில் ஈடுபட்டு அருள்வழியில் நின்று ஆனந்தவாரிதியில் மூழ்கினார்கள். அம்மையார் பிருந்தாவனத்தில் இருந்த ரூபகோசனர் என்னும் மாதவரையடுத்து அவருடன் இனிது காலங்கழித்து வந்தார்.

மீராபாய் அம்மையாருடைய பாடல்கள் எங்கும் பரவின. ஒவ்வொரு கிராமத்திலும் அவர் பாடல் முழங்கிற்று; உலகெங்கும் அம்மையாரைப்பற்றியே பேச்சு நிகழ்ந்தது; போஜமன்னனது நகரமாகிய சித்தூரில் மக்களனைவரும் அம்மையார் பாடலை அன்புடன் பாடினார்கள். அப்பாடல்களின் முடிவில் மீராபாய் என்ற திருநாமம் அமைந்திருந்தது. நாள் செல்லச்செல்ல போஜமன்னன் தனது பத்தினியின் பக்தியையும், அவரது உறுதியான தவநிலையையும், அவரது பாடலின் பெருமையையும், அவரை உலகம் போற்றுவதையும் கண்டு, அவருக்குத் தான் இழைத்த இன்னலை நினைத்து வெட்கப்பட்டான்; தன் அறியாமையை எண்ணி எண்ணித் துக்கப்பட்

டான்; "நமது ஆட்சி நமது நாட்டில் மட்டுமே செல் லத்தக்கது; நமது மனைவியின் ஆட்சி உலகமுழுவ தும் சென்று மிளிர்கின்றன; நமது ஆட்சி உலக மக்க ளது புறவொழுக்கத்தை யொட்டியிருக்கின்றது; நமது மனைவியின் ஆட்சி மக்களது அகவொழுக் கத்தை யொட்டியிருக்கின்றது; நமது ஆட்சி அழியக் கூடியது; நமது மனைவியின் ஆட்சி என்றென்றும் நிலைத்துநிற்பதாகும்; ஆ! ஆ! நமது சித்தூரிலிருந்து திரள் திரளாக மக்கள் போய் நமது மனைவியை தெய்வமாதாக நினைத்து வழிபட்டு வருகிறார்கள்; உலக முழுவதுமே போற்றுகின்றது; நான் மட்டும் நமது மனைவியின் பெருமையை அறியாது பல இன்னல்களை விளைத்தேன்; என்னே என்பேதமை?" என்று வருந்தினான்.

ஜனங்கள், பூதலம் போற்றும் மாதரசியைத் துறத்திய அரசனுடைய கன்னெஞ்சை வெறுத்துப் பழித்தார்கள். அரசன் உலக நிந்தையைக் கேட்டு மிகவும் வருந்தினான்; "என்ன செய்வது" என்று பல நாள் சிந்தித்தான்; தானே நேரில் போய் மனைவி யைக் கண்டு அரண்மனைக்கு அழைத்துவந்து சமா தானஞ்செய்வது என்று தீர்மானித்தான். அரசன் ஒரு ஏழைச்சந்நியாசிபோல் வேடந்தாங்கி பிருந்தா வனஞ்சென்றான்; மீராபாயம்மையாரைக் கண்டு களித்தான்; அம்மையாருடைய தவவொழுக் கத்தையும் அவருடைய கடவுட் பக்தியையும் ஜனங் களுக்கு அவரிடமிருந்த மதிப்பையுங்கண்டு இரும்பூ துற்றான். கோயில்வாயிலில் நின்று அம்மையாரைப் பிச்சை கேட்டான்; அம்மையார் "ஐயா! நான் ஒரு

ஏழைப்பரதேசி; உனக்குத்தர என்னிடத்தில் ஒன்று மில்லை; உனக்கு ஆசீர்வாதம் வேண்டுமென்றால் இறைவன் திருவருள் துணைகொண்டு தருகிறேன்'' என்றார். அரசசந்நியாசி, ‘‘உம்மிடத்தில் ஒரு உதவியை நாடி வந்திருக்கிறேன்'' என்றான். அம்மையார், ‘‘என்ன உதவி'' என்றார். அரசன், ‘‘என்னை மன்னிக்கும் பேருதவியே'' என்று சொல்லிக் கொண்டே, சந்நியாசி வேடத்தை நீக்கினான். அம்மையார் கணவனைக் கண்டு எழுந்து பணிந்தார். அரசன், ‘‘அரண்மனைக்கு வரவேண்டு'' மென்றான். அம்மையார், கணவன் சொல்லை மறுக்கவில்லை; நாயகன் பிறகே நடந்தார்; அரண்மனையில் அரசனுடன் வந்து தவ வாழ்க்கையில் இருந்து இன்புற்றார். ஆறு மாதம் அரண்மனையிலும் ஆறுமாதம் பிருந்தாவனத்திலுமாக இருந்து இறைவனை வழிபட்டு வந்தார். அநேக அற்புதப் பாடல்களைப் பாடி உலகை இன்பமயமாகச் செய்தார். முடிவில் பூதவுடம்பை மறைத்து புகழுடம்பை நிலைநிறுத்தி கண்ணன் கழலிணை நிழலிற் கலந்தார்.

# பேராசை பெரு நஷ்டம்

"பேராசை யெனும் பிணியில் பிணிபட்
டோரா வினேயே னுழலத் தகுமோ"

ஓர் ஊரில் பாவகிருபணன் என்னும் எளிய பிராமணன் ஒருவன் இருந்தான்; அவன் மனத்தில் எப்போதும் ஆசையே குடிகொண்டிருந்தது; அதனுல் அவன் மனம் ஒருபோதும் சாந்தியை யடையவில்லே; புதையல் அகப்படுமா? என்று ஏக்கமிட்டு உலாவுவான்; தெருக்களில் உலாவும்போது ஏதாவது (மணிபர்ஸ்) கிடைக்குமா? என்றும், அதில் நிறையப் பணமிருக்க வேண்டுமென்றும் சிந்தித்து வருவான்; அவனுக்குப் பிச்சையெடுப்பது வேலே. மணலும் புழுதியும் நிறைந்த ஒரு பாழுஞ் சத்திரத்தில் படுத்துறங்குவான்; பேராசைப் பேய்பிடித்தவனுக்கு இரவில் தூக்கம் பிடிக்காதல்லவா? அந்தப் பிராம்மணன் காலேயில் சென்று அரிசி பிச்சையெடுத்து வந்து அந்தச் சத்திரத்தில் சமைத்து உண்டு இரவெல்லாம் நன்கு உறங்காது இந்தமணலெல்லாம் பொன்னுக ஆய்விடாதா? அப்படி ஆகிவிட்டால் இந்தப் பொன்மணல்களே எங்கு சேமித்து வைப்பது? பெரிய பெட்டியாக வேண்டுமே? எங்கு விற்பனே செய்வது? என்றும், தொட்ட பொருள்களெல்லாம் பொன்னுகாதா? என்றும், நாம் இருக்கிற இடத்தில் மட்டும் பொன்மழை பெய்யாதா? என்றும் பற்பல எண்ணுவான்; எண்ணி எண்ணி பெருமூச்செறிவான்.

அவன் நாள்தோறும் பிச்சையெடுத்துவரும் அரிசியில் தான் புசித்து மிகுந்ததை ஒரு பழைய பாஊயில் போட்டு அப்பாஊயைச் சுவரிலிருந்த மூஊயில் தொங்கவிட்டிருந்தான். பின்னர் ஒரு நாள் அப்பாஊ நிறைய அரிசி சேர்ந்து விட்டதைப் பார்த்தான்; மிகுந்த சந்தோஷத்தை யடைந்தான். படுத்தவண்ணமாகவே அந்தப் பாஊயைப் பார்த்துப் பார்த்து இரா முழுதும் பின்வருமாறு யோசிக்கலானுன்.

இந்தப்பாஊ நிறைய அரிசியிருக்கிறது. எங்கும் மழைபெய்யாது பஞ்சகாலம் வரவேண்டும். அப்படி வந்துவிட்டால் அரிசி எங்கும் கிடைக்காமற் போய் விடும். அநேக செல்வந்தர்கள் பணத்தை வைத்துக் கொண்டு அரிசி வாங்கவேண்டுமென்று அஊந்து என்னிடம்வருவார்கள். நாம் அப்போது இந்த அரிசியைப் பத்துருபாய்க்கு விற்றுவிடவேண்டும். அந்தப் பணத்தைக்கொண்டு இரண்டு ஆடு வாங்கி இடையனிடத்தில் விடவேண்டும். அவைகள் ஆறுமாதத்துக்கு ஒருதரம் குட்டி போட்டால், சிலவருடங்களுக்குள் ஒரு மந்தை ஆகும். பின்பு அந்த ஆடுகளில் சிலவற்றை விற்றுப் பசு வாங்குவேன். அப்பசு கன்றையீன்று பால்கறந்தால் அந்தப்பாஊயெல்லாம் விற்றுப் பணஞ்சேர்த்து ஓர் எருமை வாங்கவேண்டும். ஆட்டுமந்தை, பசு, எருமை இவைகளுடன் சுகமாக இருக்கும்போது எருமை பசு இவைகளின் கன்றுக்குட்டிகஊ விற்று ஒரு பெட்டை குதிரை வாங்குவேன். குதிரை குட்டி போட்டவுடன் அதஊ வளர்த்து நல்ல விஊக்கு விற்கவேண்டும். பின்பு

அந்தப் பணத்தைக்கொண்டு நான்கு தாழ்வாரமுள் ளதும் ஆடுமாடுகளைக் கட்டுவதற்குப் பின்புறம் தோட்டமுள்ளதுமாகிய ஒரு பெரிய வீட்டை வாங்க வேண்டும். அந்த வீட்டில் நாம் குடிபுகுந்து பெரிய மனிதனாக பால் வர்த்தகம் ஒரு பக்கம், நெய் வர்த்த கம் ஒருபக்கம், ஆடுமாடுகளின் எருவை ஒரு பக்கம் கொட்டிவைத்திருந்து, எருடிப்போ ஒரு பக்கம் வைத்து கண்ணியமாக இருப்பேன். அப்போது நாலுபேர் என்னைப் பார்க்க வருவதும் போவதுமாக இருப்பார்கள். அநேக பிராம்மணர்கள் வந்து என்னைப் பார்த்து இன்னும் கலியாணமாகவில்லை யென்று தெரிந்து என்னுடைய ஜாதகக்குறிப்பை வாங்கிக் கொண்டுபோவார்கள். அப்போது நான் "வரதக்ஷிணை ஆயிரம் தரவேண்டும்" என்பேன். அதில் ஒரு பணக்காரன் ஆயிரம் ரூபாயைத் தந்து நிரம்பச் சீதனத்தையுந்தந்து தன் மகளை எனக்குக் கல்யாணஞ் செய்து தருவான். பின்பு அந்தப் பெண் புஷ்பவதியாக ஆனவுடன் சாந்திக்கல்யாணத்திற்கு நாள் வைப்பார்கள். அப்போது நான் வைர மோதிர மும் வைரக் கடுக்கனும் போட்டால்தான் சாந்தி கல்யாணஞ் செய்து கொள்வேன் என்பேன். மாம னூர் வேறே வழியின்றி கடன்பட்டாவது நான் கேட்ட நகைகளைப் போட்டு சாந்தி கல்யாணம் பண்ணி வைப்பார். பிறகு ஓராண்டில் ஆண் குழந்தை பிறக்கும். பிள்ளைக்கு சோமசர்மன் என்று பெயரிடுவேன். குழந்தை மெல்லத் தவழும் பருவம் அடைந்தவுடன் என் பத்தினி குழந்தை யுடன் இருப்பாள். அப்போது நான் குதிரைக்

கொட்டாரத்துக்குப் பின்புறம் தோட்டத்தில் ஒரு புல்மேடையில் அமர்ந்து ஒரு புத்தகத்தைவைத்துப் படித்துக் கொண்டிருப்பேன். அவ்வாறு படித்துக் கொண்டிருக்கும்போது, பிள்ளை என்னைப் பார்த்துத் தாயின் மடியிலிருந்து இறங்கி என்னிடம் ஓடி வரும். குழந்தை குதிரையின் காலடியில் வருவதைப் பார்த்து நான் கோபித்து, மனைவியை நோக்கி, "பெண்ணே குழந்தையை எடு, குழந்தையை எடு" என்று சொல்வேன். வீட்டு வேலையைச் செய்து கொண்டிருப்பதால் அவளுக்கு நான் சொல்வது கேளாது. உடனே எனக்குக் கோபம் மூண்டுவிடும். "பலபேரை வைத்துக் கொண்டு வேலைவாங்குகின்ற பெரிய மனிதனாகிய நான் இரண்டுமுறை சொல்லியும் காது கேளாதவள்போல் இருக்கின்றாயே? அசடே! உனக்கு, இத்தனை அகங்கரமா? என்னை என்ன என்று நினைத்துக்கொண்டிருக்கிறாய்? பிச்சைக்காரச் சிறுக்கியே! என் பெருந்தன்மையை இன்னுமா நீ தெரிந்து கொள்ளவில்லை" என்று எழுந்து நான் அவளை இப்படித்தான் உதைப்பேன்" என்று நினைத்துக்கொண்டே பானையைக் காலால்உதைத்து உடைத்தான். பானை உடைந்து அதில் இருந்த அரிசியெல்லாம் மணலிலும் புழுதியிலும் சிதறிப் பாழாயின.

அதுகண்ட பிராமணன் தனது பேராசையின் பீடையும், அதனால் முதலுக்கே வந்த மோசத்தை யும், தன்னறியாமையையும் எண்ணி ஏங்கி இட ருற்றான்.

"ஆசை யறுமின்கள் ஆசையறுமின்கள்
ஈசனோ டாயினும் ஆசை யறுமின்கள்"

# விபூதி

விபூதியைப்பற்றி எழுதப் புகுந்த இச்செயல் நரி தன் வாலைக்கொண்டு கடலாழம் பார்ப்பது போல் பரிகசிப்பதற்கு இடமாகுமேயன்றி வேறில்லை. ஆனல் பக்தியின் மிகுதியால் உன்மத்தரைப் போல் ஆடுகின்றனர்; ஆதலால் இச்செயலும் நகைப்புக்கு இடந்தரா தென்றே மனந்துணிந்தது, திருநீற்றைப் பற்றி எழுதத்துணிந்தபோது விபூதியினிடத்தில் பற்றில்லாத அடியேனுக்கே ஒருவித ஆனந்தம் உண்டாகிறது. விபூதியின் பெருமையை சாஸ்த்திரத்தில் காணுந்தோறும் மயிர்க்கூச் செறிவும் உண்டாகிறது. விபதி என்னும் பதத்தையே மூலமந்திரமாக தினமும் உச்சரிக்கலா மென்று அன்பு ஏற்படுகிற தென்ருல், சைவப்பெரு மக்களாகிய பெரியோர்கள் விபூதியினிடத்தில் எத்துணை பக்தி கொண்டிருப்பர் என்பது உள்ளங்கை நெல்லிக் கனியாகும். வீராகமம் விபூதியைப் பற்றுக்கூறும்பொழுது விபூதிக்கு உண்டான பெயர்களெல்லாவற்றையுங் கூறுகிறது. அவை பஸ்மம், ரக்ஷை, பசிதம், பூதிக்ஷாரம் என்பனவாம். அமரசிம்மத்திலும் பிங்கலந்தையிலும் முறையே,

பூதிர் பஸித பஸ்மக்ஷாரோரக்ஷா — என்றும்

பூதியோமப் பொடி விபூதி காப்புப் புண்ணிய
சாந்தம் வெண்டாது திருநீறே.

என்றும் கூறப்படுகிறது.

பஸ்மம்:—பஸ் என்ருல் வறுத்தல் பிரகாசிப்பது என்று பொருள்படும். "பாபானும் ரோகானும் மாயா பாஸஸ்ய சப்த்ஸ நரத்பஸ்ம" என்று கூறியபடி பாவம் ரோகம் மாயாபாசம் இவைகளை நாசஞ்செய் வதால் பஸ்மம்-ப-தானே. பிரகாசிப்பது, ஸ்ம— எல்லாவற்றிலும் எனவே சர்வ ஆசாரங்கட்கும் பஸ் மம் மூலதனம்; விபூதியானது சர்வ பாபங்களையும் பக்ஷணம் செய்யுந் தன்மைத்தாற் "பஸ்மம்" என் னும் பெயர் பெற்றதாக பிருஹஜ்ஜா பலத்தில் பஸ் மஸர் வாக பக்ஷணாத்" என்று கூறுகிறது. அணிந்து கொண்டவர்களை ரக்ஷிப்பதால் ரக்ஷை என்றும், பிர காசிவிக்குந் தன்மையினுன் பசிதம் என்னும் ஐஸ்வர்ய காரணாத்பூதி; என்று பிருஷஜ்ஜாபாலோப நிஷத்தில் கூறியபடி சம்பத்தைக் கொடுப்பதால் பூதி என்னும், தனக்கு மேலான ஐஸ்வர்யமில்லாத தினுல் விபூதி என்னும், வி-சிவபெருமான், பூ- பாவனை, தி-அடைதல்.

சிவதத்துவயாவனை விளக்குவது
வேர்ப்பாவ நம்ய தோக்கியேஷாதிக் நோதீதி விபூதிஹீ
தஸ்மாத் சிவாத்மகத்ச விபூதே கீர்த்யுதே சலா

என்னும் வாதுள ஆகவாக்கியங்கள் தெரிந்தன.

அநேக ஜன்மங்களிற் செய்த பாபங்களையும் நீனுகச் செய்வதால் "நீனு" என்றும் சொல்லப் படும்.

பாபந்நாசய தேக்ருதஸ்ந-மபி ஜன்மதார்ஜிதம் ஜாபாலம்

## விபூதி செய்கின்ற முறை

மாதா என்பதற்கு சப்த கல்பதருமத்தில் "மான் யதே பூஜ்யதே யாஸா" எவள் பூஜிக்கப்படு

கிருளோ அவள் மாதா எனப்படுகின்ருள். லோகத்தில் எம்மதத்தினர்களும் பசுவைப் பூசிப்பதால் பசுவுக்கு கோமாதா என்று பெயர். பசு எந்த சாதியர்களுக்கும் ஆயுளுள்ள வரை பால்கொடுத்து ரக்ஷிக்கிறது. பசுக்களால் தேவர்கள் சந்தோஷிக்கின்றனர். தருமம் நிலைபெற்றிருக்கிறது. எவ்வுலகத்திற்கும் தாயாக இருக்கிறது. கோகுலத்தில் கிருஷ்ணன் வளர்ந்ததே கோவின் பெருமையைத் தெரிவிக்கிறது. ஆதிசங்கரரால் புகழ்ந்து கூறிய ஸ்ரீஞான சம்பந்த சுவாமிகள் "ஆனினம் வாழ்க" என்றனர். இத்தகைய பெருமை வாய்ந்த பசுவின் சாணமே விபூதி உண்டாக்குதற்காக விதிக்கப்பட்டிருக்கிறது. வியாதியுடைய பசு, கன்றிழந்த பசு, கிழப்பசு, மலட்டுப்பசு, மலத்தை தின்னும் பசு முதலிய குற்றங்களையுடைய பசுக்களின் சாணத்தைத்தவிர்த்து நல்லிணக்க முடையதும், பசானமென்னும் தாளை மேயத்ததும் ஆகிய பசுவின் கோமயத்தை பங்குனித் திங்களில் அட்டமி பௌர்ணமி, சதுர்த்தசி என்னும் திதிகளில், ஓம் கபிலே சுகீலோ நம: ஓம் கபிலே சுமனே நமர் என்னும் மந்திரத்தைக் கூறி பசுவை வணங்கி, "ஆன்மாக்களின் துன்பத்தைப் போக்கும் பயோ தரத்தையுடைய மாதாவே! இதனை ஏற்க' என்று ஒரு பிடி புல்லைக் கொடுத்த பிறகு கோமயம் கொள்ள வேண்டும். கோமயம் கொள்வது சாந்திகம், பௌட்டிகம், காமதம் என மூவகைப்படும். சாந்திகமாவது:— கோமயமிடும் போதே பசுவின் பின் தட்டிலேயே ஏற்பது. பௌட்டிகமாவது:— சாணம் பூமியில் விழு

முன் தாமரையிலையில் ஏற்பது காமதகமாவது:— பூமியில் வீழ்ந்தபின் மேல் கீழ் தள்ளி எடுப்பது. இவற்றுள் பௌட்டிகம் உத்தமம். சாந்திகம் மத்திமம். காமதம் அதமம்.

இவ்விதம் முறையே ஏந்திய கோமயத்தில் பால் ஐந்து பலம், தயிர் மூன்று பலம், நெய் இரண்டு பலம், கோசலம் ஒரு பலம் சேர்த்து ஓம் அகோராய நம: என்று உச்சரித்து மெல்லப் பிசைந்து உருண்டை பண்ணி சம்பா நெற்பதரை விரித்து அதன் மேல் ஓம் தற்புருஷாய நம: என்று உச்சரித்து ஓமாக்கினியிஞலேனும் நித்யாக்கினியிஞலேனும் தகனம் செய்யவேண்டும். அன்றைக்கே எடுத்து அன்றைக்கே உருண்டை செய்து அன்றைத்தினத் திற்ருனே தகனஞ் செய்வது உத்தமோத்தமம். பின்பு விபூதி கருகல் முதலியவற்றைத் தள்ளி நல்லனவற்றைப் பார்த்து ஓம் ஈசஞய நம: என்று எடுக்க வேண்டும். அங்ஙனம் எடுத்த விபூதியை பரிசுத்தமாகிற புதுவஸ்திரத்திஞலேவடித்து புதுப் பாண்டத்திற் பெய்து காய்த்ரீமந்திரத்தை உச்சரித்து சுத்த பாத்திரத்தில் சேமித்து வைக்கவேண்டும்.

விபூதி யணியும் முறை

அம்மஹா விபூதியை உத்தூளனமாகவும் திரிபுண்டரமாகவும் அணியவேண்டும். முனிவர்களெல்லாம் உத்தூளனமாக விபூதியையணிந்து கொள்வர் என்று ஆதித்ய புராணத்தில் ஸ்வர்வாகாலேப வேஸ்த்ரீகளும்யதீநாம ஜ்லவதர்ஜிதம்'' என்று கூறுகிறது. தேகமுழுவதும் உத்தூளனமாக விபூதியைத்

தரித்துக் கொள்வது எட்டுவகை ஸ்தானத்தில் ஒன்று: ஆக்கினேயஸ் நாநம் அதாவது விபூதிஸ் நாமம் ஆக்கினேயம் பஸ்மஸ் நாநம் என்று சுருதியில் கூறப்படுகிறது. கங்கை முதலிய புண்ணிய நதிகளில் கோடிதரம் ஸ்நாநம் செய்த பலம் விபூதி ஸ்நாநத்தினுல் ஏற்படுகிறது. காமிக ஆகமத்தில்,

"பஸ்மஸ்நாநம் ஜலஸ்நாநாத் தோடி புண்யகுணம்பவேத்"

என்று கூறப்படுகிறது. சற்குரு வாயிலாக தீக்ஷைப்பெற்ருேர் விபூதியைத் திரிபுண்டரதமாக அணியவேண்டும். ஒன்ருேடொன்று சேராமல் இடையில் அறுந்து போகாமல் அளவுப்படி உச்சி நெற்றி, மார்பு, தொப்புள், முழந்தாளிரண்டு, புயம் இரண்டு, முழங்கையிரண்டு, முதுகு கீழ் நடு ஒன்று ஆக பதினுறு இடங்களில் தரிக்க வேண்டும். இதனை காமிகாகமத்திற் காணலாம். உச்சியிற்றரித்தலால் கண்டத்திற்கு மேல் செய்தபாவம் நீங்கும்; நெற்றியில் தரித்தலால் நான்முகனுல் எழுதப்பட்ட கெட்ட எழுத்துக்களின் தோஷம் நீங்கும். கண்டத்தில் தரித்தலால் விலக்கப்பட்ட உணவை உண்ட குற்றம் நீங்கும். மார்பிற்றரித்தலால் மனத்தினுல் செய்த குற்றம் நீங்கும்; நாபியிற்றரித்தலால் பீஜத்தினுற் செய்த விஷய தோஷம் நீங்கும்; முழந்தாள்களின்னலால் கால்களாற் செய்த பாவம் நீங்கும்;முதுகு கீழ் உள்ள முச்சந்தியிற்றரித்தலால் குதத்தினுற் செய்த பாவம் நீங்கும்; குயங்களிற்றரித்தலால் அன்னிய மாதரை ஆலிங்கனம் செய்த பாவம் நீங்கும். இதனை வடமொழி ஸ்காந்தத்தில் கண்டு தெளிக.

## விபூதியின் சிறப்பு

விபூதியைத் தரிப்பதால் இம்மையிற் செய்த பாவம் நீங்குவதுடன் அனேக ஜன்மங்களில் செய்த பாவங்களும் நீங்குகிறது, சாதாதபஸ் மிருதியில்:—

மதியம் பீக்வாகுரு தாராம்ச்சகத்வா
ஸ்தேயம் கிருத்வா ப்ருஹ்ம அத்யாத் பக்குத்வா
பஸ்மச் சங்னோபஸ் மஸ்யத் யாசயாதோ
ருத்ராட்யா யமுச்யதே சர்வபாயை

கள்குடித்தல், திருடல், பிரும்மஹத்தியைச் செய்தல் முதலிய பாபங்களைச் செய்தவன் விபூதியை யணிந்து உருத்திரத்தை சபித்தால் சகல பாபங்களிலிருந்தும் நீங்குகிருனென்கின்றது. கோண்மின் கேளுடையீர்?

கௌதமருக்கும் அகலிகைக்கும் நடந்த விவா கத்திற்குழுமியிருந்த சகல தேவர்கட்கும் அந்த அக லிகையின் பேரழகினுல் மயங்கி அறிவையிழந்து, மோக மதிகரித்து தாது காலிதமானது. அப்பாவ பரிகாரத்தின் பொருட்டுத் துர்வாசரை அடைந்து விண்ணப்பித்தனர். துர்வாச முனிவர் விபூதியை யணிந்து கொள்ளும்படி கூறினுர். அதுபடியே சகல தேவர்களும் விபூதியை யணிந்து அப்பாபத் திலிருந்து விடுபட்டனர். இதனை பிருஹஜ்ஜா பாலத்தில்:—

'ஸ்ரீகௌதம விவாககாலே' என்று தொடங்கிச் சொல்லும் வசனங்கள்ால் கண்டுத்தெளிக.

விபூதி தரிப்பதனுல் பாவத்திலிருத்து விடுபடு கிருன்; விபூதி தரிப்பதனுல் பூதப்பிரதேச பிசாசு

முதலியவைகள் அஞ்சி நடுங்கி அலறியோடு கின்றன. இதனை மானவ புராணம்,

திரிபுண்டர தாரணம் த்ருஷ்டவா பூதப்ரேத புரஸ்வரா;
பீத; ப்ரகம் பிதாச்சீக்கிரம் கச்யந்த்யே வனசம்சய!

என்று முரசறைகிறது.

விபூதி தரிப்பதனுல் நோய் நீங்குகிறது; விபூதி தரிப்பதனுல் மங்களமுண்டாகிறது; விபூதியணி வதினுல் சுத்தம் ஏற்படுகிறது; மயிர், புழு, இவை கள் அடைந்த அன்னத்தில் அதோஷம் நீங்கும் பொருட்டு சுத்தத்திற்காக விபூதி போடுகின்றனர். விபூதி யணிவதினுல் சிவனடியார்களாக ஆகின் ருேம். விபூதி யணிந்து சிவசாயுஜ்ய பதவியடைந்த பெரியார்கள் எண்ணிலர்.

சுதாமன் என்னும் வேதியனும் அவன் தம்பியும் சிவனடியார்களாகிய பிரமவிஷ்ணுக்களை கடிந்து பேசினமையால் அவர்கள் ஊமையாகவும், முட வனுகவும் சாபமிட, அதனை விபூதி கொண்டு ததீசி முனிவர் போக்கி நற்கதி அடைவித்தனர். கூன் பாண்டியனுடைய வெப்பு நோயை விபூதியினுல் ஞானசம்பந்த சுவாமிகள் தீர்த்தருளினுர். மற்ற பெரியார்கள் சரிதைகளை வரையப் போதிய இடமின் மையால் விடுகின்றனம். விபூதியைப் பற்றி நான்கு வேதத்திலும், அவற்றின் பிரிவுகளாகிய உப நிடதங் களிலும் ஆங்காங்கு சிறப்பையே கூறும் எண்பத் தியேழாவது உபநிடதமாகிய பஸ்மஜாபால உபநிட தம் என்று ஒன்று தனியாகவுளது.

நினைப்பதற்கும் ஒண்ணுசாலவும் பெருமை யுடைய மஹா விபூதியை நம்சைவசமயத்தின்பிறந்த

ஒரு சிலர் அணிவது இல்லை. விபூதி ருத்திராக்கம் அணிவது நவநாகரீக மில்லையென்றும் கூறுகின்றனர். அச்சோ! என்ன மந்தமதி? விபூதி யணிவதனால் மும்மூர்த்திக்கும் தலைவனாகிய அனுமுகச் சிவனுருடைய அடியார்களென்று விளங்குகிறது. நம்மனைவி மஞ்சள் பூசுவதும், தாலி கழுத்தில் கட்டிக் கொண்டிருப்பதும் நாகரிக மில்லையென்று நினைப்பவன் பெண்களுக்கும் தாழ்ந்தவனாக வல்லவோ ஆகிறான்? எதைவிட்டாலென்ன? அணியாவிட்டா லென்ன? வென்று வாய் வேதாந்தம் பேசுகின்றனர். ஐயோ! தன் நெற்றியை அவர்கள் பார்த்ததில்லை போலும். பிரமதேவர் சிருஷ்டி செய்கையிலேயே விபூதியின் பெருமையைக் கூறி அதையணிந்து கோடற்காகவே நெற்றியை குறுக்காகப் படைத்தார். நெடுக்காகவும் மற்றவிதமாகவும் படைக்கவில்லை. சம்சயம் உண்டானால் ஆடியின் முன் நின்று நெற்றியைப் பார்த்துக் கொள்ளட்டும். நெற்றியின் அமைப்பைப் பார்த்த பின்னரும் விபூதி யணிவதனால் ஒன்றும் பிரயோஜனமில்லை யென்று கூறுகின்றவனை தேர்ந்தெடுத்த மூடர்களுக்கெல்லாம் அரசனென்று கூறுவது இழுக்காகாதன்றோ? மேற்போந்த கருத்தை கூர்மபுராணம்:—

ஸ்ரஷ்டாஸ்ருஷ்டிச்சல்லே நாஹத்ரிபுண்டாஸ்யப்ரஸ்ததாம்
ஸஸர்ஜஸலவாடம் ஹிதிர் யங்நோர்த்தவம் நவார்த்துலம்
ததாபி மானவா மூர்காநகுர் வந்தித்ரிபுண்டரகம்.

என்று கூறுகின்றது.

சூடாமணி நிகண்டராகிய மண்டல புருடர் தாஞ்சமணி சமயத்தினரா யிருந்தும் விபூதியையே

சிறப்பித்து "திருநீறே பற்பம் பொடியொடுகாப் பாம் புண்ணிய சாந்தாஞ்சாணி" எனக் கூறி யுள்ளார். ஔவை பிராட்டியார் "நீறில்லா நெற்றி பாழ்" என்றனர். ஆனுல் கர்நாடகக்கிழவி சொன்னது தானே என்று நினைக்காதீர்கள். விபூதியில்லாமல் எவன் சாப்பிடுகிருனே அவன் நாய் மாமிசம் சாப்பிடுகிறவனிலும் தாழ்ந்தவனுகிருன் என்று வடமொழி ஸ்காந்தத்தில் கூறுகிறது. மதத்துவேஷமுடையோர் விபூதியைப் பிணச் சாம்பலென்றும், மாட்டின் மலமென்றும் பழிக்கின்றனர். அந்தந்தோ! அவ்வறியாமைக்கு என் செய்வோம்? பரிதாபம்! எரிவாய் நிரயத்திற்கு இறையாகின்றனரே? இருபிறப்பிலும் பாவஞ் செய்தோர்க்குத்தான் விபூதியினிடத்தில் துவேஷமுண்டாகும். பஸ்பத்தைப் பார்த்தவுடன் எவர்களுக்கு கோபம் வருகிறதோ, அவர் பலபெயருக்குப் பிறந்தோராவர் என்பது பண்டிதரறியத் தக்கது, என்று பிருஹஜ்ஜாபாலம் கூறுகிறது.

"மஹாபாதகயுக்தா நாம்" என்றன்றெடக்கத்தில் காண்க. விபூதியை உத்தூளனமாக அணிந்து கொண்டிருப்போரைக்கண்டு 'சாம்பல் பூசிக்கொண்டான்' என்றும் 'தலைவலிக்குப் பத்துப் போட்டுக் கொண்டா' னென்றும் எள்ளி நகையாடுகின்றனர். கலியாண பூசணிக்காய் வந்திருக்கிறதென்று பரிகாசம் செய்கின்றனர். அவர்கள் அறிவின் கூர்மையை என்னென்று எழுதுவதென்று எனக்குத் தோன்றவில்லை. அவர்களிடத்தில் என்ன தானிருக்கிறதோ தெரியவில்லை.

வாசிட்டலிங்க புராணத்தில் சிவச்சின்னங்களை யாவது அவற்றைத் தரித்தவரையாவது எவன் தூஷிக்கிருனே, அவன் வமிச பரம்பரையே சங் கீர்ணமாய் விடும் என்று கூறுகின்றதை ''யேபஸ்ம தாரிணந் த்ருஷடவா''— எனவருஞ்சுலோகத்தால் அறியலாம்.

மஹாபஸ்பத்தை பழிக்கின்ற பாவிகளைக் கண் டால் அவர்களுக்கு நல்ல புத்தி கற்பியுங்கள். ''ஆனல் மூர்க்கனும் முதலையுங் கொண்டது விடா'' என்பது போல் அவர்கள் பிடித்த முயலுக்கு மூன்று காலெனில் அவர்களை எதிர்க்கவேண்டும். ஒருவன் நமக்கு இழைத்த குற்றத்தை நாம் பொறுத்தல் வேண்டும். நஞ் சைவசமயாசாரியர்களையும், சிவ பெருமானையும், சிவச்சின்னங்களையும் பழித்தால்அக் குற்றத்தை நாம் பொறுப்பது தகுதியின்மையாம். அத ஞல் உயிர் துறக்க வரினும் அஞ்சப்படாது. அவை பதிபுண்ணியமாகும். சிலர் ''தெய்வத்தை தூஷிக் கிறவனுக்கு தெய்வம் கூலிதரும், நாமேன் அவர் களைக் கண்டிப்பது'' என்று கூறுகின்றனர். அவை முற்றிலும் அசப்பியமான கூற்றேயாகும். தன்னை ஒருவன் பழித்தால் அஞ்ஞான்றும் கடவுள் அவனைத் தண்டிப்பானென்று இருப்பானு? ஆகவே சிவ நிந்தையைக் கேட்டு வாளா இருப்பது நன்றல்ல; தக்ஷயாகத்தில் சிவ நிந்தையைக் கேட்டு வாளாவிருந்த பரமன் முதலோரடைந்த துன்பத்தை செப்பற்பாற்ருே? ஆனல் எதிர்த்த சக்தியில்லா விடில் ஆண்டவனிடத்திற் சென்று குறையிரந்து கொள்வோம்.

# தவளையின் தகைமை

விளமையான வனம். இளந்தளிர்களுடன் அளந்தறிய முடியாதபடி வளர்ந்து வானேங்கி நிற்கும் மரங்கள். தளர்ந்த கொடிகள் அம்மரங் களைச் சுற்றிச் சுற்றிப் படர்வது, குலமகளிர் தத்தம் கொழுநனைத் தொடரும் கற்பு நெறியைக் காட்டுகின் றது. மந்தியும் அறியா மரங்களில் பலவிதமான வண்ண மலர்களின் கொத்துகள் குலுங்கின.

அடர்ந்து படர்ந்த அவ்வனத்தில் கம்பீரமாகச் சிங்கங்களும், வேங்கைகளும், மதயானைகளும் கர்ஜித்து உலாவிக் கொண்டிருந்தன.

அழகிய த்வைதவனம் என்ற அப்பெருங் கான கத்தின் இடையில், குன்றுகளினின்றும் குதித்து ஓடும் அருவிகளில் வான ரதர்கள் நீராடித் தங்கள் நீண்டு சுருண்டு இருண்ட கூந்தலை உலர்த்திக் கொண்டிருந்தார்கள்.

உயர்ந்து ஓங்கியுள்ள ஒரு ஆலமரத்தின் கீழ், திரண்ட தோள்களுடன் வாயுகுமாரனுகிய வீமன் அமர்ந்து வானை நோக்கிய வண்ணம் இருந்தான்.

"ஏ ! துரியோதனு! வனவாசம் முடிந்தவுடன் உன்னுடைய எலும்புகளைப் பொடிசெய்து கடலில் கரைப்பேன். உன்னுடைய கண்களைப் பாரத நாட்டுக்காகங்கள் தின்னுது! சீனக் காக்கைகட்கு இரையாக எறிவேன்! திரௌபதியைத் தொட்டி ழுத்த துச்சாதனு! உன் உதிரத்தை நாய், நரிகள்

குடிக்க உடலைப் பிழிந்து அழிப்பேன், ம்...ம்...” என்று தனக்குத்தானே பித்தனைப்போல் பேசினான். அவன் அப்படி உரத்துப் பேசியபோது அவ்வனத் தில் எதிரொலியுண்டாகியது. கோபத்தால் காலாக் கினி ருத்திரனைப்போல் அவன் காட்சியளித்தான். அவன் மனத்தில் தன் தோள் வலிமையைப்பற்றி நினைத்து தருக்குற்றான். தன்னிடம் மேம்பட்ட பராக்கிரமம் உடையவர் பதினாலு உலகங்களிலும் இல்லை என்று எண்ணி இறுமாந்தான்.

அங்கே புல்லினால் மூடிய ஆசிரமத்தில் மின்னல் கொடிபோல் திரௌபதி அமர்ந்திருந்தாள். அவள் முகத்தில் கவலை நிழல் படர்ந்திருந்தது. அரசவை யில் தன்னை நிறுத்தி மானபங்கம் புரிந்த கொடு மையை உன்னி உன்னி நெடுமூச்சு விட்டாள்.

பீஷ்மரும் துரோணரும் விதுரரும் நிறைந்த அப் பேரவையில், துரியோதனன் செய்த அவமதியை எண்ணுந்தோறும் எண்ணுந்தோறும் அவளுடைய இதயம் வெடித்துவிடும்போல் இருந்தது.

கிருஷ்ணா! கிருஷ்ணா! அன்பினால் அகங் குழைந்து அழைத்தபோது, ஆயிரம் ஆயிரம் புடவை கள் விதம் விதமாக வளர்ந்த அற்புதமான அருளை நினைத்து ஆறுதல் அடைந்தாள்.

அந்தப் பற்பல சிந்தைகட்கு இடையே தன்னைக் காட்டிலும் உயர்ந்த கிருஷ்ண பக்தியுடை யவர்கள் உலகில் இல்லையென்று எண்ணினாள்.

இவ்வாறு தான் சிறந்த பராக்கிரமசாலி என்ற எண்ணம் வீமன் மனத்திலும், தான் சிறந்த பக்தை

என்ற எண்ணம் திரௌபதி மனத்திலும் தோன்றின. எங்கும் நீக்கமற நிறைந்த நிமலனுகிய கண்ண பிரான் இதனையுணர்ந்தார்.

"இந்த இருவர் உள்ளங்களிலும் முளைத்த 'நான்' என்ற அகங்காரத்தினை முளையிலேயே களைய வேண்டும்" என்று எம்பிரான் திருவுளம் பற்றினுன்.

அடியார்களைத் தடுத்தாட்கொள்ளும் தயாசாக ரன் அப்பெருமான்; பக்தவத்சலன்.

துவாரகையினின்றும் பெருமான் புறப்பட்டுத் தனது அன்புள்ள உத்தமர்களான மைத்துனர்கள் வசிக்கும் த்வைத வனத்துக்கு வந்தார்.

சந்திரனைக் கண்ட குமுத மலர்களைப்போல் அக மும் முகமும் மலர்ந்து, ஐம்புலன்களையும் வென்ற ஐவர்கள் எதிர்சென்று வணங்கினுர்கள்.

தண்ணு ரமுதமும் அமரர் தொத்
தந்தாய் ! வருக; காயாம்பு
வண்ணு ! வருக; தேவகிதன்
மதலாய் ! வருக; மாதவர்தம்
அண்ணல் ! வருக; ஆயர்குல
அரசே ! வருக; அருள்பொழியுங்
கண்ணு ! வருக; கலிதீர்க்குங்
கருணைக் கடலே வருகவே !

என்று தேனினும் இனிய செஞ்சொற்களால் நல்வரவு கூறினுர்கள். தருப்பைப் பாயில் அவரை இருக்கச் செய்தார்கள்.

மாதர்குல மணிவிளக்காகிய திரௌபதிதேவி, தன் மானங்காத்த மணிவண்ணனின் மலரடி மீது விழுந்து தொழுதாள்.

''அண்ணு ! என்ன, நடந்து வந்தீரோ? தேரும் பரியும் காணப்படவில்லையே?''

''அம்மா! உலாவும் பொருட்டு துவாரகையின் அருகே நடந்துகொண்டிருந்தேன். உங்கள் நினைவு வந்துவிட்டது. சிறப்பாக உங்களைக் காணவேண் டும் என்ற எண்ணம் பிடர்பிடித்து உந்தியது. நடந்தே வந்துவிட்டேன்.''

''அண்ணு! எங்கள்மீது தேவரீர் வைத்திருக்குங் கருணைக்கு எல்லையுண்டா? நாங்கள் இன்று வாழ் வது தங்களின் திருவருளினுலேயேதான். அன்றும் இன்றும் என்றும் எங்களைப் பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து ஆட்கொள்ள உம்மையன்றி வேறு யாருளர்? முனிபுங்கவர் போற்றும் முகுந்தா! உனது பாதார விந்தமே ஆதாரமாக எங்களுக்கு அருள் புரிகின்றது இத்தனை தூரம் நடந்தீரே! தங்கள் திருவடி வலிக்குமே? கொஞ்சம் வெந்நீர் வைத்துத் தரட்டுமா?''

''ஆமாம், கால் வலிக்கின்றதம்மா! உங்கள் மீதுள்ள அன்பால் பித்துப்பிடித்தவனைப்போல் வந்து விட்டேன். வெந்நீர் வைத்துக் கொடுத்தால் நல்லதுதான்.''

உடனே திரௌபதி பீமனைப் பார்த்து ''ஒரு அண்டா கொண்டுவாருங்கள். அண்ணுவுக்கு வெந்நீர் தயார் செய்ய வேண்டும்'' என்ருள்.

வீமசேனன் அக்காட்டில் வாழும் ஒரு முனிவரு டைய ஆசிரமத்தில் உள்ள பெரிய அண்டாவைக்

கொணர்ந்தான். அப்படியே சுனையில் அழுத்தித் தண்ணீர் முகந்தான். மூன்று பெரிய கற்களை அடுப்பாக அமைத்தான். அதன்மீது அண்டாவை வைத்தான். அவனுக்குக் கோடாரி வேண்டும்? கைகளே கோடாரி. உலர்ந்த மரங்களை ஒடித்து ஒடித்துக் குவித்தான். திரௌபதி தீ மூட்டினாள். கண்ணன் மீதுள்ள அன்பினால் விறைவாக எரித்தாள்.

காலை எட்டு மணிக்கு மூட்டிய தீ மணி பத்து ஆயிற்று; தண்ணீர் சூடுபெறவில்லை. பனிக்கட்டி போல் குளிர்ந்தே இருந்தது. பீமன் மலைமலையாக மரங்களைக் கொணர்ந்து குவித்துக்கொண்டிருந்தான். திரௌபதி அடுப்பில் மாட்டி எரித்த வண்ணமாக இருந்தாள். நெருப்பிலே பிறந்த அவள் திருமேனி வேர்த்துவேதனையுற்றது. மரங்களை ஒடித்து ஒடித்து வீமனுடைய தோள்களும் அயர்ந்துவிட்டன.

தண்ணீர் சிறிதுகூட சூடேறவில்லை. வீமனுக்கும் திரௌபதிக்கும் பெரிய ஆச்சரியம் உண்டாயிற்று.

இருமருடன் வேத வேதாந்தங்களைப்பற்றி உரையாடிக் கொண்டிருந்த கண்ணபிரான், "அம்மா! வெந்நீர் இன்னுந் தயாராகவில்லையா? உச்சிப்பொழுதாகிவிட்டதே, வெந்நீர் தரட்டுமா? என்று உபசரித்தனையே? ஏதோ ஒரு ஊரில் இப்படித்தான் வாயாலேயே உபசரிப்பார்கள் என்று கேள்வி. நான் வெந்நீர் கேட்கவில்லை. நீயாகவே சொன்னாய். உன்னை நம்பி நானும் இவ்வளவு நேரம் காத்திருந்தேன். போதும் உன் உபசாரம். பசிக்கின்றது.

நான் போய் சுனையில் நீராடி வருகிறேன்'' என்று புன்னகை தவழச் சொன்னார்.

''அண்ணா! இந்த அதிசயத்தை என்ன என்று சொல்வேன்? எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை. காலை தொடங்கி இதுவரை உமது மைத்துனர் வாயு புத்திரர் மலைமலையாக மரங்களைக் கொணர்ந்து குவித்தார். நானும் இடையறாது எரித்தேன். தண்ணீர் சூடாகவில்லை. பனிக்கட்டிபோல் குளிர்ந்திருக்கின்றது. அவருக்கும் தோள் சோர்வுற்றது. எனக்கும் உடல் வேர்த்து அயர்வுற்றது. நீரே வந்து பாரும்'' என்றாள் அம்மட மங்கை.

இதனைக் கேட்ட தருமர், அர்ச்சுனன், நகுலன், சகாதேவன் மற்றைய முனிவர்கள் வியப்புற்றார்கள். எல்லோரும் எழுந்து, வெந்நீர் அடுப்பினிடம் சென்றார்கள்.

வாசுதேவன் தண்ணீரில் கைவைத்துப் பார்த்தார். அது சந்தனம்போல் குளிர்ந்திருந்தது. அடுப்பின் அனல் அருகில் சென்றவரைக் கொளுத்தியது.

''பீமா! இங்கே வா! இந்தத் தண்ணீரில் ஏதோ ஒரு அதிசயம் இருக்கின்றது. எடுத்துக் கீழே விடு, ஆராய்வோம்'' என்று அருளிச் செய்தார்.

பீமன் அண்டாவை இறக்கி மெல்லச் சாய்க்கலுற்றான்.

அந்நீரில் ஒரு சிறு தவளை; அண்டாவை சுனையில் அழுத்தி நீர் முகந்தபோது, அதில் அது சேர்ந்து வந்தது. தீ மூட்டியவுடன் அத்தவளை அஞ்சியது. ''கண்ணா! மணிவண்ணா! சூடேறி நீர் கொதிக்கு

மாஞல் நான் வெந்துமாண்டுபோவேனே! கிருஷ்ணு! கிருஷ்ணு! உன் அடைக்கலம். இச்சிறு உயிரைக் காத்தல் நின்கடன்; கிருஷ்ணு! கிருஷ்ணு!''

தவளை இப்படி எம்பெருமானைத் துதிசெய்து கொண்டிருந்தது.

இதனைக் கண்டும் கேட்டும் நின்றவர்கள், 'ஆ! ஆ! இத்தவளையின் பக்தியினுல் அதன் கண்களில் இருந்து வரும் கண்ணீர்த் துளியன்றோ நெருப்பை வென்றது'' என்று கருதி, அதன் அன்பின் பெருக்கைப் பாராட்டினுர்கள்.

"தவளையின் அன்பே அன்பு இத்தகைய பக்திக்கு என்பக்தி ஈடாகாது!'' என்று திரௌபதி நாணினுள்.

"தவளையின் தகைமைக்கு என் தோள்வலி தோற்றது'' என்று பீமன் தருக்கடங்கினுன்.

தாமோதரஞர் அத்தவளைக்குத் தண்ணருள் புரிந்தருளினுர்.

# இளைஞருக்கு ஓர் இன்னுரை

வாழ்வு இனிமையாக அமைதல் வேண்டும். உலகிலே அநேகருடைய வாழ்வு துன்பகரமாக அமைந்திருக்கப் பார்க்கின்றோம்.

"வாழ்வில்லாச் சங்கடத்தில் சாதலே நன்று"

என்று ஔவையார் அருளிச் செய்துள்ளார். வாழ்வை இனிமையாகச் செய்து கொள்வது அறிவுடைமை.

ஒரு மாளிகைக்குக் கடைகால் மிக முக்கியமானது. கடைகால் ஆடினால் மாளிகையிடிந்து விடும். அதுபோல் மனித வாழ்வுக்கு இளமைப் பருவம் கடைகாலாகத் திகழ்வது. இளமையில் பழகும் பழக்கம் இறுதி வரை நிற்கும். "தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்" என்பது பழமொழி.

இளமையில் சில பிள்ளைகள் வேண்டாத செலவுகள் செய்யப் பழகிவிடுகின்றார்கள். தாறுமாறான செலவுகள் புரிகின்றார்கள். தந்தையாருடைய உழைப்பினால் வரும் ஊதியத்தை விருப்பம் போல் வாழ்வுக்கு அவசியமல்லாத பண்டங்களை வாங்கி ஆடம்பரமாக வாழ்ந்து பழகிவிடுகின்றார்கள்.

அப்பழக்கம் அவர்களைக் கடைசிவரை நன்ருகப் பிடித்துக்கொண்டு துன்பத்தைத் தருகின்றது.

பசி யெடுத்தால் உண்ணுதல் வேண்டும். மானங்காக்க உடுக்க வேண்டும். இளைஞர்கள் ஆடம்பரமான உடைகளை உடுப்பது நன்றன்று.

ஒருவன் திருமணஞ் செய்து கொள்கின்ருன். தொடக்கத்தில் அவனுடைய வருவாய் மாதம் 100 ரூபாய் என்ற அளவில் அமைந்துள்ளது. மனைவியுந் தானுமாக வாழ்கின்ற அவன் மாதம் மாதம் சிறிது மீதஞ் செய்து வைக்க வேண்டும். ஓயாது புகை பிடித்தும், அழகுப் பொருள்களை வாங்கியடுக்கியும் அதிகம் செலவழிக்கப் பழகிவிடுகின்ருன். மாதம் 100 வருவாயுள்ளவன் 125 என்று செலவழித்துக் கடன்படுகின்ருன்.

நாள் செல்லச் செல்லக் குழந்தைகள் பிறக்கும்; 4, 5 மக்கள் பிறந்து விடுமாளுல், குழந்தைகட்கு மருத்துவச் செலவு, ஆடைகள் அணிகள் வாங்க வேண்டிய செலவு, முக்கியமான விருந்தினர்ச் செலவு, நன்மை தீமைகட்குப் போய் உறவினரை விசாரிக்கும் செலவு, இப்படிப் பல செலவுகள் தட்ட முடியாமல் வரும். வாழ்வு ஒரு நதி போன்றது. நதி தொடக்கத்தில்,சிறியதாக இருக்கும்; செல்லச் செல்ல விரிந்துகொண்டே போகும். பல கிளை நதிகள் அதில் வந்து சேரும். அதுபோல் வாழ்வு ஆரம்பத்தில் மனைவி, பின் மக்கள், மனைவியின் உடன் பிறந்தார், சுட்டகர், நண்பர், மாமன், மாமி இப்படிப் பல கிளைகள் கிளைக்கும்.

இவ்வாறு குடும்பம் விரிவுபடுகின்றபோது செல வுக்குப் போதிய பணம் இன்றிப் பலர் பரதவிக் கின்ருர்கள்.

"ஆகா றளவிட்டி தாயினும் கேடில்லை
போகா றகலாக் கடை"
"பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின்"

என்கின்ருர் திருவள்ளுவர். வரவு அதிகம் வரவில்லை யென்ருலும் குற்றமில்லை. செலவினம் அதிகமாகா திருப்பின் துன்பமில்லை. மயிற்பீலி கனமில்லாதது. அவற்றை அளவுக்குமேல் வண்டியில் இட்டால் வண்டியின் அச்சு முறிந்துவிடும். ஆதலால் இளை ஞர்கள் பணத்தைச் செலவிடும்போது இது அவசி யமா என்று சிந்திக்க வேண்டும்.

குடும்பத்தில் உள்ளவர்கள் கூடுமான வரை வெந்த பண்டங்களைக் கடையில் வாங்கி உண்பது நலமன்று. தாங்களே வீட்டில் அமைத்து அருந்து தல் வேண்டும். கடையில் ஒருவன் உண்ணச் செல வழிக்கும் பொருளை, வீட்டில் பண்டம் வாங்கி ஆய்த் தம் புரிந்தால் நால்வர்கள் உண்ணலாம்; சுசியாக வும், ருசியாகவும் இருக்கும்.

அதுபோல் தலைக்கு வெறுந் தேங்காய் நெய் தடவிக்கொண்டால் போதும். வாசனை கலந்த தைலம் தேவையில்லாதது. இப்படி ஒவ்வொரு பொருளும் தேவையா? என்று சிந்தித்து வாங்க வேண்டும். அழகிய பொருள் என்று கண்டவற்றை யெல்லாம் வாங்கிக் குவிக்கக்கூடாது.

கடன்பட்டு எந்தப் பொருளையும் வாங்கக் கூடாது. அன்றி, அமைதியாகவும், எளிமையாகவும் வாழ்ந்து பழக வேண்டும். அங்ஙனம் வாழக் கற்றுக் கொண்ட இளைஞர்கள் வாழ்வு இன்பகரமாக இருக்கும். வாழ்வு தழைக்கும்.

இதனை ஒவ்வொரு இளைஞனும் சிந்தித்து வாழ்வைச் செம்மைப்படுத்திக் கொள்வார்களாக.

